வீரமாமுனிவர் அருளிய

# சதுரகராதி

(ஆய்வுப் பதிப்பு)

*பதிப்பாசிரியர்*

**டாக்டர் சூ. இன்னாசி**

முன்னாள் பேராசிரியர் - தலைவர்
கிறித்தவத் தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்



சந்தியா பதிப்பகம்
ஃப்ளாட் ஏ, நியூடெக் வைபவ்,
57 - 53ஆவது தெரு, அசோக் நகர்,
சென்னை - 600 083.
தொலைபேசி : 24896979, 55855704

சதுரகராதி (ஆய்வுப் பதிப்பு)
ஆசிரியர் : வீரமாமுனிவர்
பதிப்பாசிரியர் : டாக்டர் சு. இன்னாசி
பதிப்பு : டிசம்பர், 2005
பதிப்பாளர் : சந்தியா நடராஜன் – சந்தியா பதிப்பகம்
ஃப்ளாட் ஏ, நியூடெக் வைபவ், 57 – 53ஆவது தெரு, அசோக் நகர்,
சென்னை – 600 083. ✆ : 24896979, 55855704
அளவு : டெமி 1 × 8; பிரதிகள் : 1000
பக்கம் : XXII + 490; தாள் : 16 கி. கிராஃபிக் ஒயிட்
அட்டை வடிவமைப்பு : டிராட்ஸ்கி மருது – ஸ்டுடியோ 5
அச்சாக்கம் : சென்னை மைக்ரோ பிரிண்ட் பி. லிமிட்., சென்னை
விலை : ரூ. 390

| | | |
|---|---|---|
| Title of the book | : | **CHATHURAGARATHI** |
| Author | : | VIRAMAMUNIVAR |
| Editor | : | Dr. SU. INNASI |
| Subject | : | Lexicon |
| Edition | : | First edition under Sandhya Publications – December, 2005 |
| Size of the book | : | Demi 1 × 8 |
| No. of copies | : | 1000 |
| No. of pages | : | XXII + 490 |
| Paper used for text | : | 16 kg. Graphic white |
| Printing point | : | 11 pt. |
| Cover design | : | Trotsky Marudu - Studio 5 Ph : 23624455 |
| Printed at | : | Chennai Micro Print Pvt Ltd., Chennai |
| Published by | : | **Sandhya Publications**<br>Flat A, Neutech Vaibhav<br>57 - 53rd street, Ashok Nagar<br>Chennai - 600 083<br>Tamilnadu, South India<br>Ph : 044 - 24896979, 55855704 |
| Publisher | : | Sandhya Natarajan |
| Price | : | **Rs.** |

## முதல் கண்ணி

●

'சதுரகராதி' – வீரமாமுனிவரால் முறையான அகர வரிசையில் உருவாக்கப்பட்ட முதல் அகராதி நூல். கி.பி. 1732இல் உருவாக்கப் பட்டு, பின்னிரு நூற்றாண்டுகளில் பல பதிப்புகள் பெற்ற நூல் இது.

'பெஸ்கி அடிகளாரது சதுரகராதி' என்னும் தலைப்பில் அறிஞர் சூ. இன்னாசி தம் முனைவர் பட்ட ஆய்வை மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் மேற்கொண்டு, முதன்முதல் தமிழ் அகராதியியலில் முனைவர் பட்டம் பெற்றவர். முனைவர் சூ. இன்னாசி, அதுவரை வெளிவந்த பல பதிப்புகளையும் பார்வையிட்டு, ஆய்வு மேற்கொண்டு உண்மைப்பதிப்பு எதுவென உறுதிசெய்துள்ளார். அப்பதிப்பை, 1979இல் வீரமாமுனிவர் ஆய்வுக்கழகம் வெளியிட்டது. அதன் இரண்டாம் பதிப்பு, மாதா பதிப்பகத்தார் மூலம் 1989இல் வெளிவந்தது.

சென்ற ஆண்டு, தமிழ் அகராதி வரலாற்றில், இறுதிக் கண்ணியாக அமைந்துவிட்ட 'மதுரைத் தமிழ்ப் பேரகராதி'யை எங்கள் பதிப்பகம் வெளியிட்டது. தமிழ் ஆர்வலர்களிடையே அது நல்ல வரவேற்பைப் பெற்றது. அதன் தொடர்ச்சியாக, இந்த ஆண்டில், தமிழ் அகராதி வரலாற்றின் முதல் கண்ணியான 'சதுரகராதி'யை வெளியிடுவதில் மகிழ்ச்சியடைகிறோம்.

இப்பதிப்பை வெளியிட அனுமதி தந்த முனைவர் சூ. இன்னாசி அவர்களுக்கு எங்கள் நன்றி என்றும் உரியது.

சந்தியா நடராஜன்

சென்னை
25. 12. 2005

*1979ஆம் ஆண்டு வெளிவந்த பதிப்பில் இடம்பெற்ற பதிப்புரை*

## பதிப்புரை

(டாக்டர் சு. இன்னாசி, எம்.ஏ., பிஎச். டி.,
*தூய சவேரியார் கல்லூரி, பாளையங்கோட்டை*)

தொல்காப்பிய உரியியலில் முளைவிட்டு, நிகண்டுகளாக அரும்பி, அகராதிகளாக மலர்ந்த தமிழ் அகராதியியல் வளர்ச்சியில், பெஸ்கி என்னும் பெயரிய வீரமாமுனிவரது சதுரகராதியின் இடம் குறிப்பிடத் தகுந்தது. அகராதியின் அடிப்படைக் கூறாய அகரநிரன் முறையினை முழுமையாகப் பெற்றமைந்த முதற்றமிழ் அகராதியாந்தன்மை அதற்கே உரியது. அதன் பின்னர் அகராதி படைத்தோர் அனைவரும், மூலமாய்க் கொண்டிருக்கும் அவ்வரிய அகராதியினைப் படைத்த அடிகளாருக்கு மேனாட்டு மொழிப்பரப்பும், தமிழ்நாட்டு இலக்கியப் புலமையும் பின்புலங்களாய் அமைந்தன.

கிபி 1732இல் ஆக்கப்பட்ட அவ்வகராதியின் பல பதிப்புக்கள் சென்ற நூற்றாண்டில் வெளியாகியுள்ளன. இந்நூற்றாண்டிலும் 1928இல் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. எனினும் தற்பொழுது கிடைப்பதற்கு அரியதாயிற்று. கிடைத்திருக்கும் பதிப்புக்களும் பதிப்பித்தவர்தம் மனப்போக்கிற்கியையச் சொற்கள் சிலவற்றைக் கூட்டியும் குறைத்தும், திருத்தியும் புதுக்கியும் ஆக்கப்பட்டிருப்பன வாய், யான் அந்நூலைப்பற்றிய டாக்டர் (Ph.D.) பட்ட ஆய்வை மேற்கொண்டகாலை அறியலுற்றேன். திருத்தமானதும் உண்மை யானதுமான பதிப்பொன்று வெளிக்கொணரப் பெற வேண்டும் என்ற கருத்து என் உள்ளத்தே கருக்கொண்டது. இப்பதிப்பு அதன் விளைவே எனலாம்.

இதுகாறும் வெளிவந்துள்ள சதுரகராதிப் பதிப்புக்களின் எண்ணிக்கை குறித்து அறிஞர்கள் ஆங்காங்கே நான்கென்றும், ஒன்பதென்றும் கூறிச்சென்றுள்ளனர். ஆய்விற்காகப் பல்லிடங்

களுக்குச் சென்று பார்வையிட்டபொழுது பத்துப் பதிப்புக்கள் வெளிவந்திருத்தல் வேண்டும் எனத் தெளிந்தேன். அவற்றுள் ஆறு பதிப்பினைக் கண்ணுறும் பேற்றினைப் பெற்றேன்.

பெயர், பொருள், தொகை, தொடை எனும் நான்முகப் பெயர் கொண்ட சதுரகராதியின் பொருட் பகுதி மட்டும் கி.பி. 1819இல் அச்சிடப்பட்டுள்ளது. எனினும் அதன் பிற பகுதிகளும் அச்சிடப்பட்டு ஒன்றாக இணைக்கப் பெற்ற முழுமையான முதற்பதிப்பு 1824இல்தான் வெளி வந்துள்ளது. பிற பதிப்புக்கள் முறையே 1835, 1845, 1848, 1860, 1872, 1875 (பாண்டிச்சேரி), 1875 (சென்னை), 1876, 1928 ஆகிய ஆண்டுகளில் வெளி வந்துள்ளன.

இப்பதிப்புக்களில் கி.பி. 1824இல் வெளிவந்த முதற்பதிப்பே அடிகளாரால் ஆக்கப்பட்ட சதுரகராதிக்கு இயைந்த முதற் பதிப்பாகக் கொள்ளத்தகும் எனக் கருதி என் ஆய்விற்கு மூலமாகவும் கொண்டேன். அப்பதிப்பினை அச்சிற் கொணரும் முயற்சியில் ஈடுபட்டேன். அப்பதிப்பின் ஒருபடி அருள் நிறை ஞானப் பிரகாசம், சே ச., அடிகள் வழியாகக் கிடைக்கப் பெற்றேன். அது நூற்றைம்பது ஆண்டுகட்குமேல் முற்பட்டதாதலின், தொடும் பொழுதே இற்றுவிடும் நிலையில் இருந்தது. பல பக்கங்கள் இடையிடையே பூச்சிகளால் அரிக்கப் பட்டிருந்தன. அதிலடங்கிய சொற்களின் சில வெழுத்துக்களைக் கண்டுபிடிப்பதற்கும் ஒப்புநோக்குதற்கும் இதுவரை வெளி வந்துள்ளவற்றுள், 1835, 1860 ஆகிய ஆண்டுகளில் வெளிவந்தவை ஆங்காங்கே பயன்பட்டனவாயினும் நிகண்டுகளும், மதுரையில் 1929இல் வெளிவந்த பதிப்பும், தமிழ்ப் பேரகராதிகளும் பேரளவில் துணை நின்றன.

அம்முதற்பதிப்பின் அச்செழுத்து வடிவங்கள், தற்கால வடிவங்களினின்றும் சிற்சில வேறுபாடுகளைக் கொண்டுள்ளன. அவ்வெழுத்துக்களைக் கொண்டமைந்த சொற்களைத் தெளிவுற வரையறுத்தறிய பெருமுயற்சி மேற்கொள்ள வேண்டியதாயிற்று. எதிர்ப்பக்கமாக உள்ள நிழற்படம் அப்பதிப்பின் பெயரகராதி தொடங்கும் முதற் பக்கமாகும். அதில் ⊃, △, □ என்னுங் குறியீடுகள் ஒவ்வொன்றும் இரண்டு எழுத்துக்களைச் சுற்றிக் காட்டப் பட்டிருக்கின்றன. எடுத்துக்காட்டாக 'அ' என்பதற்கான பொருள்களுள் ஒன்றுபன்மையீறு; அதற்கு எடுத்துக்காட்டாக



◌ னகர உயிர்மெய் மேற்கோடிடப்பெற்றும் இடப்பெறாமலும் உளது.

^ மகர மெய் மேற்புள்ளியிடப்பெற்றும் இடப்பெறாமலும் உளது.

⊐ சகர மெய் மேற்புள்ளியிடப்பெற்றும் இடப்பெறாமலும் உளது.

└┘ ஊர் என்னும் சொல் உளர் என்பதுபோற்றோன்றுகிறது.

'வாழ்ந்தன' எனத் தரப்படும் சொல்லின் இறுதியில் உள்ள னகர உயிர்மெய் மீதும், அகம் என்னும் சொற்குரிய பொருளான 'மனம்' என்னும் சொல்லின் இடையில் உள்ள னகர உயிர்மெய் மீதும், ◌ என்னும் குறியீடு சுற்றிக் காட்டப்பட்டிருக்கிறது. அக்குறியீடு கொண்ட இரண்டும் உயிர்மெய் னகரங்களாகும். இருந்தும் ஒன்றன்மேல் மேற் கோடிடப் பெற்றிருக்க, மற்றொன்றில் இடம்பெறவில்லை. அவ்வாறே மகரம், சகரம் ஆகிய மெய்களும் இருவேறு வகைகளில் மயக்கந்தருவனவாய் அமைந்துள்ளமையை Δ, □ ஆகிய குறியீடுகளுக்குள் அமைந்துள்ள எழுந்து வடிவங் களைக்கொண்டு தெளியலாம். இவ்வாறே அனைத்து மெய்களும், புள்ளி பெற்றும் புள்ளி பெறாமலும், அனைத்து உயிர் மெய்களும் மேற்கோடு பெற்றும், மேற்கோடு பெறாமலும் காணப்படுகின்றன. தற்காலத்தைப்போல ஊகார வடிவம் உகரத்தின்மேல் ளகரக் குறியிட்டுக் காணப்பெறாமல், உகரத்தையடுத்து ளகரக் குறியிடப் பெற்றுக் காணக்கிடக்கிறது. எனவே 'ஊ' என்னும் எழுத்தை 'உள' என்னுஞ் சொல்போல் பொருள்கொள்ள இடந்தருகிறது. இவ்வாறே சுகரமும் கரமும், சுகரமும் நகரமும் ஒன்று என மயங்குமாறு வடிவங்கள் அமைந்து கிடக்கின்றன. எகர ஏகாரக் குறியீடுகள் (ெ, ே), ஒகர ஒகாரங்கள் (ஒ, ஓ), னகரவடிவு மெய்யோடிணைந்த ஐகாரக் குறியீடுகள் (ன, னா) எளிதில் வேறுபாடு காணமுடியாத அளவிற்கு ஒன்றற்கொன்று மயக்கந் தருவனவாய் உள்ளன. இவற்றால் சொற்களின் இயல்பினை உள்ளவாறு அறிதற்குப் பெரும் இடர்ப்பாடுகளை எதிர்கொள்ள வேண்டியதாயிற்று.

சான்றாகச் சிலவற்றைக் காணலாம். பொருளகராதியில் குதிரைக் கல்லணைக்குரிய பொருள்களுள் 'மாககருவி' எனப் போடப்பட்டுள்ளது. இதனை 'மாககருவி' எனக் கொள்வதா? இரண்டாம் எழுத்தாக உள்ள முதல் சுகரத்தை மெய்யாகக் கொண்டு மாக்கருவி என்பதா? என்றெல்லாம் சிந்திக்க இடமிருப்பினும், மாகரத்தில் உள்ள ஆகாரக் குறியீட்டை ரகரமாகவும் முதற் சுகரத்தை மெய்யாகவும்கொண்டு மரக்கருவி என்பதே பொருந்தும் எனக் கொள்ளப்பட்டது. தொடை யகராதியில், பின் என்னும் இடைச்சொல்லுக்கு எடுத்துக்காட்டுத்

தரும்பொழுது ‘காதலிபின் சென்றதமம்’ என்னுந்தொடரில் சென்றதமம் என இறுதி மகரத்தை மெய்யாகப் பின்னோர் கருதி யிருக்கின்றனர். ஈற்றயல் மகரமே புள்ளி பெற்றதாக எண்ணி சென்றதம்ம எனக் கொள்ளவேண்டும்.

மூலத்தைப் பதிப்பித்தவர்களே கூட ஏடுகளில் உள்ள வடிவங் களைக் கண்டு மயங்கித் தெளியாத இடங்களும் உண்டு எனத் தெரிகிறது. மூலப்பதிப்பில் பொருளகராதியில் மன்மதன்கணை வகை என்னும் சொல்லில் பேசா தோழியர் நினைவு சுப்பிரயோகம் எனப்போடப்பட்டிருக்கிறது. ஏடுகளைப் பார்த்து முதன் முதலில் அச்சிற்குக் கொணர்ந்தோர் பேசாதொழியா என்று தொடரில் உள்ள ‘தொ’ என்னும் எழுத்தின் ஒகரத்தை ஓகாரமாகவும் இறுதியில் உள்ள ‘யா’ என்னும் எழுத்தின் ஆகார வடிவை ரகர வடிவாகவும் கொண்ட மயக்கமே அதற்குக் காரணம் போலும். ‘பேசாதொழியா நினைவு சுப்பிரயோகம்’ எனப் பேரகராதி போட்டிருப்பதே சரியென ஏற்றுக்கொள்ளப்பட்டிருக் கிறது. பொருளகராதியில் கார்த்தல் என்பதற்கான பொருளாகக் காயம் - காரம் எனக் கொடுக்கப்பட்டுள்ளது. ஏட்டுச்சுவடியில் ‘காயமகாம’ என மெய்யெழுத்துக்கள் புள்ளியிடப் பெறாமலும் ஆகாரக் குறியீட்டிற்கும் ரகரத்திற்கும் வேறுபாடு தெரியாமலும் இருந்திருக்கவேண்டும். முதலில் பதிப்பித்தோர், அச்சொல்லில் உள்ள இரு மகரங்களையும் புள்ளி பெற்றனவாகக் கொண்டு காயம் காரம் என அச்சிட்டு விட்டனர். அதன் உண்மைப் பொருள் அப்படியன்று. யகரமும் இறுதி மகரமுமே புள்ளி பெற்றனவாகக் கொண்டு காய்மகாரம் என்று கொள்வதே ஏற்புடைத்தாகும். இவ்வாறு மயக்கத்திற்கு இடமான வடிவமைப்புக்களைக் கொண்ட சொற்கள் நூற்றுக்கணக்கில் காணக் கிடக்கின்றன.

சிலவிடங்களில் வடிவக் குழப்பத்தோடு புணர்ச்சிக் குழப்பங் களும் சேர்ந்துகொண்டன. பொருளகராதியில் மணிப்பொது என்னுஞ்சொல்லுக்கான பொருளில் ‘அனறியுமகனமணி - அரதனம்’ எனப் போடப்பட்டுள்ளது. 1928ஆம் ஆண்டுப்பதிப்பு அன்றியும் மகன் மணி என அத்தொடரைப் பிரித்திருக்கிறது. பேரகராதி அன்றியும் அகன்மணி எனப் போட்டிருக்கிறது. அன்றியும் கனமணி எனக் கொள்ளவும் இடமுண்டு. ஆயுங்கால்

அகன்மணி எனக்கொள்வதே பொருந்தும். ஏனெனில் பெயரகராதியில் அசதனம் என்பதற்கு அகன்மணி என்றே போடப்பட்டுள்ளது. இவ்வாறு வடிவம், புணர்ச்சி ஆகியவற்றால் ஏற்பட்ட மயக்கங்களைத் தெளியத் தக்க முயற்சி மேற்கொள்ளப் பட்டது.

பெயர், பொருள், தொகை, தொடை ஆகிய பகுதிகள் ஒவ்வொன்றின் இறுதியிலும் பிற்சேர்க்கைச் சொற்கள், பொருள்கள், நிரன் முறைப் பிறழ்வுகள், தள்ளல், பிழைத் திருத்தங்கள் ஆகியவை அடங்கியிருக்கின்றன. ஆயினும் அவற்றிலேயே சில இடங்களில் பிழைகளைக் கண்ணுற நேரிட்டது. பின்னால் பதிப்பித்தோர் இவற்றைக் கண்டுணர்ந்த தாக அறிய வந்திலது. பொருளகராதியில் உள்ள ஊர்க்குருவி என்னும் சொல்லுக்கான பொருள்களுள் பிற்சேர்க்கைப் பகுதியில் சடகம் என்ற பொருளும் தரப்பட்டுள்ளது. ஆயின் அப்பொருள் சொல்லமைந்த பகுதியிலேயே உள்ளது. எனவே அது சகடமாக இருத்தல்வேண்டும். ககரமும் டகரமும் மாறிச் சடகமாக அச்சில் அமைந்து விட்டது. அதனைச் சகடமாகக் கொண்டு சேர்க்கப்பட்டுள்ளது. அவ்வாறே பிற்சேர்க்கைப் பகுதியில் 'குலமிலானில் கீனன்' எனப் போடப்பட்டுள்ளது. இதன் பொருள் ஏற்கனவே குலமிலான் என்னும் சொற்குக் கூறப் பட்டுள்ளவற்றோடு கீனன் என்பதனையும் சேர்த்துக் கொள்க என்பதாம். ஆனால் பொருளகராதிப் பகுதியிலோ குலமிலான் என்னும் சொல்லே காணப்பட்டிலது. பிற்காலப் பதிப்பாளர் இச்சொல்லை விட்டு விட்டனர். குலமுளோன் என்னும் சொற்குரியதாக இருக்குமோ எனில் பொருள் பொருந்தவில்லை. ஏனெனில் பெயரகராதிப் பகுதியில் குலமிலான் - கீனன் என்றே போடப்பட்டுள்ளது. எனவே பிற்சேர்க்கைப் பகுதியிலேயே பிழை நேர்ந்திருக்க வேண்டும். 'குலமிலான் - கீனன்' என்பதற்குப் பதிலாக குலமிலானில் கீனன் எனப் பதிப்பித்து விட்டனர். 'குலமிலான் - கீனன்' எனக் கொள்ளின், 'விடுபட்டுப்போன சொல்லும் பொருளும் பொருட்பகுதியில் சேர்த்துக் கொள்க' என்னும் பொருள்தரும். பெயரகராதிப் பிற்சேர்க்கையில் 'சாவில் - ஓரெழுத்து' என்று உள்ளது. சா என்பதற்கான பொருள்களுள் ஓரெழுத்து என்பதனைச் சேர்க்க என்பது பொருள். ஆயின் பெயரகராதியில் 'சா' என்னும் சொல்லே இல்லை. எனவே,

சா-ஓரெழுத்து என இருப்பின் சொல்லும் பொருளும் சேர்க்க வேண்டும் எனப் பொருள் தந்து பொருந்தி நிற்கும், சா-ஓரெழுத்து என்பதற்குப்பதில் சாவில் ஓரெழுத்து எனக் கூறிவிட்டனர். அது சரிவரத் திருத்தம் பெற்றிருக்கிறது. தொடையகராதிப் பகுதியில் தக்கணம் என்பதற்கு வலப்பசகம் எனப் போடப்பட்டுள்ளது. அது வலப்பக்கமேயாம். இவ்வாறு பிழைகள் கண்டு செப்பம் செய்யப்பட்டவை பலப்பல.

ஆசிரியராலன்றிப் பின்னர்ப் பதிப்பித்தோரால் ஏற்பட்ட பிழைகள் எனத் தெளிவு பெற்றவை மட்டுமே திருத்தம் செய்யப் பட்டிருக்கின்றன. அவை தவிர ஆசிரியர் கூறியிருக்கும் சொற்கள், பொருள்களை எவ்வித மாற்றமும் செய்யவில்லை. சான்றாகக் கோவிலின் பெயர் என்பதனைக் கோயிலின் பெயர் எனத் தம் கால வழக்கிற்கேற்ப மாற்ற அகர நிரன் முறையிலும் மகரத்தை யடுத்துச் சிலர் நிறுத்தியுள்ளனர். அவ்வாறே மதிளரன் என்பதனையும் மதிலரண் என மாற்றி அமைத்துள்ளனர். இங்கு அவ்வாறு செய்யப்பட்டில. ஆசிரியர் தாமறிந்த வடிவங்களைக் கையாளுகிறார் எனக்கருதி உரியவாறே உரிய நிரலில் அமைக்கப் பட்டிருக்கின்றன.

சில சொற்களின் இருவேறு வடிவங்களை ஆசிரியர் உணர்ந்து இரண்டு வடிவங்களையும் ஆங்காங்கே கையாளுகிறார், கர்க்கடகவிராசி கற்கடகவிராசி, பழைமை பழமை போன்றவை அத்தகையன. எவ்வெவ்விடங்களில் எவ்வெவ்வடிவங்களைக் கையாளுகிறாரோ அவ்வவ்வடிவங்களே கையாளப்பட்டுள்ளன.

தொடையகராதிப் பகுதியில் எதுகைச் சொற்களுக்கே சிறப்புத் தந்துள்ளார். பொருள் அரிதில்லையென்றாலும் எதுகைச் சொற்களைக் காட்டுவான்வேண்டிச் சொல்லும் அதன் பொருளும் ஒன்றாகவே குடுக்கை - குடுக்கை, துடுப்பு - துடுப்பு என்பனபோன்று காட்டியுள்ளனர். பின்னர் பதிப்பித்தோரிற் சிலர் இத்தகைய சொற்களை விட்டுவிடுகின்றனர். எடுத்துக் காட்டாக ஆசிரியர் மணை-மணை, குதிரை-குதிரை எனச் சொல்லும் பொருளும் கூற, 1928ஆம் ஆண்டுப் பதிப்பு, கணை - பீடம், குதிரை - புரவி என மாற்றிப் பொருள் தருகிறது. இங்கு அவ்வாறின்றி ஆசிரியர் தம் சொற்கள் பொருள்களே ஆளப்பட்டுள்ளன.

சில சொற்களுக்கான இலக்கணக் குறிப்புக்களையும் விட்டுவிடுகின்றனர். சான்றாகக் கொடை, தொடை, நடை, மடை, விடை என்பனவற்றிற்கு வினைமுற்று என்னும் இலக்கணக் குறிப்புப் பொருள் பின்னோர் சிலரால் விடப்பட்டுள்ளது. தற்காலத்தில் அவை வினைமுற்றுக்களாக வழக்கில் இல்லை என்பது அவர்தம் கருத்துப் போலும், அடை, முடை என்பன போல் ஐகார ஈற்றுடைய வினை முற்றுக்களாகக் கொள்ள இடனுண்டு என்னுங் கருத்தில் ஆசிரியர் காட்டியிருத்தல்கூடும். அவ்வாறே சொல்லின் ஈற்று வடிவத்திற்கு இசையப் பொருளின் ஈற்றையும் திரித்து மாற்றியிருக்கின்றனர். சான்றாக, தெகுளம் - பெருகுதல், உடைதல் - தளர்வு, கட்டிடம் - புகழ்தல் என்பன போன்று அடிகளார் கூற, 1928ஆம் ஆண்டுப் பதிப்பு தெகுளம் - பெருக்கம், உடைதல் - தளர்தல், கட்டிடம் - புகழ்ச்சி என்று கூறுகிறது. இவை பெரும்பான்மையும் தொடையகராதிப் பகுதியிற்றான் அமைந்துள்ளன. சொல் வடிவத்திற்கு எதுகை நோக்கில் முதன்மை கொடுக்கும் அளவிற்குப் பொருள் வடிவத்தில் கருத்துச் செலுத்தாதது அதற்குக் காரணமாகலாம். மேலும் அவர் காலத்தில் அவ்வகைச் சொல் வடிவங்கள் இயல்பாக வழங்கியிருத்தல் கூடும். அடிகளார்தம் உண்மைப் பதிப்பைக் கொண்டுவர வேண்டும் என்பதே நோக்கமாதலின் முதற்பதிப்பில் உள்ளவாறே ஆளப்பட்டுள்ளன.

முதற்பதிப்பில் அக்காலத் தமிழ் எண்கள் க(1), உ(2), ரு(5), அ(8) போன்றன பயன்படுத்தப்பட்டுள்ளன. இவற்றைச் சரிவரத் தெளியாது ஒருவர் செய்த பிழையினையே பின்னோர் அனைவரும் பின்பற்றி வந்த இடங்களும் உண்டு. படைத் தொகைக்குறிப்பில் குதிரை, களிறு இவற்றின் எண்ணிக்கை 20870 என்றே குறித்துவிட்டனர். ஏடு பார்த்து எழுதியோரால் ஏற்பட்ட குறையாயிருக்கலாம் கணக்குப்படி அவற்றின் எண்ணிக்கை 21870. தற்காலத்தில் அவ்வெண் வடிவங்கள் அருகிவிட்டனவாதலின், வழக்கில் உள்ள எண்களே எண்டொகைக் குறிப்புக்கள் வருமிடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கையெழுத்துப் படி ஒன்றின் முதற்பக்கத்தில் நூற்குறிப்பு பிரெஞ்சு மொழியிலும், அடுத்துள்ள பக்கங்களில் ஆசிரியர் முன்னுரை இலத்தீன் மொழியிலும் அமைந்திருந்ததாக

ஜூலியன்வின்சனால் சுட்டப்படுபவை தமிழாக்கப்பட்டு, என் டாக்டர் பட்ட ஆய்வுக் குறிப்பேட்டில் காட்டப்பட்டுள்ளன. அவை முதன் முதலாக அச்சில் இப்பதிப்பில் இடம் பெறுவது குறிப்பிடத்தகுந்தது.

இப்பதிப்பு வெளிவருவதற்கு முழு முதற்காரணர் கெழுதகை நண்பர் *ஜார்ஜ் ஜெகதீசன்* அவர்களாவார். அவர்தம் தூண்டுதல் இப்பணிக்கு அடிப்படையிட்டது, அதற்குத் தக்க ஊக்கமும் ஆக்கமும், முன்னுரை முதலியவற்றிற்குத் தமிழாக்கமும் தந்தருளி யவர் எம் கல்லூரி முதுகலைத் தமிழ்த்துறைத் தலைவரும், வீரமாமுனிவர் ஆய்வுக் கழக நிறுவுநரும், வீரமாமுனிவர் மூன்றாம் நூற்றாண்டு விழாக் குழுவின் தலைவருமாகிய அருள் நிறை *வி.மி. ஞானப்பிரகாசம்,* சே.ச. அடிகளார், அச்சுரு அழகுபெற ஒல்லும் வகையெல்லாம் உதவியவர் அருள் நிறை *அந்தோனி T. இரமாயில்,* தி.இ.ச. அவர்கள் அனைவருக்கும் என் நன்றி என்றும் உரியது.

பாளையங்கோட்டை,
19. 1. 1979

அன்பன்,
சூ. இன்னாசி.

*1824ஆம் ஆண்டின் முதற்பதிப்பில் இடம்பெற்ற முன்னுரை*

## முன்னுரை

*மணிநெடுங் கடல்சூ ழணிநிலந் தனிலே*
*ஆதிநூ னிறையு நீதிநூன் முறையுந்*
*தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று*
*நீங்காது தழீஇயோ ஓங்கருள் கெழீஇத்*
*தோற்றுமா யிரத்தெழு நூற்றறு பதுமுத*
*லீண்டறு பாணோ ராண்டள வாகப்*
*பன்முடி யிணங்கமுப் பொன்முடி புனைந்து*
*திக்கனைத் துத்தனிச் சக்கர நடாத்தும்*

தேர்ச்சி சேர் மூன்றாம் சார்ச்சி வாழ்ஞான்றிற், கலியோட்டிய நிதி யெலியாட்டதிபதி, ஈரந்தளிர்த்ததிகாரஞ் செலுத்தும், கிறிஸ்து 1819ஆம் வருஷத்துக்குச் செல்லாநின்ற, சாலீவாகன சக வருஷம் 1741ல் நிகழும் பிரமாதி வருடத்திற் சென்னபட்டணங் கல்விச் சங்கத்துத் தலைவராகிய ம-ரா-ரா-ஸ்ரீ பிராஞ்சீஸ் உவைத்து எல்லீச துரையவர்க ளனுமதிப்ப முன்னிருந்த, தமிழ்ச்சங்கத் தலைமைப் புலமைத் திருச்சிற்றம்பலையரால், இத்தேயத்துப் பலவகை மொழிகளினுந் தமிழ் நன்குணர்ந்த வீரமாமுனிவ ரென்பவர், இத்தமிழ் நாட்டிற்றொன்று தொட்டு வழங்கும் பன்னிரு தொகுதித்தாய சேந்தன்றிவாகர முதலிய நிகண்டுகளும் பத்துத் தொகுதியுட் கூறிய பொருள்களைப் பொருளகராதி யாகவும், பதினொன்றாந் தொகுதியிலெதுகைத் தொடையாகக் கூறிய பெயர்களைத் தொடையகராதியாகவும் பெயரகராதி யாகவும், பன்னிரண்டாந்தொகுதியிற் கூறிய தொகைப் பொருள் களைத் தொகையகராதியாகவும் வகுத்து, இரேவணாரார்த்திய ரொரு பொருட்பெயரிரு பொருட் பெயர் முதலாக முறை தெரிந்திங்ஙன நூற்பாவாற் செய்த பெயரகராதி போலாதியா வர்க்கும் விளங்கச் சொற்சொல்லாகத் தமிழ்ப் பெருங் கடற்கோர் மரக்கலனாகத் தந்த சதுரகராதியிற் பொருளகராதி

பரிசோதிக்கப்பட்டுக் கல்விச் சங்கத்துத் துரையவர்களான் முன்னர் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது. பின்னர் தோலாவிறலுள கோலானரசு செயமேலானிசை திகழ் நாலான் சார்ச்சி நாளில், நன்றா மனுமுறை குன்றாவகையிவண் மன்ரோவதிபதி நின்றாளுகையினில், கிரிஸ்து. 1824ஆம் வருஷத்துச் செல்லா நின்ற சக வருஷம் 1746ல் நிகழா நின்ற தாரண வருடத்தின் மேற்சொல்லிய சங்கத்துத் தலைவராகிய, ம-ரா-ரா-ஸ்ரீ. ரிச்சார்டு கிளார்க்குத் துரையவர்களனுமதிப்படி, தமிழ்ச் சங்கத் தலைமைப் புலமை நடாத்துந் தமிழ்ப் பண்டிதர்களாகிய, தாண்டவராய முதலியார், இராமச்சந்திர கவிராயர் இவர்களால், சதுரகராதி யில், மற்றைப் பெயர், தொகை, தொடை என்னுமிம் மூன்றகராதி களும் பரிசோதிக்கப் பட்டுக் கல்விச் சங்கத்துத் துரைகளான் மேற்சொல்லிய சென்னைச் சங்கத்திலச்சிற் பதிப்பிக்கப்பட்டன.

## தலைப்புப் பக்கம்

தமிழ் மொழியின் கருவூலம்
தமிழர்களின் நூல்களை முன்னிலும் முழுமையாக,
தெளிவாக அறிந்துகொள்ள
இயேசு சபையைச் சேர்ந்த
மறைப்பணியாளர் பயன்படுத்த,
இதைத் தொகுத்தவர், நான்கு பகுதியாக வகுத்தவர்,
மதுரை மாநிலத்தில்
மறைப்பணி புரியும் இயேசு சபையைச் சேர்ந்த
கொன்ஸ்டான்சியுஸ் ஜோசப் பெஸ்கி

●

## முன்னுரை

ஒவ்வோர் அறிவுத் துறைக்கும் முதன்மையானது, முக்கியமானது, அந்தக் கலையின் விதிகளை ஒழுங்காக அமைத்துக் கொடுப்பதாகும். எனினும், அத்துறைக்குரிய மூலப் பொருட்களையும், விதிகளைச் செயல்படுத்த உதவிடும் கருவிகளையும் குறித்தாலொழிய, விதிகளைக் கொடுப்பதில் பயனில்லை. ஓவியருக்கு வண்ணங்களைப் போல், வீரர்க்குப் படைக் கருவிகள்போல், கட்டிடம் கட்டுவோர்க்குச் சுண்ணாம்பு, கல் இவைபோன்ற பல பொருட்கள்போல், அயன் மொழி கற்போர்க்குச் சொற்கள் உள்ளன என்பது தெளிவு. நான் கொடுந்தமிழ் செந்தமிழ் ஆகியவற்றின் சிறப்புப் பண்புகள்பற்றி விரிவாக எழுதியிருப்பினும், மிகுந்த அளவுச் சொற்களைக்கொண்ட அகராதிகளைப் படைத்துக் கொடுக்கும்வரை, ஒன்றும் செய்துவிட்டதாக

நம்பிக்கை கொள்ளேன். இதை மனதில்கொண்டே இருவகை மொழிகளிலும் இலக்கணமும் அகராதியும் தருவதாக உறுதி தந்திருந்தேன். தாமதமாகிவிட்டாலும், இப்பொழுது என் உறுதி மொழியை நிறைவேற்ற ஆர்வத்துடன் விரைகிறேன்.

பொதுத் தமிழ் அகராதியைத்தவிர எந்த வார்த்தையையும் இலத்தீனில், பிரஞ்சில், போத்துகீசியத்தில் விளக்கும் பொதுத் தமிழ் அகராதியைத் தவிர - இப்போது வேறொரு அகராதி கொடுக்கிறேன். இதில் முதலாவதாகச் செந்தமிழ் எழுதுவோர் பெரும்பாலும் பயன்படுத்தும் எல்லாச் சொற்களின் பொருள் மயக்கமும் பல் பொருளும் விளக்கமாகும். அடுத்து, ஒரே பொருளுடையப் பல சொற்களையும் குறிப்பாகப் பெயர்ச் சொற்களையும், ஒவ்வொன்றின் சிறு விளக்கத்தையும், அதே ஆசிரியர்கள் பயன்படுத்தும் முறையில், விளக்குகிறேன். மேலும், இந்த மொழியில் பல (செய்திகள்) தொகையாகக் கூறப்படு கின்றன: எ-கா. இருநலம், மூவுலகம், நாவரண், ஐம்புலன்கள், அறுசுவை, எழுகடல், எண்மலை என்பனபோன்ற மிகப் பல ஆங்காங்கே ஆசிரியர்களின் நூல்களில் காணக்கிடக்கின்றன. இவற்றின் விளக்கத்தை மூன்றாவது பகுதியில் காணலாம். இறுதியாகக் கவிதைக்குப் பயன்படும் வார்த்தைகளை - முதல் எழுத்தால் மட்டும் வேறுபட்டு, அசையால் ஒலியால் ஒத்திருக்கும் வார்த்தைகளை ஒன்றாகச் சேர்த்துத் தருகின்றேன்.

எனவே, இத்தொகுப்பை மொழிக் களஞ்சியம் என்று அழைப்பதில் மகிழ்ச்சியடைகிறேன். இச்சொற்கள் எல்லாம் தமிழ் நெடுங்கணக்கு முறைப்படி அமைக்கப்பட்டிருப்பதால், நூல் நான்கு பகுதியில் அடங்கியிருப்பதால் இந்நூலுக்குத் தமிழில் சதுரகராதி என்று பெயரிட்டிருக்கிறேன். இந்நாட்டு மக்களுக்குப் பயன்படும் வகையில் தமிழ்ச் சொற்களைத் தமிழிலேயே விளக்கியுள்ளேன். விளக்கத்தில், பேச்சுமொழியின் பொதுவான சொற்களையே, இயன்றவரை, பயன்படுத்தி யுள்ளேன். ஆனால், ஒரே பொருளுடைய பல சொற்களைக் கொடுக்கும்போதெல்லாம், சொற்களின் சிறு விளக்கம் கொடுக்கும்போதெல்லாம், வழக்கத்தில் இருக்கும் சொற்களையே எப்பொழுதும் பயன்படுத்தியுள்ளேன். இது ஐரோப்பியர் களுக்கும் பயனுள்ளதாகும். ஏனெனில், அவர்களில் யாரும்

பேச்சுத் தமிழை அறியாமல், செந்தமிழுக்குத் திடீரெனக் குதித்து ஓடத் துணியமாட்டார்கள் என்று எண்ணுகிறேன்.

ஒரெழுத்து வடிவே இரண்டெழுத்தைச் சுட்டும் மயக்கம் உண்டாகுமாயின், அதனை நீக்க, கொடுந்தமிழ் இலக்கணத்தில் கூறியுள்ள விதியின்படி, குறில்களையோ மெய்களையோ குறிக்கும் அடையாளங்களைப் பயன்படுத்தியுள்ளேன். மேலும், எ, ஒ, நெடில்கள், இன்னும் தெளிவடைய, ெ, கொம்பு என்று கூறப்படும் அடையாளத்தைச் சேர்த்திருக்கிறேன்; மாற்றமில்லாத உருவம் குறிலைக் காட்டும்; முடிவில் வளைக்கப்பெற்றால், நெடிலைக் காட்டும்: எ.கா, செடி-சேடி கொடி-கோடி போன்றன.

செந்தமிழ் இறந்துவிட்டதாகக் கூறப்படுகிறது. சொற்களின் வலிமையும் ஆற்றலும், இன்றைய மனிதர்களின் பேச்சிலிருந்தல்ல, ஆனால் நடைமுறைப் பேச்சிலும் உறுதியான பழமைகொண்ட நூல்களிலிருந்தே தோண்டி எடுக்கப்பட வேண்டியுளது. எனவே, இக்கால மக்களின் பேச்சு மொழியை நம்பலாகாது என்று எண்ணினேன். மாறாக, முயன்ற அளவு முன்னிலும் மிகுந்த முயற்சி செய்து, பழைய நூல்களை -- திவாகரம், நிகண்டு, பிங்கலந்தை; கையாகாடிபோன்ற பழைய நூல்களை - முற்றிலும் படித்தேன். இவை எல்லாம் ஒரே பொருள்கொண்ட பல சொற் களைத் தருவனவே தவிர, அகராதிகள் அல்ல. மேலும், நூல்களை ஆழ்ந்து கற்று விளக்கும் உரையாசிரியர்களின் உரைகளைக் கவனமாய்ப் படித்தேன். படியெடுப்போரின் கவனக்குறைவால் புகுந்த பல பிழைகள் கொண்ட, பல்வேறு வகைக் கையெழுத் துடைய நூல்களை ஒப்பிட்டேன். இறுதியாக, மிகப் பல வார்த்தைகள் வட மொழியிலிருந்து கொண்டுவரப் பட்டுள்ளமை யால், வடமொழி நூல்களை நுட்பமாக ஆய்ந்து, தற்செயலாகப் புகுந்த தவறுகளை உண்மை ஒழுங்குக்கு ஏற்கத் திருத்தவும், அதே (வடமொழிக்) கருவூலத்திலிருந்து இயன்ற அளவு மிகப் பல சொற்களை எடுக்கவும், அதனால் இந்தத் தமிழ்க் கருவூலத்தை வளம்பெறச் செய்யவும் முயன்றுள்ளேன்.

இந்த நூலை - என்னால் இயன்றதற்கும் மேலான முயற்சி யால், மிகுந்த உழைப்பால் முடிவுபெற்ற நூலை - இயேசு கிறிஸ்துவின் மறைத்தொண்டர்களுக்குப் படைக்கிறேன்.

இப்பகுதிகளில் தெய்வங்களின் நினைவுச் சின்னங்கள், புராணக் கற்பனைகள், விஞ்ஞான நெறிகள், கவிஞர்களின் பாடல்கள், வானிலைக் கணக்கீடுகள், மருத்துவ விதிகள், இசை, நடன விதிகள் எல்லாமே, ஏன் இலக்கணத்தின் தொடக்க விதிகள்கூட, செந்தமிழிலேயே முன்னோர் எழுதியுள்ளனர் என்பதைச் சிறிதளவே இம்மறைத் தொண்டர்கள் கவனித்தாலும், இதே நூலின் (செந்தமிழ் அகராதியின்) பயன் என்ன என்பதை எல்லோரும் எளிதில் அறிந்துகொள்வர்.

ஆகையால், இவர்களின் தெய்வங்கள், புராணங்கள், கலைகள், விஞ்ஞானம்பற்றி ஒருவர் முற்றிலும் அறியாதிருந்தால், அறிவில் ஓர் ஐயமும் இல்லாமல் அறியாதிருந்தால், இந்த உயர் மொழியைப் பற்றி ஒன்றுமே தெரியாதிருந்தால், இந்நாட்டு மக்களையே நம்ப வேண்டியிருக்கும். இவர்கள், குறிப்பாக அந்தணர்கள், தங்களுக்கு ஒன்று தெரியாது என ஒத்துக்கொள்ளமாட்டார்கள்; சிறிதும் தயங்காமல், ஆடம்பர ஒலிகொண்ட சொல்களை அளந்துபார்த்து, தங்கள் மனதில் தோன்றும் முதற் சொற்களை, அவை உண்மைக்குப் புறம்பாக இருந்தாலும், முழு அதிகார அரியணைக் கூற்றாகக் கொடுப்பதற்கு அஞ்சமாட்டார்கள். இக்கூற்றுகள் எத்துணை பொய்யானவை என்பது, அவர்களுடைய ஆசிரியர்கள் நூல்களை இங்குமங்கும் படிக்கும் பொழுது தெளிவாகத் தெரியும்.

மேலும் அவர்கள், தங்கள் தெய்வங்களைப்பற்றிக் கூறும் கதைகள் அறிவுக்கு எவ்வளவு ஒவ்வாதவை எனக் காட்டியுள்ளேன். பகுத்தறிவின் வலிமையை உணர்ந்ததும், அவை தவறு எனவும், பொதுமக்களின் கற்பனை எனவும் கூற அவர்கள் தயங்கவில்லை. சில சமயங்களில் நான் கூறியதை மறுக்க இயலாமல், அமைதி காக்கின்றனர், நாணம் அடைகின்றனர்; இதனால், நான் அக்கதைகளை மறுப்பதுபோல் அவர்களும் அவற்றை மறுக்க வேண்டிய தேவை ஏற்பட்டுள்ளது.

இந்தியர்கள், பகுத்தறிவின் காரணகாரிய முறைக்கு இசைவதைவிட, பெரியோர் நூலின் பிரமாணங்களுக்கு இசைவு தருவர். யாரையும் நம்பவைக்கும் உறுதியான வழி, பழைய நூல்களிலிருந்து மேற்கோள் கொடுப்பதாகும்.

இந்நூல்களில் பழந் தமிழர்கள் கடவுளைப்பற்றியும் நற்பண்பு

களைப்பற்றியும் உண்மையில் மிகச் சிறப்பாகப் பேசியுள்ளனர். ஆனால், நூல்கள் செந்தமிழ் நடை தாங்கியிருக்க, செந்தமிழை முற்றிலும் அறியாதவர் என்ன செய்ய இயலும்?

இதிலிருந்து, இந்திய மக்களை அவர்களின் பழைய தவறான சிந்தனைகளிலிருந்து கிறிஸ்துவின் விசுவாசத்துக்கு அழைத்துவர அல்லது குறைந்த அளவு அவர்களின் பழைய கதைகளிலிருந்து முற்றிலும் அவர்களைத் திருப்ப விரும்பும் இயேசு கிறிஸ்துவின் மறைத்தொண்டர்களுக்கும் மற்றவர்களுக்கும் இந்நூல் எவ்வளவு பயனுள்ளதாய், தேவையானதாய் இருக்கும் என்பது தெளிவாகும்.

மிக நல்லவரும் வல்லவருமாகிய கடவுள், உழைப்பும் களைப்பும் நிறைந்த இந்த நூலை, அவரது மிகு மகிமைக்காகத் தொடங்கிய இந்நூலை, தனி உதவியால் முடிவுக்குக் கொண்டு வரத் திருவுளங்கொண்டார். இதன் மிக நிறைந்த, மிக இனிய கனிகளைச் சுவைக்க விரும்புவோர், தங்கள் அறிவுத் திறனையும் உள்ளத்தின் ஆர்வத்தையும் புறத்தே சேர்க்கத் தயங்காதிருப்பார்களாக.

## வீரமாமுனிவர் பாயிரம்

மூவுல கனைத்து முயன்றடி யேத்த
யாவுல கனைத்து மேந்தியாள் கடவுளைப்
பணிந்துநான் சூடிய பதமல ருலகெலா
மணிந்து வாழ்த்த வருந்தமி ழைம்பொருள்
முன்னூ றெளிந்து முன்னர்த் தந்த
தொன்னூல் விளக்கந் துதித்துக் கொண்டனர்
நூற்பதக் கருவியா நூங்கென வேண்டு
நாற்பத விளக்கமு நவில்கென வேண்ட
யாப்புற மறைவுறு மென்றுணர்ந் தொளிபெறப்
பாப்புறத் தவைதனிப் பகர்ந்தக ராதியா
வவ்வவ் பெயர்ப்பொரு ளவ்வவ் பொருட்பெயர்
காட்டிய பின்னர் மீட்டியை வழக்கொடு
தொகைவரும் பலபொருள் வகைவர விளக்கியு
முதல்வரு மெழுத்தொழி முழுதெலா மொன்றி
நுதல்வரும் பதமொரு நுண்டொடை யாக்கியும்
பெயர்பொரு டொகைதொடை பிரித்த நான்முகத்
துயர்பொரு டொடர்பத முரைத்துநூல் வழங்க
மதுர வனாதி வளந்தரச்
சதுரக ராதி சாற்றுது மன்றே.

(பெயரகராதி தொடையகராதிகளில், ஏவல், வினைமுற்று, வினையெச்சம், வியங்கோண் முற்றெனக் காட்டியிருக்குஞ் சிலவற்றை வழியாகக் கொண்டு, இலக்கண நூல்களில் வினைச்சொற்களுக்குக் கூறிய யிறுதிநிலையுடைய வேனைய சொற்களையு மவ்வவ் சொல்லெனக் கண்டுணர்க)

முதலாவது

# பெயரகராதி

| | | | |
|---|---|---|---|
| நம்முத் | லவனடி | யிறைஞ்சி | நாவலர் |
| நம்முதன் | மொழிப்பயன் | றரப்ப | தார்த்தமீங் |
| கம்முத | லெழுத்தணி | யணவித் | தந்திடு |
| மிம்முதற் | பெயரக | ராதி | யென்பவே |



## அ

அ - அஃறிணைப் பன்மையீறு (உ-ம்: வாழ்ந்தன), ஆறாவதன் பன்மையுருபு (உ-ம்: நின தாள் கள்), சாரியை (உ-ம்: க, நினக்கு), சுட்டெழுத்து, முத லெழுத்து
அகக்காழ் - உள்வயிரம்
அகங்காழ் - உள்வயிரம்
அகங்கை - உள்ளங்கை
அகடு - உள், நடு, பொல்லாங்கு, வயிறு
அகணி - உள், மருத நிலம், வயல்
அகணிதம் - எண்ணிக்கை யின்மை
அகண்டம் - எல்லாம்
அகண்டாகண்டன் - கடவுள்
அகண்டி - ஓர் வாச்சியம்
அகத்தி - ஓர் மரம்
அகநிலை - கடவுள்
அகப்பா - அகழி, மதிலுண் மேடை, மதில்
அகப்பு - தாழ்வு
அகமம் - மரப்பொது
அகமலர்ச்சி - ஆனந்தம்
அகம் - இடம், உள், ஏழனுருபு (உ-ம்: பல்லாரகத்து), பள்ளம், பாவம், பூமி, மரப்பொது, மனம், மனை
அகம்மியம் - ஓரெண்
அகரம் - பார்ப்பனச்சேரி, மருத நிலத்தூர், முதலெழுத்து
அகரு - அகில்
அகலம் - மார்பு, விரிவு
அகலர் - சண்டாளர்
அகலல் - நீங்கல், பிரிதல்
அகலவுரை - இலக்கணமு மிலக் கியமு மெடுத்துக் காட்டிப் பொருள் விரித்தல்

அகலிடம் - பூமி
அகலியம் - மரப்பொது
அகலுள் - அகலம், ஊர், நாடு, பெருமை
அகல் - அல்குல், தகழி, நீங் கென்னு மேவல்
அகவல் - அழைத்தல், ஆசிரி யப்பா, ஆடல், மயிற்குரல் வியங்கோண் முற்று
அகழி - அகழ்
அகழ் - அகழி, தோண்டென்னு மேவல்
அகழ்தல் - தோண்டல்
அகளங்கன் - புத்தன், மாசிலான்
அகளம் - தாழி, மிடா
அகளி - தாழி
அகறல் - அகலம், கடத்தல்
அகற்றல் - நீக்கல், விரித்தல்
அகனம் - கனமில்லது
அகன்றில் - ஆணன்றில்
அகாதம் - நீந்துபுனல், வஞ்சகம்
அகாதன் - வஞ்சகன்
அகாரம் - வீடு
அகாரி - கடவுள்
அகி - இரும்பு, பாம்பு
அகிதம் - உரிமையின்மை
அகிதர் - பகைவர்
அகிலம் - எல்லாம், பூமி
அகில் - ஓர் மரம்
அகைத்தல் - அடித்தல், அறுத்தல், எழுச்சி, ஒடித்தல், செலுத்தல், முறித்தல், வருந்துதல்
அகோசரம் - அறியொணாமை
அகோ - கொடுமை, சிவனைம் முகத்தொன்று
அக்கசாலையர் - கம்மாளர், தட்டார்
அக்கம் - கண், கயிறு
அக்கரம் - எழுத்து, ஓர் நோய்
அக்கன் - நாய்
அக்காரம் - சருக்கரை
அக்கி - கண்
அக்கிரமம் - கொடுமை
அக்கினி - தீ
அக்கு - எருதுத்திமில், எலும்பு, சங்குமணி
அக்குரன் - இடையெழுவள்ளலி லொருவன்
அக்குரோணி - படையின்றொகை
அக்கை - முன்பிறந்தாள்
அக்கோ - அதிசயச்சொல், இரக் கச் சொல்
அஃகல் - குறைதல், வியங்கோண் முற்று
அஃகுல்லி - உக்காரி, சிற்றுண்டி
அஃபோதம் - நிலாமுகிப்புள்
அங்கசன் - மன்மதன்
அங்கணம் - சலதாரை, சேறு, முற்றம்
அங்கதம் - தோளணி, பழிச்சொல், பாம்பு, பொய், யானையுணவு
அங்கம் - அடையாளம், அவயவம், உடல், எலும்பு, ஓர் தேசம், ஓர் பாடை, கட்டில், பாவனை, வேதாங்கம்
அங்கராகம் - பூசும் பரிமளம்
அங்கர் - அங்க தேசத்தார்
அங்கர்கோமான் - கன்னன்
அங்கனை - பெண்
அங்காடி - கடைவீதி
அங்காத்தல் - வாய்திறத்தல்
அங்காரகன் - செவ்வாய், நெருப்பு
அங்கி - கார்த்திகை நாள், சட்டை, நெருப்பு
அங்கிதம் - உடற்றழும்பு
அங்கிநாள் - அத்த நாள்
அங்கிரி - கால்
அங்கு - அவ்விடம்
அங்குசபாசமேந்தி - விநாயகன்
அங்குசம் - யானைத்தோட்டி
அங்குட்டம் - பெருவிரல்
அங்குரம் - முளை
அங்குலம் - ஓரளவு

அங்குலி - விரல்
அங்குலீயம் - மோதிரம்
அங்கை - உள்ளங்கை, குடங்கை
அங்கோலம் - அழிஞ்சில்
அங்ஙனம் - அத்தன்மை, அவ்விடம்
அசங்கதம் - ஒழுங்கின்மை, பொய்
அசடர் - கீழ் மக்கள்
அசதி - சிரித்துப் பேசல், வசவி
அசமானம் - உவமையின்மை
அசம் - ஆடு, மூவருடநெல்
அசரம் - நடையில்லது
அசலம் - அசையா நிலை, பூமி, மலை
அசலனம் - அசைவின்மை
அசலன் - கடவுள்
அசலை - பூமி
அசவல் - கொசுகு
அசறு - சேறு
அசனம் - உணவு, சோறு, வேங்கை மரம்
அசனி - இடி, வச்சிராயுதம்
அசன் - பிரமன்
அசாவேரி - ஓரிராகம்
அசி - அவமதிச் சிரிப்பு, ஆயுதப் பொது வாள்
அசிந்தியம் - ஓரெண்
அசுசி - அசுத்தம்
அசுணமா - கேகயப்புள்
அசும்பு - கிணறு, பொல்லா நிலம், வழுக்கு நிலம்
அசுரநாள் - மூலநாள்
அசுரமந்திரி - சுக்கிரன்
அசுரர் - அவுணர்
அசுவம் - குதிரை
அசுழம் - நாய்
அசேதனம் - அறிவின்மை
அசை - அசையென்னுமேவல், அசைநிலை, செய்யுளுறுப்பி லொன்று
அசைதல் - ஆடல், உலாவல், சோம்பல், தங்கல், துவளல்
அசைத்தல் - ஆட்டல், கட்டல்
அசைப்பு - சொல், சொல்லுதல்
அசோகம் - ஓர் மரம், மன்மதன் கணை
அசோகன் - அருகன்
அச்சம் - அகத்தி, இலேசு, பயம்
அச்சயன் - கடவுள்
அச்சி - ஓர் தேயம்
அச்சு - அடையாளம், உயிர், பண்டியச்சு
அச்சுதம் - அறுகு வெள்ளரிசி கூட்டியணிவது, கெடுத லின்மை
அச்சுதன் - கடவுள், விட்டுணு
அச்சுதன்முன்வந்தோன் - பல பத்திரன்
அச்சுவத்தம் - அரசமரம்
அச்சுவம் - குதிரை
அச்சோ - அதிசயச்சொல், இரக் கச் சொல்
அஞர் - அறிவில்லார், துன்பம்
அஞலம் - கொசுகு
அஞல் - கொசுகு
அஞ்சம் - அன்னப்புள்
அஞ்சலி - கும்பிடல்
அஞ்சலிகை - வௌவால்
அஞ்சல் - தோல்வி, பயப்படல், வியங்கோண்முற்று
அஞ்சனம் - கறுப்பு, மேற்றிசை யானை, மை
அஞ்சனவண்ணன் - திருமால்
அஞ்சனாவதி - வடகீழ்த்திசை யானைக்குப் பெண் யானை
அஞ்சனி - காயா
அஞ்சனை - அனுமன்றாய், வட திசை யானைக்குப் பெண் யானை
அஞ்சிதமுகம் - தலையாட்டியிரு தோண்மேற் சாய்தல்

அஞ்சிதம் - உண்டாதல், பொருந்தல்
அஞ்ஞை - அறிவில்லான்
அடகு - இலைக்கறி, கடன் கோடற் கிடு வைத்தல்
அடக்கம் - ஒடுக்கம்
அடங்கல் - அடக்கம், எல்லாம், சுருங்கல், வியங்கோண்முற்று
அடம் - ஈனம், சஞ்சாரம்
அடர் - தகடு, நெருங்கு, பொரு தென்னு மேவல்
அடர்தல் - நெருங்கல்
அடர்த்தல் - பொருதல்
அடர்பு - நெருக்கம், வினையெச்சம்
அடலை - சாம்பல்
அடல் - கொல்லுதல், சமைத்தல், பொருதல், வலி, வியங்கோண் முற்று, வெற்றி
அடவி - காடு, சோலை
அடாணா - ஓரிராகம்
அடி - அடியென்னுமேவல், ஆதி, கால், செய்யுளுறுப்பிலொன்று
அடிகள் - கடவுள், குரு, தலைவி, முனிவர், மூத்தோன்
அடிக்குடில் - அடிச்சேரி
அடிசில் - சோறு
அடித்தல் - அடிக்குதல்
அடுகளம் - போர்க்களம்
அடுக்கல் - ஒன்றின் மேலொன் றேற்றல், மலை, வியங்கோண் முற்று
அடுக்களை - மடைப்பள்ளி
அடுதல் - கொல்லல், தீயிற்பாக மாக்குதல்
அடுத்தல் - கிட்டல்
அடுப்பு - அச்சு, அடுப்பு, பரணி நாள்
அடை - அடுத்தல், அப்ப வர்க்கம், இலை, கனம், காப்புச் செய் சேர் என்பவற்றேவல், தோசை, வினைமுற்று
அடைகல் - பட்டடை
அடைகுறடு - பட்டடை
அடைக்கலம் - கையடை
அடைச்சுதல் - மலர் சூட்டல்
அடைதல் - சேர்தல்
அடைத்தல் - காப்புச் செய்தல், சேர்த்தல்
அடைந்தோர் - உறவோர்
அடையலர் - பகைவர்
அடையல் - எல்லாம்
அடையாளம் - இலாஞ்சனம்
அடைவு - எல்லாம், வழி
அட்சதை - சிதைவுறா மங்கல வரிசி
அட்சி - கண்
அட்டகம் - எட்டின் கூட்டம், வடமொழியிலோர் பிரபந்தம்
அட்டம் - எட்டு, வினைமுற்று
அட்டி - அதிமதுரம், செஞ்சந்த னம்
அட்டிகை - ஓராபரணம்
அட்டில் - மடைப்பள்ளி
அட்டு - பனாட்டு, வினையெச்சம்
அட்டை - அட்டை, வினைமுற்று
அணங்கு - அச்சம், அணங்கென் னேவல், அழகு, ஆசை, கொலை, தெய்வப்பெண், தெய்வம், தேவர்க்காடுங் கூத்து, நோய், பெண்மகள், வருத்தம்
அணம் - மேல்வாய்
அணரி - மேல் வாய்
அணல் - கீழ்வாய், மிடறு
அணவல் - கிட்டல்
அணவு - சாரென்னுமேவல், நடு
அணவுதல் - சார்தல், புணர்ச்சி
அணி - அணியென்னுமேவல், அலங்காரம், அழகு, ஆபரணம், ஒழுங்கு, நன்மை, படைவகுப்பு, பெருமை, மாலை
அணிகம் - சிவிகை
அணிகலன் - ஆபரணம்
அணிதல் - அலங்கரித்தல்
அணிந்துரை - பாயிரம் பூணல்

அணிமா - அட்டசித்தியி லொன்று
அணியல் - மாலை, வியங்கோண் முற்று
அணில் - அணிற்பிள்ளை
அணு - உயிர், சிறுமை, நுண்மை
அணுகல் - கிட்டல், வியங்கோண் முற்று
அணை - கரைப்பொது, செய்கரை, புணரென்னுமேவல், மெத்தை, வரம்பு
அணைதல் - புணர்தல்
அணோக்கம் - மரப்பொது
அண்டகை - அப்ப வர்க்கம்
அண்டசம் - முட்டையிற் பிறப் பன (அவையாவன:-அரணை, ஆமை, இப்பி, உடும்பு, ஓணான், தவளை, நண்டு, பல்லி, பறவை, பாம்பு, மீன், முதலை பிறவும்)
அண்டம் - ஆகாயம், பீசம், முட்டை
அண்டயோனி - சூரியன்
அண்டர் - இடையர், பகைவர், வானோர்
அண்டல் - கிட்டல்
அண்டிகம் - செந்நாய்
அண்டை - அருகிடம், வினை முற்று
அண்ணம் - உண்ணா, மேல்வாய்
அண்ணல் - அருகன், இராசா, சார்தல், தமையன், புத்தன், பெருமை, பெருமையிற் சிறந் தோன், முல்லை நிலத்தலைவன், வியங்கோண்முற்று
அண்ணன் - தமையன்
அண்ணாத்தல் - அங்காத்தல், மேனோக்கல்
அண்ணுதல் - சார்தல்
அண்மை - அணிமை
அதகம் - மருந்து
அதட்டம் - அரவுயிர்ப்பு, பாம்பி னச்சுப்பல்
அதம் - அத்திமரம், சங்கரித்தல், தாழ்வு, பள்ளம்
அதரம் - கீழுதடு
அதரிசனன் - குருடன்
அதரித்திரன் - கன்னன், தரித் திரமில்லான்
அதர் - ஆட்டதர், நுண்மணல், புழுதி, வழி
அதர்கொளல் - வழிப்பறித்தல்
அதர்வணம் - நான்காம் வேதம்
அதவு - அத்திமரம்
அதழ் - பூவிதழ்
அதள் - தோல்
அதி - மிகுதிப் பொருளைத் தரு மிடைச்சொல்
அதிகம் - இலாபம், குருக்கத்தி, படை, பொலிவு, மிகுதி
அதிகாரம் - அதிகரித்தல், பண்பு
அதிகுணன் - கடவுள்
அதிங்கம் - அதிமதுரம்
அதிசயன் - அருகன்
அதிதி - காசிபப்பிரமாவின் மனைவிகளிற்றேவதைகட்குத் தாய், புதியவன்
அதிதி நாள் - புநர்பூச நாள்
அதிதியர் - புதியோர்
அதிபதி - இராசா
அதிபன் - இராசா, எப்பொருட்கு மிறையோன்
அதிபாரம் - மிகுபாரம்
அதிரல் - அதிர்தல், விரிதூறு
அதிராயம் - அதிசயம்
அதிரிசம் - காணப்படாதது
அதிரிசன் - குருடன்
அதிரேகம் - அதிசயம்
அதிர் - அதிரென்னேவல், ஒலி
அதிர்ச்சி - ஆரவாரம்
அதிர்தல் - நடுங்கல்
அதிர்த்தல் - அதட்டல்ச் சொல் லுதல்

அதிர்ப்பு - அச்சம், அதிரல், ஆரவாரம், நடுக்கம்
அதீதர் - வானோர்
அது - அஃது, சுட்டுச்சொல், வேற்றுமையுருபு
அதுக்கல் - அடித்தல்
அதுலம் - உவமையின்மை, ஓரெண்
அதுலன் - கடவுள்
அதுலிதம் - அசைவின்மை
அதோகதி - நரகம்
அதோமுகம் - ஆற்று நீர்க்கழி முகம், கீழ் நோக்கிய முகம்
அத்தம் - அருநெறி, ஓர் நாள், கண்ணாடி, காடு, கை, சொற் பொருள், பாதி, பொன், வழி
அத்தவாளம் - உல்லாசம், காடு, போர்வை
அத்தன் - அருகன், கடவுள், குரு, சிவன், தகப்பன், மூத்தோன்
அத்தாணி - அரசிருக்கை
அத்தி - எலும்பு, ஓர்மரம், கடல், கொலை, பாதி செய்யென்னே வல் , யானை
அத்தியந்தம் - ஓரெண்
அத்தியயனம் - வேதமோதல்
அத்தியாபகன்- வேதமுரைப் போன்
அத்தியாயம் - முனிவருரைத்த விலக்கியச் செய்யுட் கூறுபாடு, வேத நூலை விரித்த விலக்கியத் தின் கூறுபாடு, வேதம்
அத்திரம் - அம்பு, கழுதை, குதிரை, கைவிடு மாயுதப் பொது, மலை, முன் விடுமம்பு
அத்திரி - உலைத்துருத்தி, ஒட்டகம், ஓரிருடி, கணை, கழுதை, குதிரை, மலை, விண்
அத்தினி - நால்வகைப் பெண்ணி னொருத்தி, பெண் யானை
அத்து - அசைச்சொல், அரைப் பட்டிகை, இசைப்பு, சாரியை (உ-ம்: மாடத்துக்கு), சிவப்பு, செவ்வை, தைத்தல்
அத்துவம் - சிவப்பு
அத்துவிதம் - இரண்டின்மை
அத்தை - தலைவி, முன்னிலை யசைச்சொல் (உ-ம்: சொல்லிய ரத்தை நின் வெகுளி)
அத்தோ - அதிசயவிரக்கச் சொல், இரக்கச் சொல்
அநகம் - பாவமின்மை, மாசின்மை
அநகன் - அருகன், கடவுள்
அநங்கம் - இருவாட்சி, உட லின்மை, மல்லிகை
அநங்கன் - உடலிலான், கடவுள், மன்மதன்
அநந்தசயனன் - விட்டுணு
அநந்தஞானி - கடவுள்
அநந்தம் - அளவின்மை, ஆகா யம், ஓரெண், பொன்
அநந்தரம் - மேல்
அநந்தலோசனன் - கடவுள், புத்தன்
அநந்தன் - அருகன், கடவுள், சிவன், சேடன், திருமால், பல பத்திரன்
அநந்தை - பார்வதி, பூமி
அநர்த்தம் - பயனிலாச் சொல்
அநவரதம் - எப்பொழுதும்
அநாதி - கடவுள், சிவன்
அநாமிகை - ஆழிவிரல்
அநாரதம் - எப்பொழுதும்
அநாவிலன் - சுக்கிரன்
அநித்தம் - அநித்தியம்
அநித்தியம் - நிலையின்மை, பொய்
அநிமாலினம் - சாவு
அநியாயம் - நியாயமின்மை
அநிருத்தன் - மன்மதன் மகன்
அநிலநாள் - சோதிநாள், விசாகநாள்
அநிலம் - காற்று, பிறப்பு
அநிலன் - ஓரவுணன், வாயு
அநீகம் - ஓர் படையின்றொகை

அநீதம் - நீதியின்மை
அநீகர் - கீழ்மக்கள்
அநீதன் - நீதியிலான்
அநு - கறுப்பு, தொடர்ச்சி
அநுகம் - செஞ்சந்தனம்
அநுகரணவோசை - ஒலிக்குறிப்பு
அநுக்கம் - சந்தனம், சோம்பு, பயம், பாம்பு, வருத்தம்
அநுசன் - தம்பி
அநுசிதம் - தகுதியின்மை, பொய்
அநுத்தம் - பொய்
அநுபமை - உவமையின்மை, தென்மேற்றிசை யானைக்குப் பெண் யானை
அநுமதி - சம்மதி, பௌரணை
அநுமாநம் - ஓர் பிரமாணம், சந்தேகம்
அநுராகம் - ஆசை
அநுலோமன் - உயர்குலத் தந்தைக்கு மிழிகுலத் தாய்க்கும் பிறந்த பிள்ளை
அநுவழி - புதன்
அநூரு - சூரியன் றேர்ப்பாகன், புதன், முடவன்
அந்தகசயன் - சிவன்
அந்தகன் - அழித்தோன், குருடன், சனி, நமன்
அந்தகாரம் - இருள், நாகம்
அந்தகாரி - சிவன்
அந்தணர் - பார்ப்பார், முனிவர்
அந்தணர்வாக்கு - வேதம்
அந்தணன் - அருகன், சனி, சிவன், பிரமன், வியாழம்
அந்தப்புரம் - அரசன்றேவி யிருக்கை
அந்தம் - அழகு, கடை, கத்தூரி, சாவு
அந்தரங்கம் - ஏகாந்தம், மனம்
அந்தரம் - அளவு, ஆகாயம், இடை, இருள், கூட்டம், தனிமை, தீமை, தேவர் கோயில், பேதம், முடிவு
அந்தராயம் - தீமை
அந்தராளம் - நடு
அந்தராளன் - அநுலோமத் தந்தைக்கும் பிரதிலோமத் தாய்க்கும் பிறந்த பிள்ளை
அந்தரி - துர்க்கை, பார்வதி
அந்தளம் - கவசம்
அந்தன் - குருடன், சனி
அந்தாதி - ஓர் தொடை, ஓர் பிரபந்தம், கடவுள்
அந்தாளிபாடை - ஓர் பண்
அந்தி - பொருந்தென்னேவல், மாலைக் காலம், முத்தெருக் கூடுமிடம்
அந்தித்தல் - பொருந்தல்
அந்திமான் - இடையெழு வள்ளலி லொருவன்
அந்தில் - அசைச்சொல் (உ-ம்: அந்திற் கச்சினன் கழலினன்), அவ்விடம் (உ-ம்: சேயிழை யந்திற் கொழுநற் காணிய)
அந்திவண்ணன் - சிவன்
அந்து - நெல்லந்து
அந்துகம் - சங்கிலி, யானைச் சங்கிலி
அந்தோ - அதிசய விரக்கச்சொல், இரக்கச்சொல்
அந்நியபுட்டம் - குயில
அந்நியம் - அயல், குயில்
அந்நியர் - பிறர்
அபசவ்வியம் - இடது பக்கம்
அபத்தம் - பொய்
அபயம் - அச்சமின்மை, அடைக்கலம், தயை
அபயர் - படைவீரர்
அபயன் - கடவுள், சூரன், சோழன்
அபரசன் - தம்பி
அபரம் - கவசம், நரகம், பிணக்கு, பின்பக்கம், முதுகு, யானைப் பின்கால்
அபராணம் - அந்திப்பொழுது

அபராதம் - தண்டித்தல்
அபரிமிதம் - அளவின்மை
அபவருக்கம் - முத்தி
அபவாதம் - பழிச்சொல்
அபவாரணம் - மறைவு
அபாங்கம் - கடைக்கண் பார்வை
அபாநன் - தசவாயுவிலொன்று
அபாரம் - அளவின்மை, பரம் பொருள்
அபாரணை - உண்ணாமை
அபிதாநம் - பெயர்
அபிநவம் - புதுமை
அபிமாநம் - களிப்பு
அபிராமம் - அழகு
அபிராமி - சரச்சுவதி
அபூபம் - அப்ப வர்க்கம்
அப்பம் - அடை, சிற்றுண்டி
அப்பர் - திருநாவுக்கரையர்
அப்பல் - சாந்து முதலியவணிதல், மோதல், வியங்கோண்முற்று
அப்பன் - தகப்பன்
அப்பிரமேயம் - ஒரெண்
அப்பிரமை - கீழ்த்திசை யானைக் குப் பெண் யானை
அப்பிரம் - மேகம்
அப்பு - அப்பென்னு மேவல், கடல், நீர்
அப்புது - யானையைப் பாகன் றட்டு மோசை
அமங்கலி - கைம்பெண்
அமங்கலை - கைம்பெண்
அமச்சன் - மந்திரி, வியாழம்
அமணர் - சமணர்
அமண் - சமணமதம்
அமரமாதர் - தேவமாதர்
அமரம் - ஓர் நோய், வடமொழியி னோர் நிகண்டு
அமரர் - பகைவர், வானோர்
அமரார் - பகைவர்
அமராவதி - தேவேந்திரனகரம்
அமராவதியோன் - தேவேந்திரன்
அமரி - அமிழ்து, துர்க்கை, விடம்
அமர் - அமரென் னேவல், போர், மதில்
அமர்க்களம் - போர்க்களம்
அமர்தல் - பெருமை, பொருந்தல், பொலிவு, மிகுதி
அமர்த்தல் - அமர்த்துதல், பொருதல்
அமலம் - அழகு, அழுக்கின்மை
அமலன் - அருகன், கடவுள், சிவன்
அமலை - ஒலி, சோறு, பார்வதி, மிகுதி
அமளி - மக்கட் படுக்கை, மெத்தை
அமாத்தியர் - தந்திரிகள், மந்திரி கள்
அமாநம் - அளவின்மை
அமிதம் - அளவின்மை
அமித்திரர் - பகைவர்
அமிர்தம் - மூர்ச்சை தீர்த்துயிர் தருமருந்து
அமிழ்தம் - அமுதம்
அமிழ்தல் - ஆழ்தல்
அமிழ்து - இனிமை
அமுங்கல் - அமுந்தல்
அமுதகிரணன் - சந்திரன்
அமுதம் - இனிமை, தேவருணவு, நீர், பால், பெருமை, முத்தி, வேண்டல்
அமுதர் - இடையர், வானோர்
அமுதவல்லி - சீந்திற்கொடி
அமுது - அமுதம், சுவை, சோறு, நீர், பால்
அமுதுசெய்தல் - புசித்தல்
அமை - அமையென்னு மேவல், மூங்கில்
அமைச்சர் - மந்திரிகள்
அமைதல் - சம்மதித்தல், பொருந் தல்
அமைதி - சமயம், மாட்சிமை
அமைத்தல் - சமைத்தல், செய்தல்
அமையம் - காலம்
அமைவன் - அருகன்

அம் - அழகு, இடைச் சொல், சாரியை, நீர், மேகம்
அம்பகம் - எழுச்சி, கண்
அம்பணத்தி - துர்க்கை
அம்பணம் - ஆமை, துலாக்கோல், நீர், மரக்கால், வாழை
அம்பணவர் - ஓர் சாதி
அம்பரம் - ஆகாயம், கடல், சீலை, திசை
அம்பர் - அவ்விடம்
அம்பலம் - சவை, சித்திரகூடம்
அம்பல் - சிலரறிந்து தம்முட் புறங்கூறல், பழிமொழி
அம்பாலிகை - தரும தேவதை
அம்பால் - தோட்டம்
அம்பாவணம் - சாபம்
அம்பி - இறைகூடை, ஓடம், சல சுத்திரம், தாம்பணி, தெப்பம், மரக்கலம், மிடா
அம்பிகை - களி, தருமதேவதை, பார்வதி
அம்பிகைதநயன் - விநாயகன்
அம்பிகைபாகன் - சிவன்
அம்பு - எலுமிச்சை, கணை, தளிர், நீர், மூங்கில், மேகம்
அம்புதம் - நீர், மேகம்
அம்புயம் - தாமரை, புட்டில்
அம்புராசி - கடல்
அம்புலி - சந்திரன்
அம்போதி - கடல், காற்று, பாட்டி னருத்தம்
அம்போருகம் - தாமரை
அம்ம - உரையசைச் சொல் (உ-ம்: பயனின்று மன்றம்ம காமம்), கேளெனல் (உ-ம்: அம்ம வாழி தோழி)
அம்மம் - முலை
அம்மனை - அம்மானை, தாய்
அம்மான் - தகப்பன், மாமன்
அம்மி - அம்மிக்கல்
அம்மியம் - கள், காளம், சிறு சின்னம்
அம்மெனல் - ஒலிக்குறிப்பு
அம்மை - அழகு, தருமதேவதை, தவப்பெண், தாய், பார்வதி, வருபிறப்பு
அயசு - பொல்லா நிலம்
அயநம் - பிறப்பு, வருடப்பாதி, வழி
அயமரம் - அலரி
அயம் - ஆடு, இரும்பு, குதிரை, குளம், சேறு, நல்வினை, நிலம், நீர், விழா
அயர்தல் - செய்தல், தளர்தல்
அயர்ப்பு - மறதி
அயர்வு - அகலம், உந்மத்தம், சோம்பு, தளர்வு, வருத்தம், வெறுப்பு
அயர்வுயிர்த்தல் - வருத்தந்தீர்தல்
அயல் - அருகிடம், இடம்
அயவாகனன் - நெருப்பு
அயனாள் - உரோகணி நாள்
அயனூருவி லுதித்தோர் - வைசியர்
அயன் - அருகன், பிரமன்
அயன்பதத்துதித்தோர் - சூத்திரர்
அயன்மனைவி - சரச்சுவதி
அயன்முகத்துதித்தோர் - பார்ப்பார்
அயன்றோளுதித்தோர் - அரசர்
அயிணம் - மான்றோல்
அயிரம் - கண்ட சருக்கரை
அயிராணி - இந்திராணி, பார்வதி
அயிராவதப்பாகன் - தேவேந்திரன்
அயிராவதம் - கீழ்த்திசை யானை, தேவேந்திரன் யானை
அயிரி - மீன் முள்ளரிந்திடு கத்தி
அயிரை - ஓர் வகை மீன்
அயிர் - சருக்கரை, நுண்மணல், நுண்மை
அயிர்ப்பு - சந்தேகம்
அயிலான் - குமரன்

அயில் - அழகு, இரும்பு, உண்ணென் னேவல், கூர்மை, கைவேல், கோரை, நாஞ்சில்
அயிறல் - உண்டல்
அயினி - சோறு
அயின்றல் - உண்டல்
அயுதம் - பதினாயிரம்
அரக்கர் - இராக்கதர்
அரக்கல் - தேய்த்தல், வியங்கோண் வினைமுற்று
அரக்காம்பல் - செவ்வாம்பல்
அரக்கு - அரக்கு, அரக்கன்னேவல், சிவப்பு
அரக்குதல் - அழித்தல், தேய்த்தல்
அரங்கம் - ஆற்றிடைக்குறை, சத்திரம், சாலை, சிலம்பக்கூடம், நாடகசாலை, போர்க்களம்
அரங்கல் - அழுந்தல்
அரங்கு - இடம், ஓரில், சூதாடற்கு வகுத்தவறை
அரசன் - இராசா, எப்பொருட்கு மிறைவன், வியாழம்
அரசி - தலைவி
அரசு - இராசா, இராசாங்கம், ஓர் மரம், நாடு, வியாழம்
அரட்டர் - குறுநில மன்னர்
அரணம் - கதவு, கவசம், காவற்காடு, கோட்டை, தொடுதோல், மஞ்சம், மதில், வேலி, வேல்
அரணி - கவசம், தீக்கடைகோல், மதில்
அரணியம் - காடு
அரண் - அழகு, காவல், காவற்காடு, கோட்டை, மதில்
அரதனம் - அகன்மணி, சிலம்பணி
அரதி - வேண்டாமை
அரத்தம் - அரக்கு, இரத்தம், கடம்பு, சிவப்பு, செங்குவளை, செம்பஞ்சு, செம்பரத்தம், செம்மை, பவளம், பொன்
அரத்தன் - செவ்வாய்
அரத்தை - ஓர் மருந்து
அரத்தோற்பலம் - செங்குவளை
அரந்தை - துன்பம்
அரமகளிர் - தெய்வமகளிர், தேவமாதர்
அரமனை - இராசமனை
அரமியம் - வீட்டின் மேலுலாவும் வெளி
அரம் - ஓர் கருவி
அரம்பிலம் - பாதாளம்
அரம்பை - தெய்வப்பெண், வாழை
அரம்பையர் - தேவமாதர்
அரரம் - கதவு
அரலை - கடல், கழலைக்கட்டி, கொட்டை, மரல்
அரவக்கொடியோன் - துரியோதனன்
அரவணிந்தோன் - சிவன்
அரவணைச் செல்வன் - விட்டுணு
அரவம் - ஆயிலியம், ஒலி, சிலம்பு, பாம்பு பேரொலி
அரவிந்தம் - தாமரை, மன்மதன் கணை
அரவு - பாம்பு
அரவுநாள் - ஆயிலிய நாள்
அரவுயர்த்தோன் - துரியோதனர்
அரற்றல் - அழுதல், ஒலித்தல்
அரனிடத்தவள் - பார்வதி
அரன் - சிவன், எப்பொருட்கு மிறைவன்
அரன்மகன் - குமரன்
அரன்றோழன் - குபேரன்
அரா - அராவென் னேவல், பாம்பு
அராகம் - அடங்காமை, ஓர் பண், பாலையாழ்த்திறம், பொன், முடுகியல்
அராமம் - சோலை, பைங்கூழ்
அரி - அடர்பு, அரிசி, அரித்தல், அரியென்னு மேவல், ஆயுதப் பொது, ஈர்வாள், உட்டுளைப்

பொருள், ஐமை வடிவு, ஒளி, கடல், கட்டில் கண்வரி, கள், காற்று, கிள்ளை, குதிரை, குரங்கு, குற்றம், கூர்மை, சக்கரம், சந்திரன், சிங்கம், சிங்கவிராசி, சிலம்பின் பருக்கைக் கல், சிலம்பு, சூரியன், செம்மறியாட்டுக்கடா, சோலை, தவளை, தீ, தேர், தேவேந்திரன், நமன் நிறம், நெருக்கம், நெற்கதிர், பகை, பச்சை, படுக்கை, பறை, பன்றி, பாம்பு, புகை, பொன், மரகதம், மரவயிரம், மலை, மழைத்தூவல், மாலை, மூங்கில், வண்டு, வரி, வலி, விசி, விட்டுணு

அரிகரபுத்திரன் - ஐயனார்

அரிகள் - பகைவர்

அரிகூடம் - கோபுரவாயில்

அரிசனம் - மஞ்சள்

அரிசி - தண்டுலம்

அரிச்சந்தனம் - ஐந்தருவிலொன்று

அரிச்சந்திரன் - இடையெழுவள்ளலிலொருவன், சக்கரவர்த்தி

அரிச்சிகன் - சந்திரன்

அரிட்டம் - கள், காக்கை, கேடு, வெள்வெண்காயம், முட்டை, மோர்

அரிட்டித்தல் - கொல்லல்

அரிணம் - சிவப்பு, பொன், மான், யானை, வெள்ளை

அரிணை - கள்

அரிதகி - கடுக்காய்மரம்

அரிதம் - திசை, பசும்புன்னிலம், பச்சை, பொன்னிறம்

அரிதல் - அறுத்தல்

அரிது - அரியது, பச்சை

அரித்தல் - அரிப்பு

அரித்திராபம் - பொன்னிறம்

அரித்து - அரித்தலைச் செய்தென்னெச்சம், பச்சை

அரித்தை - கிலேசம், துன்பம், வினைமுற்று

அரிந்தமன் - விட்டுணு

அரிப்பிரியை - இலக்குமி

அரிப்பு - அரித்தல், குற்றம்

அரிமருகன் - விநாயகன்

அரிமா - சிங்கம், சிங்கவிராசி

அரியணை - சிங்காசனம்

அரியணைச் செல்வன் - அருகன்

அரியமா - சூரியன்

அரியம் - வாச்சியம்

அரியல் - அரிதல், கள், வியங்கோண் முற்று

அரியேறி - துர்க்கை

அரில் - குற்றம், சிறுதூறு, பகை, பிணக்கு

அரிவாள் - கொடுவாள்

அரிவை - இருபத்தைந்து வயதுப் பெண், தெய்வப் பெண், பெண் பொது

அரு - அணு, அறிவு, கடவுள்

அருகம் - சமண மதம்

அருகர் - சமணர்

அருகல் - அணைத்தல், கிட்டல், குறைதல், சாதல், வியங்கோண் முற்று

அருகனை முடி தரித்தாள் - தரும தேவதை

அருகன் - சங்காத்தி, சினேந்திரன்

அருகி - கள், வினையெச்சம்

அருகு - அருகென்னேவல், சமீபம்

அருகுறல் - கிட்டல்

அருக்கம் - எருக்கு

அருக்கல் - அச்சம்

அருக்கன் - சூரியன்

அருக்கு - அருக்கென்னேவல், அருமை

அருங்கலை நாயகன் - புத்தன்

அருச்சனை - ஆராதனை

அருச்சித்தல் - மலர் முதலிய வற்றானருச்சித்தல்
அருச்சுனம் - எருக்கமரம், பொன், மருதமரம், வெண்மை
அருஞ்சிறை - நரகம்
அருட்குடையோன் - கடவுள்
அருட்கொடி வேந்தன் - அருகன்
அருட்டி - அச்சம்
அருணம் - ஆடு, எலுமிச்சை, ஓர் தேசம், பதினெண் பாடையி லொன்று, மிகு சிவப்பு
அருணவம் - கடல்
அருணன் - சூரியன், சூரியன் றேர்ப்பாகன், புதன்
அருமெறி சுரக்குஞ்செல்வன் - புத்தன்
அருத்த நாள் - பாதிநாள்
அருத்தபாகை - வேத நூற்பொருள்
அருத்தம் - கருத்து, சொற்பயன், பாதி, பொன்
அருத்தி - ஆசை, உண்பித்தென்னு மெச்சம், கூத்து, பாதம், பாதி செய்யெனேவல்
அருநெறி - அருகியவழி, வாயில்
அருந்தல் - அருமை, உண்டல், வியங்கோண்முற்று
அருந்தவர் - முனிவர்
அருந்துதன் - வேதனைசெய் வோன்
அருப்பம் - ஊர், கள், காடு, கொலை, கோட்டை, துக்கம், நோய், பிட்டு, மருதநிலத்தூர், மா, மோர், வழுக்கு நிலம்
அருப்பலம் - அனிச்சமரம்
அருமலதி - ஓர் பண்
அருமை - அரியதன்மை, பெருமை
அரும்பல் - முகிழ்த்தல், வியங் கோண் முற்று
அரும்பாலை - ஓரிராக மதையெழு பாலையிற் காண்க
அரும்பு - அரும்பெனேவல், முகை
அரும்புதல் - பொடித்தல், முகைத் தல்
அருவம் - உருவின்மை
அருவருப்பு - அசுத்தம்
அருவி - கழிமுகம், தினைத்தாள், மலையின் வீழாறு
அருளல் - ஈதல், வியங்கோண் முற்று
அருளாழி வேந்தன் - அருகன், கடவுள்
அருள் - ஈயென்னு மேவல், கிருபை, கொடை, சிவசத்தி
அரூபம் - அருவம்
அரூபி - கடவுள், சிவன்
அரை - அரையென்னு மேவல், இடை, பாதி
அரைசிலை - அம்மி
அரைத்தல் - அமிழ்த்தல், தேய்த்தல்
அரைநாள் - பாதிநாள்
அரைநூல் - அரைச்சதங்கை, அரை ஞாண்
அரைப்பட்டிகை - மாதரிடையணி யிலொன்று
அரையன் - அரசன்
அரோ - அசைச்சொல் (உ-ம்: நன்றரோ)
அர்க்கம் - எருக்கு, நீர்க்காக்கை
அர்ச்சனை - ஆராதனை
அர்த்தநாள் - பாதிநாள்
அலகரி - பெருக்கு
அலகு - ஆயுதப் பொது, எண், துடைப்பம், நுளம்பு, நெல்லி ன் மணி, பயிர்க்கதிர், பலகறை, பறவை மூக்கு, மகிழம் விதை
அலகுஞ்சம் - நுளம்பு
அலகை - பிசாசம்
அலகைக் கொடியாள் - காளி
அலகை முலையுண்டோன் - கண்ணன்
அலக்கண் - துன்பம்

அலங்கல் - அசைதல், இரக்கம், ஒளி செய்தல், கலுழ்தல், தளிர், பூமாலை
அலங்காரம் - அழகு, ஓரிலக்கணம், பேரழகு
அலசல் - சோம்பல்
அலசுதல் - சோம்பல்
அலத்தகம் - செம்பஞ்சு
அலத்தம் - செம்பஞ்சு
அலத்தல் - துன்பம்
அலத்தி - நுளம்பு
அலந்தலை - துன்பம்
அலந்தை - குளம், துன்பம், வினை முற்று
அலமரம் - அச்சம், சுழலல், துன்பம், வருந்துதல்
அலம் - அமையுமென்றல், அலமரம், கலப்பை, சஞ்சலம், தேள், விருச்சிக விராசி
அலம்பல் - ஒலித்தல், கழுவல், ததும்பல்
அலரி - அழகு, ஓர் மரம், கண்வரி, சூரியன், தேநீ, நீராவி, பூப் பொது
அலர் - நீர், பலரறிந்து பழிதூற்றல், பழிச்சொல், பூமாலை, மலர் தலைச் செய் விரிதலைச் செய் யென்னு மேவல், மலர்ந்த பூ
அலர்தல் - பூ மலர்தல், விரிதல்
அலர்மகள் - இலக்குமி
அலவன் - ஆணண்டு, கற்கடக விராசி, சந்திரன், நண்டு, பூனை
அலறல் - ஒலித்தல், கூப்பிடல், வியங்கோண் முற்று
அலன்றல் - சாதல்
அலாபம் - தீமை
அலாபு - சுரை
அலாயுதன் - பலபத்திரன்
அலி - எமன், நறுவிலிமரம், நெருப்பு, பேடி, வயிரமில்லா மரம்
அலிகம் - நெற்றி
அலை - அலையென்னேவல், கடல், கடற்றிரை, கருமணல், புனற்றிரை
அலைசுதல் - அலையல், சோம்பல்
அலைதல் - அலையல், சோம்பல், துன்பம், வருந்துதல்
அலைத்தல் - அலைப்பு
அலைத்துவம் -மிகுதி
அலைப்பு - அலைத்தல், கூத்தின் விகற்பம்
அலைவு - அலைதல்
அல் - அல்லென்னேவல், இடைச் சொல் (உ-ம்: தொலையல்), இராத்திரி, இருள், மதில்
அல்கல் - இரா, குறைதல், தங்கல், தரித்திரம், நாள், வறுமை, வியங்கோண்முற்று
அல்குல் - பெண் குறியின் மேற் பக்கம்
அல்லகண்டம் - துன்பம்
அல்லம் - இஞ்சி
அல்லல் - துன்பம், முடைதல், வியங்கோண் முற்று
அல்லவை - பயனிலாப் பொருள், தீமை, பாவம்
அல்லி - அகவிதழ், ஆம்பல், இரா, காயா, பூந்தாது
அல்லியம் - விட்டுணுக் கூத்து
அல்லோன் - சந்திரன்
அவகாசம் - சமயம்
அவகேசி - காயாத மரம்
அவசம் - பரவசம்
அவணன் - திண்ணியன்
அவணி - நன்மை
அவண் - அவ்விடம்
அவதாதம் - வெண்மை
அவதானம் - கிரிகித்தல்
அவதாரணம் - மண்வெட்டி
அவதி - அளவு, எல்லை
அவத்தம் - பொய்
அவந்தி - ஓர் நகர், ஓர் நாடு
அவந்திகை - கிள்ளை

அவப்பிரஞ்சம் - இழிசனர்மொழி
அவமானம் - இழிவு
அவம் - பயனின்மை
அவயவம் - உடல், உறுப்பு
அவயவி - உடல்
அவரசன் - தம்பி
அவரை - கொள்ளு, துவரை, முதிரை முதலாயின
அவரோகணம் - இறங்குதல்
அவலம் - நோய், வருத்தம்
அவலித்தல் - வருந்தல்
அவல் - அவல், குளம், பள்ளம்
அவளிகை - இடுதிரை
அவனி - பூமி
அவனிபாரகன் - இராசா
அவன் - சுட்டுச்சொல்
அவா - அவா வென்னேவல், ஆசை, ஆசைப் பெருக்கம், இறங்குதல்
அவாசி - தெற்கு
அவாவின்மை - வெறுப்பு
அவாவுதல் - இச்சித்தல், இறங்குதல்
அவி - கெடுவேன்னுமேவல், சோறு, தேவருணவு நெய்
அவிடி - திரைச்சீலை
அவிதல் - கெடுதல், வருந்துதல்
அவித்தல் - கெடுத்தல்
அவித்தை - அஞ்ஞானம்
அவிநயசாலை - நாடகசாலை
அவிநயம் - ஓர் நூல், நாடகாங்கம்
அவிநயர் - ஓர் நூலாசிரியர், நாடகர்
அவிர்தல் - ஒளி செய்தல், பிறல்
அவிழ்தல் - விரிதல்
அவிழ்த்தல் - விரித்தல்
அவுணர் - அசுரர்
அவுணன் - மாவலி
அவை - அவையென்னேவல், அவ், கூட்டம், சவை, சுட்டுச் சொல், புலவர்
அவைத்தல் - நெரித்தல், நென் முதலிய குத்தல்
அவையல் - திரட்சி
அவ் - அவை, சுட்டுச் சொல்
அவ்வியத்தம் - ஓரெண், விளங்கக் காணப்படாதது
அழகு - அழகு, சருக்கரை
அழலல் - கனலுதல், வியங் கோண் முற்று
அழலவன் - சூரியன், செவ்வாய்
அழலாடி - சிவன்
அழலுதல் - வெம்மையுறல்
அழலேந்தி - சிவன்
அழலோன் - செவ்வாய்
அழல் - கேட்டைநாள், செவ்வாய், தீ, நாகம், வெப்பம், வெப்புறு வென்னுமேவல்
அழற்கண்வந்தோன் - வீரபத்திரன்
அழற்றல் - சுடுதல், வியங்கோண் முற்று
அழன் - பிணம்
அழிகை - கெடுகை
அழிதல் - கெடுதல்
அழித்தல் - கெடுத்தல்
அழிவி - கழிமுகம்
அழிவு - குற்றம், கேடு
அழுகல் - கெடுதல், வியங்கோண் முற்று
அழுகை - அழுதல், வினைமுற்று
அழுக்காறு - பொய், பொறாமை
அழுக்கு - ஆமை, மாசு
அழுங்கல் - அச்சம், அலையல், அழுதல், அழுந்தல், இரங்கல், ஒலித்தல், ஒளிமழுங்கல், கெடுதல், சோம்பல், துன்பம், நோய், வருத்தம், வியங்கோண் முற்று
அழுங்கு - அழுங்குதலைச் செய் யென்னேவல், ஆமை
அழுங்குதல் - அலையல், ஒளி மழுங்குதல்

அழுதல் - இரங்கல்
அழுத்தல் - அழுந்தச் செய்தல், வியங்கோண்முற்று
அழுந்தல் - அழுந்துதல்
அழுந்து - அழுந்தென்னேவல், நீராழம்
அழுப்பு - சோறு
அழுப்புகம் - தேவலோகம்
அழுவம் - அப்ப வர்க்கம், அழுக்கு நிலம், கடல், துருக்கம், நடுக்கம், நாடு, பரத்தல், பெருமை, முரசு, வழுக்கை நிலம், வினை முற்று
அழைக்கை - கூவுகை, வினை முற்று
அழைத்தல் - வாவெனல்
அளகம் - நீர், பன்றிமுள், பெண் மயிர், மயிர்க்குழற்சி
அளகு - கார்த்திகை நாள், கூகை யுங்கோழியுமல்லன புள்ளின் பெண்பொது
அளகை - குபேரனகர்
அளகையாளி- குபேரன்
அளக்கர் - உப்பளம், கடல், கார்த்திகை நாள், குழைசேறு, நீளவழி, பூமி
அளத்தியர் - உப்பமைப்போர், பெண்கள்
அளம் - உப்பளம், கூர்மை, நெருக்கம்
அளவர் - அளப்பவர், உப்பமைப் போர்
அளவு - வரையறை
அளவை - அளவு, எல்லை, நாள்
அளறு - குழைசேறு, நாகம்
அளாவல் - ஓங்கியிருத்தல், கலத் தல், வியங்கோண்முற்று
அளி - அளித்தலைச் செய்யென் னேவல், அன்பு, கள், காய், குளிர்ச்சி, கொடை, மது, வண்டு
அளிகம் - கட்டழகு, நெற்றி

அளித்தல் - ஈதல், காத்தல், நெருங்கல், பாதீடு
அளிந்தம் - கோபுரவாயிற் றிண்ணை
அளுக்கல் - அச்சக்குறிப்பு
அளை - குழையென்னேவல், தயிர், புற்று, மலைக்குகை, மோர், வளை
அளைதல் - கலத்தல், குழைவு
அளைவு - குழைவு
அள் - அள்ளென்னேவல், கன்னம், காது, கூர்மை, நெருக்கம்
அள்ளல் - அள்ளுதல், குழைசேறு, நரகம், வியங்கோண்முற்று
அள்ளு - அள்ளென்னுமேவல், கூர்மை, பற்றிரும்பு
அள்ளுதல் - அள்ளல், நெருங்கல்
அள்ளை - பிசாசம், வினைமுற்று
அறக்காடு - சுடுகாடு
அறக்கொடியோன் - கடவுள்
அறச்செல்வி - பார்வதி
அறத்தின் மூர்த்தி - தரும தேவதை
அறத்தின்மைந்தன் - தருமராசன்
அறத்தைக்காப்போன் - ஐயனார்
அறப்புறம் - அறச்சாலை
அறம் - தருமம்
அறல் - அறுதல், கருமணல், சிறுதாறு, நீர், புனற்றிரை, வியங்கோண்முற்று
அறவர் - பெரியோர், முனிவர்
அறவன் - புத்தன்
அறவாழியந்தணன் - அரன், அரி, அருகன்
அறவாழிவேந்தன் - கடவுள்
அறவோர் - துறவோர், பார்ப்பார், முனிவர்
அறவோன் - அருகன்
அறன்கடை - பாவம்
அறிகுறி - அடையாளம்
அறிகை - அறிதல்

குழை - குண்டலம், குழைசேறு, குழையென்னேவல், தளிர், துளையுடைப்பொருள்
குழைதல் - வாடல்
குழைத்தல் - குழைவித்தல், தளிர்த்தல்
குளகம் - குற்றெழுத்துத் தொடர்ந்த செய்யுள், பல பாக் கூடிப் பொருண்முடியுஞ் செய்யுள், மரக்கால்
குளகு - இலையுணும் விலங்குணவு
குளகுளெனல் - ஈரடுக்கொலி குறிப்பு
குளம் - தடாகம், நுதல், வெல்லம்
குளவி - ஓர் வண்டு, மலைப்பச்சை
குளிகன் - அட்டநாகத்தொன்று
குளிகை - மாத்திரை
குளித்தல் - நீராடல்
குளியம் - உண்டை, புலி
குளிரி - பீலிக்குஞ்சம், வெற்றிலை மூக்கரி கத்தி
குளிர் - அச்சக் குறிப்பு, கர்க்கடக விராசி, கவண், குளிர்ச்சி, சூலம், நண்டு, பனிக்காற்று, மழு, மீனொழுக்கு, முழவு, வெற்றிலை மூக்கரி கத்தி
குளிர்ப்பித்தல் - குளிர்ச்சி செய்தல்
குளிறல் - எழுத்திலாவோசை, ஒலித்தல், பேசலாவெழு மொலி, வியங்கோண்முற்று
குளிறு - ஒலி, குளிறென்னேவல்
குளீரம் - நண்டு
குள்ளம் - குறுமை
குறங்கு - தொடை
குறடு - ஓர் கருவி, திண்ணை, பலகை, மரத்துண்டு
குறண்டி - ஓர் பண்
குறத்தி - குறிஞ்சி நிலப்பெண்
குறம் - ஓர் சாதி
குறவர் - குறிஞ்சி நிலமாக்கள், வேடர்
குறவை - ஓர் மீன்
குறளன் - குள்ளன்
குறளி - வசவி
குறளை - குள்ளம், கோட்சொலல்
குறள் - ஓர் பா, சிறுமை, பூதகணம்
குறி - அடையாளம், குறிப்பு, குறி யென்னேவல்
குறிக்கோள் - ஒற்றுமை, கணித்தல், கருமமுடிக்குந்துணிவு
குறிச்சி - குறிஞ்சி நிலத்தூர்
குறிஞ்சி - ஓரிசை, ஓர் பண், குறிஞ்சி நிலத்திராகம், குறிஞ்சி மரம், செம்முள்ளி, மருதயாழ்த் திறம், மருதோன்றி, மலைசார் நிலம்.
குறிஞ்சிவேந்தன் - முருகன்
குறிது - குறுமையுடையது
குறித்தல் - கருதல், மதித்தல்
குறிப்பு - ஒருமை, கருத்து
குறியர் - குள்ளர்
குறுகல் - அணுகல், குறைதல், வியங்கோண்முற்று
குறுக்கல் - குறைத்தல், வியங் கோண்முற்று
குறுகுறுப்பு - சினக்குறிப்பு
குறுங்கண் - பலகணி
குறுங்கலி - பாலையாழ்த்திறம்
குறுந்தறி - குறுந்தடி, போதிகை
குறுமாக்கள் - சிறார்
குறுமுனி - அகத்தியன்
குறுமை - சிறுமை, பாவம்
குறும்பர் - குறுநிலமன்னர்
குறும்பாடு - குறும்பாடு
குறும்பி - காதழுக்கு
குறும்பிடி - உடைவாள்
குறும்பு - அரணிருக்கை, பாலை நிலத்தூர், போர்
குறும்பூழ் - காடை
குறும்பொறை - குறிஞ்சி நிலத் தூர், காடு, சிறுமலை, மலை

குறும்பொறைநாடன் - முல்லை நிலத் தலைவன்
குறுவாழ்க்கை - வறுமை
குறை - அரசிறை, குறையென்னேவல், குற்றம், தரித்திரம்
குறைகோள் - இரத்தல்
குறைதல் - கெடுதல், சிறுகல்
குறைபாடு - ஈனம்
குறைவு - ஈனம், வறுமை
குற்சிதம் - அருவருப்பு
குற்றப்பாடு - மானம்
குற்றமில்லான் - அருகன்
குற்றம் - நோய், பிழை
குற்றல் - நெரித்தல், பறித்தல், வியங்கோண்முற்று
குற்றி - தறி, வினையெச்சம்
குனி - குனியென்னேவல், வில்
குனிதல் - இரங்குதல், வளைதல்
குனித்தல் - ஆடல், வளைதல்
குனிப்பு - கூத்தின்விகற்பம்
குன்மம் - ஓர் நோய், தூறு, படைத்தொகை
குன்றல் - குலைதல், குறைதல், கெடுதல், வியங்கோண்முற்று
குன்றவர் - குறிஞ்சி நிலமாக்கள், வேடர்
குன்றவில்லி - சிவன்
குன்றி - ஓர்செடி, வினையெச்சம்
குன்று - குன்றென்னேவல், சதய நாள், சிறுமலை, மலை
குன்றெறிந்தோன் - முருகன்

## கூ

கூ - கூவென்னேவல், பூமி
கூகை - கூகை, கோட்டான்
கூசல் - அச்சக்குறிப்பு, அச்சம், நாணுதல், வியங்கோண்முற்று
கூசனம் - மறைந்த சொல்
கூச்சம் - அச்சம்
கூடகம் - வஞ்சனை
கூடபதம் - பாம்பு
கூடம் - கூடம், கொல்லன் சம்மட்டி, புதைத்தல், பொய், மலையினுச்சி, மறைவு, வஞ்சம்
கூடல் - அடுத்தல், இயலல், கழிமுகம், கூடுதல், தேடல், புணர்தல், மதுரை, வியங்கோண்முற்று
கூடற்கோமான் - பாண்டியன்
கூடார் - பகைவர்
கூடிலி - தசைதின்போன்
கூடு - கூடென்னேவல், பறவைக்கூடு
கூடை - கூடை, கூத்தின் விகற்பம், வினைமுற்று
கூட்டம் - கூடுதல், தொகுதி, பிண்ணாக்கு, போர்
கூட்டல் - சேர்த்தல், வியங்கோண் முற்று
கூண்டு - பறவைக்கூடு
கூதளம் - கூதாளிச்செடி
கூதனம் - மறைத்தசொல்
கூதாளம் - கூதாளிச்செடி
கூதிர் - ஐப்பசி கார்த்திகையின் பருவம், காற்று, பனிக்காற்று
கூதை - காற்று, குளிர்காற்று
கூத்தர் - நாடகர்
கூத்தன் - உயிர், நடன்
கூத்தி - நாடகக்கணிகை
கூத்து - நடனம்
கூந்தல் - கமுகோலை, குதிரை மயிர், கூந்தற்பனை, பனை யோலை, பெண்மயிர், மயிற் றோகை
கூந்தற்பனை - ஓர் மரம்
கூபம் - கிணறு
கூபரம் - முழங்கை
கூப்பிடல் - வியங்கோண்முற்று, விளித்தல்

கூம்பல் - ஒடுங்கல், குமிழமரம், குவிதல், வியங்கோண்முற்று
கூம்பு - கூம்பென்னேவல், தேர்க் கொடிஞ்சி, பாய்மரம்
கூரம் - கொடுமை, பாகல், பொறாமை
கூரல் - புள்ளிறகு, பெண்மயிர், வியங்கோண்முற்று
கூரன் - நாய்
கூரை - சிற்றில், வினைமுற்று
கூர் - கூரென்னேவல், நுனி, மிகுதி
கூர்ச்சம் - தருப்பை
கூர்ச்சரம் - ஓர்தேயம்
கூர்தல் - ஆராய்தல், மிகுதல்
கூர்த்தல் - உவர்த்தல்
கூர்த்திகை - ஆயுதப்பொது
கூர்ப்பரம் - முழங்கை
கூர்ப்பு - உள்ளது சிறத்தல், கூர்த்தல்
கூர்மம் - ஆமை, பதினெண் புராணத்தொன்று
கூர்மன் - உரோமம்புளகித் திமைப்பிக்கும் வாயு
கூர்மை - நுண்மை
கூலம் - கடற்கரை, கடை வீதி, கரை, காராமணி, பசு, பல பண்டம், பாகல், மந்தி, மரை, வரம்பு, விலங்கின் வால்
கூலி - நாட்கூலி
கூவம் - கிணறு
கூவலர் - நூல்வல்லோர்
கூவல் - அழைத்தல், கிணறு, சொல்லுதல், பள்ளம், வியங் கோண்முற்று
கூவியர் - மடையர்
கூவிரம் - தேரிடக்கியம், தேர், தேர்க்கொடிஞ்சி, வில்வமரம்
கூவிரி - தேர்
கூவிளம் - வில்வமரம்
கூவிளை - வில்வமரம்
கூழை - இறகு, கடையின்மை, சேறு, நடு, படைவகுப்பு, படை பின்னணி, பெண்மயிர், பொன், மயிற்றோகை
கூழ் - சோறு, பயிர், பொன்
கூளி - உறவு, எருது, குற்றம், தொகுதி, பூதம், பெருங்கழுகு, பேய், பொலியெருது, வலி
கூளியர் - படைவீரர், வேடர்
கூறல் - சொல்லுதல், வியங்கோண் முற்று, விற்றல்
கூறு - கூறென்னேவல், பங்கு, பாதி
கூறுபாடு - பங்கு
கூறை - சீலை, வினைமுற்று
கூற்றன் - நமன்
கூற்று - காலன், சொல், நமன்
கூற்றுதைத்தோன் - சிவன்
கூனல் - கோணல், சங்கு, பிறை, வியங்கோண்முற்று
கூனன் - கூனுள்ளோன்
கூனி - ஓர் மீன், கூனுள்ளாள், வசவி
கூனிக்குயம் - அரிவாள்
கூனிரும்பு - அரிவாள்
கூனை - கருப்பஞ்சாறடுகூன், வினைமுற்று, வேள்விக்குண்டம்
கூன் - ஆந்தை, கூனென்னேவல், நத்தை, வளைவு

## கெ

கெடலணங்கு - மூதேவி
கெடவரல் - மகளிர் விளையாடல்
கெடி - ஊர்
கெடிலம் - ஓர் நதி
கெடுதல் - சாதல், சாய்தல்
கெடுத்தல் - அழித்தல்
கெண்டி - கெண்டிகை
கெண்டை - சேல்
கெம்பீரம் - நீராழம்
கெலித்தல் - வெல்லல்
கெழு - இடைச்சொல் (உ-ம்: வேல் கெழுதடக்கை), நிறம்

கெழுதகைமை - உரிமை
கெழுமல் - அமைதல், கற்றல், நிறைதல், முளைத்தல், வியங்கோண்முற்று
கெழுமை - கெழுமுதல், நிறம், வளமை
கெழுவல் - நிறைதல், வியங்கோண்முற்று
கெழுவுதல் - நிறைதல்
கெளிதம் - பெருங்கல்
கெளிறு - கெளிற்று மீன்

## கே

கேகம் - வீடு, மயிற்குரல்
கேகயம் - ஓர் தேசம், கேகயப்புள், மயில்
கேசம் - குதிரைமயிர், மயிர்ப் பொது
கேசரம் - பூந்தாது, மகிழமரம், வண்டு
கேசரர் - வித்தியாதரர்
கேசரி - சிங்கம்
கேசவம் - அட்டதசதரும நூலி லொன்று, வண்டு
கேசவற்றோழன் - அருச்சுனன்
கேசவன் - சோழன், திருமால், நிறைமயிருள்ளோன்
கேசி - திருமால், நிறைமயிருள் ளோன்
கேசிகன் - நிறைமயிருள்ளோன்
கேடகம் - பரிசை, பாசுறை, மலை செறிந்தவூர்
கேடம் - கிளியாறு
கேடிலுவகை - மோக்கம்
கேடு - கெடுதல்
கேட்டை - ஓர்நாள், மூதேவி, வினைமுற்று
கேணி - அகழி, கிணறு, குளம், துரவு
கேண்மை - உறவு, கண்ணோட்டம், நட்பு
கேதகை - தாழை
கேதம் - துன்பம்
கேதல் - அழைத்தல்
கேதனம் - பெருங்கொடி, விருதுக்கொடி
கேதாரகவுளம் - ஓரிராகம்
கேதாரம் - ஓர் நகரம், மயில்
கேது - அடையாளம், ஓர் கோள், விருதுக்கொடி
கேத்திரபாலன் - வயிரவன்
கேத்திரன் - பூமி
கேயம் - இசைப்பாட்டு
கேயூரம் - தோளணி
கேரண்டம் - காக்கை
கேரளம் - ஓர் தேசம்
கேரளன் - சேரன்
கேரளை - இசைப்பாட்டு
கேலம் - மகளிர் விளையாட்டு
கேவணம் - மணியைப்பதிக்குங்குழி
கேவலம் - ஒருங்கு, தனிமை, மோக்கம்
கேழல் - பன்றி
கேழ் - உவமை, ஒளி, நிறம்
கேளன் - தோழன்
கேளார் - பகைவர்
கேளி - தெங்கு, மகளிர் விளையாட்டு
கேள் - உறவு, கேளென்னேவல், சினேகம்
கேள்வன் - தலைவன்
கேள்வி - கல்வி, காது

## கை

கை - ஒப்பனை, ஒழுக்கம், கை, சிறுமை, படைவகுப்பு, யானைத் துதிக்கை

கைகுவித்தல் - கும்பிடல், கொப்பி கொட்டல்
கைகூப்பல் - கும்பிடல், கொப்பி கொட்டல், வணங்கல்
கைகேயன் - ஓரரசன்
கைகொட்டல் - கொப்பிகொட்டல்
கைகொள் - ஒழுக்கத்தின்றன்மை
கைக்கட்டி - கைக்கவசம்
கைக்கிளை - அண்ணத்தாற் பிறக்குமிசை, ஒருதலைக்காமம், யாழிலோர் நரம்பு
கைக்குன்று - யானை
கைக்கை - கசப்பு
கைசெய்தல் - புனைதல்
கைதவம் - துன்பம், பொய், வஞ்சனை
கைதவன் - பாண்டியன்
கைதூவாமை - ஒழியாவொழுக்கம்
கைதை - தாழை, வயல்
கைதைச்சுரிகையன் - மன்மதன்
கைதொடல் - சோறுண்டல்
கைத்தலம் - கை
கைத்தல் - அலங்கரித்தல், அலைத்தல், கசப்பு
கைத்தாய் - செவிலி
கைத்து - பொன், வெறுப்பு
கைபுனை - அலங்கரித்தல், கைபுனையென்னேவல், பூத்தொடுத்தல்
கைப்பற்றல் - கலியாணம், வியங்கோண்முற்று
கைப்பு - கசப்பு
கைப்புடை - கைக்கவசம்
கைப்புலி - யானை
கைம்மலை - யானை
கைம்மா - யானை
கைம்மீன் - அத்தநாள்
கைம்மை - கைம்பெண்
கையகப்படுத்தல் - ஒப்புக் கொடுத்தல்
கையடை - அடைக்கலம்
கையரிக்கொளஎல் - தேடல், வியங்கோண்முற்று
கையர் - கீழ்மக்கள், திருடர்
கையறல் - ஒழுக்கமின்மை, செயலின்மை, வியங்கோண்முற்று
கையறை - ஒழுக்கமின்மை, செயலின்மை
கையாறு - ஒழுக்கம், சரித்திரம், துன்பம்
கையுடை - கைக்கவசம்
கையை - தங்கை
கையொழியாமை - ஒழியாவொழுக்கம்
கையொழுக்கம் - கைதூவாமை
கைரவம் - குமுதம்
கைரிகம் - பொன்
கைவல்லியம் - மோக்கம்
கைவளை - கடகம்
கைவாரம் - வாழ்த்து
கைனி - கைம்பெண், அத்தநாள்

## கொ

கொக்கரித்தல் - குணலையிடல், கோழி முதலிய பறவையினொலி, விசேடம்
கொக்கரை - பாம்பு, வலம்புரிச் சங்கு, வலை, வில்
கொக்கு - ஓர் புள், குதிரை, செந்நாய், மாமரம், மூலநாள்
கொக்கோகம் - காமநூலிலொன்று
கொங்கணம் - ஓர் தேசம், பதினெண்பாடையிலொன்று
கொங்கன் - சேரன்
கொங்காரம் - குங்குமமரம்
கொங்கு - ஓர் தேசம், கள், பூந்தாது, வாசனை
கொங்கை - முலை
கொச்சி - ஓர் தேசம்
கொச்சை - இளைப்பு, வெள்ளாடு

கொஞ்சல் - மழலைச் சொல், வியங்கோண்முற்று
கொடி - காக்கை, கீழ்த்திசைப் பாலன்குறி, குமரனாடல், துகிற்கொடி, நீளம், படர் கொடி
கொடிச்சியர் - குறிஞ்சிநிலப் பெண்கள்
கொடிஞ்சி - தேர், தேர்மொட்டு
கொடிப்படை - முன்னணிப்படை
கொடிப்பாலை - ஓரிராகம், அதையெழுவகைப்பாலையிற் காண்க
கொடிறு - கதுப்பு, பூசநாள், யானைக்கதுப்பு
கொடுகொட்டி - சிவன்கூத்து, முருகனாடல்
கொடுத்தல் - ஈதல்
கொடுநுகம் - மகநாள்
கொடுமரம் - தனுவிராசி, வில்
கொடுமுடி - மலையினுச்சி
கொடுமை - கொடுங்கோன்மை, பொல்லாங்கு
கொடும்புலி - சிங்கம், சிங்க விராசி
கொடும்பை - அருவி, ஓர்பச்சிலை, குளம், தூம்பு
கொடுவரி - புலி
கொடுவாய் - ஓர்மிருகம், ஓர்மீன், வெறும்புறங்கூறல்
கொடுவாள் - அரிவாள்
கொடை - ஈகை, வினைமுற்று
கொடைமடம் - வரையாது கொடுத்தல்
கொடையாளன் - ஈகையாளன்
கொட்டம் - தொழுவம்
கொட்டல் - அடித்தல், அப்புதல், கும்மியாடல், வியங்கோண் முற்று
கொட்டி - ஓர் கிழங்கு, வினை யெச்சம்
கொட்டியம் - எருது
கொட்டில் - ஒதுக்கிடம், பசுக் கொட்டில்
கொட்டு - கொட்டென்னேவல், மண்வெட்டி
கொட்டை - ஓர்காதணி, பாதக் குறட்டின் குமிழ், மாப்பலா முதலிய மரத்தின் கொட்டை, வினைமுற்று
கொட்பு - சுழற்சி, திரிவு, வளைவு
கொணர்தல் - கொண்டுவரல்
கொண்கன் - தலைவன், நெய்தனிலத் தலைவன்
கொண்டக்கிரி - ஓர்பண்
கொண்டல் - கீழ்காற்று, முன் பனிப் பருவத்தின் காற்று, மேகம்
கொண்டாடல் - மெச்சல், வியங் கோண்முற்று
கொண்டி - கொள்ளை, வினை முற்று
கொண்டியம் - வெறும்புறங்கூறல்
கொண்டை - மயிர்முடி, வினை முற்று
கொண்மூ - ஆகாயம், மேகம்
கொதித்தல் - கொதித்தல், சினக் குறிப்பு
கொதுகு - கொசுகு
கொத்தம் - எல்லை
கொத்தல் - கொத்துதல், வியங் கோண்முற்று
கொத்தளி - பாய்
கொத்து - கொத்தென்னேவல், திரள்
கொந்தல் - கொந்துதல், சினக் குறிப்பு, பெருங்கோபம், வியங் கோண்முற்று
கொந்தளம் - கூத்தின்விகற்பம், பெண்மயிர், மயிர்க்குழற்சி
கொந்து - கொந்தென்னேவல், பூங்கொத்து
கொப்பரி - கொப்பரை
கொப்பரை - கொப்பரி

கொப்பு - மயிர்முடி, மரக்கொம்பு, மாதர்காதணியிலொன்று
கொப்புள் - குமிழி, கொப்புளம்
கொப்பூழ் - உந்தி
கொம்பர் - மரக்கொம்பு
கொம்பு - ஊதிடுகொம்பு, மரக்கொம்பு, யானைக்கொம்பு, விலங்கின்கொம்பு
கொம்மெனல் - அனுகரணவோசை, ஒலிக்குறிப்பு
கொம்மை - அகங்கைவிரித்துக்கொட்டல், அழகு, இளமை, திரட்சி, முலை, வட்டம், வலி
கொய்கை - அறுத்தல், பறித்தல்
கொய்தல் - அறுத்தல், கத்தரித்தல்
கொய்யடி - நாரை
கொய்யுளை - குதிரை
கொலு - சேவை
கொலை - கொல்லல்
கொலைஞர் - சண்டாளர், வேடர்
கொல் - அசைச்சொல் (உ-ம்: வருவர்கொல்வயங்கிழாஅய்), ஐயக்கிளவி (உ-ம்: இவ்வுருக் குற்றிகொல் மகன்கொல்), கொல்லென்னேவல், வருத்தம்
கொல்லம் - ஓர்தேயம்
கொல்லர் - கம்மாளர், கருமார்
கொல்லல் - கொல்லுதல், வியங்கோண்முற்று
கொல்லாவேதன் - அருகன்
கொல்லி - ஓர்பண், ஓர்மலை
கொல்லியவராடி - வராடித்திறத்தினொன்று
கொல்லிவெற்பன் - சேரன்
கொல்லெனல் - ஒலிக்குறிப்பு
கொல்லை - கொல்லை, சோலை, வினைமுற்று
கொவ்வை - கோவைக்கொடி
கொழிஞ்சி - பூவாது காய்க்குமரம்
கொழித்தல் - வாருதல்
கொழிப்பு - குற்றம், கொழித்தல்
கொழு - காறு, கொழுவென்னேவல்
கொழுத்தல் - மதத்தல்
கொழுநன் - எப்பொருட்குமிறைவன், தலைவன்
கொழுந்து - இளந்தளிர்
கொழுப்பு - நிணம்
கொழுமை - கொழுப்பு, நிறம், வளமை
கொழும்புகை - நறும்புகை
கொளகொளெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு
கொளுத்து - கொளுத்தென்னேவல், சந்து, மூட்டு
கொளுத்துதல் - தீப்பற்றுவித்தல், வீணை முதலிய வாசித்தல்
கொள் - ஓர்பயறு, கொள்ளென்னேவல்
கொள்கலம் - சாந்து, மடி, மாலை முதலிய பெய்கலம், பிழா
கொள்கை - அறிவு, குணம்
கொள்ளம் - குழைசேறு
கொள்ளல் - வாறுதல், வியங்கோண்முற்று
கொள்ளார் - பகைவர்
கொள்ளி - பகைவர்
கொள்ளி - நெருப்புறுவிறகு
கொள்ளை - கொள்ளை, மிகுதி, வினைமுற்று
கொறி - கொறியென்னேவல், செம்மறியாடு, மேடவிராசி
கொறித்தல் - கொறிக்குதல்
கொறுக்கச்சி - கொறுக்கை
கொறுக்கை - உயிர்ப்பு, கொறுக்கை
கொற்கை - ஓரூர்
கொற்றம் - அரசியல், வலி, வெற்றி
கொற்றவள்ளை - பகைவர்களது நாடழித்தல்
கொற்றவன் - அரசன்
கொற்றவை - துர்க்கை
கொற்றி - துர்க்கை, பசுவிளங்கன்று, வடுகி

கொற்று - கொற்றுத்தொழில்
கொன் - அச்சம் (உ-ம்: கொன் முனையிரவூர்), காலம் (உ-ம்: கொன்வரல்வாடை), பய னின்மை (உ-ம்: கொன்னே கழிந்தன்றிளமை), பெருமை (உ-ம்: கொன்னூர் துஞ்சினும் யாந்துஞ்சிலமே)
கொன்றை - கொன்றைமரம், வினைமுற்று
கொன்றைசூடி - சிவன்

## கோ

கோ - அம்பு, அரசன், ஆகாயம், ஆண்மகன், எருது, ஓரெழுத்து, கண், கோவன்னேவல், திசை, தெய்வலோகம், நீர், பசு, பசுப் பொது, பூமி, மலை, வச்சிராயுதம்
கோகநகம் - தாமரை
கோகநகை - இலக்குமி
கோகநதம் - தாமரை
கோகநதை - இலக்குமி
கோகம் - சக்கரவாகப் புள், செந்நாய்
கோகனம் - கையாந்தகரை, நிலக் கடம்பு
கோகிலம் - குயில், பல்லி
கோகு - கழுதை
கோகுலம் - குரங்கு, துளையுடைப் பொருள்
கோக்கள் - சிறந்தோர், பசுக்கள்
கோங்கு - ஓர்மரம்
கோசம் - ஆண்குறி, உறை, கரு கூலம்; தெரு, பண்டாரம், புத்தகம், மதிலுறுப்பு, முட்டை
கோசரம் - அடங்கல், ஊர், விடயம்
கோசலம் - ஆனீர், ஓர் தேசம், பதினெண்பாடையிலொன்று
கோசலை - ஓர் தேயம்
கோசனை - பேரொலி
கோசிகம் - சாமவேதம், சீலை, பட்டுச்சீலை
கோசிகன் - கௌசிகன்
கோசு - ஒரெல்லையளவு, தெரு
கோடகம் - குண்டிகை, குதிரை, நாற்றெருக் கூடுமிடம், புதுமை, முடியுறுப்பு
கோடணை - ஒலி, பேரொலி, கொடுமை, வாச்சியப்பொது
கோடம் - எல்லை
கோடரம் - எட்டிமரம், குதிரை, குரங்கு, சோலை, தேர்மொட்டு, மயிர்ச்சாந்து, மரக்கொம்பு, மரப்பொது, மரப்பொந்து
கோடல் - கொள்ளல், முறித்தல், வளைதல், வியங்கோண்முற்று வெண்காந்தள்
கோடவதி - வீணை
கோடாய் - செவிலித்தாய்
கோடி- ஓரெண், சீலை, புதுமை, முடியுறுப்பு, வினைமுற்று, வினையெச்சம்
கோடிகம் - அணிகலச்செப்பு, கெண்டிகை, சீலை, பூந்தட்டு
கோடியர் - நாடகர்
கோடிலம் - கோட்டம்
கோடீரம் - சடைமுடி
கோடு - அரனிருக்கை, ஊதிடு கொம்பு, கோடென்னேவல், சங்கு, நீர்க்கரை, மரக்கொம்பு, மலையினுச்சி, யானைக் கொம்பு, வஞ்சனை, வரம்பு, விலங்கின் கொம்பு
கோடை - காற்று, குதிரை, செங் காந்தள், முதிர்வேனிற்பருவத் தின் காற்று, மேல்காற்று, வினைமுற்று, வெண்காந்தள், வெயில், வேனிற்காலம்
கோட்டகம் - குளம்

கோட்டம் - அழுக்காறு, இடம், ஓர்மருந்து, குராமரம், குரம், கூட்டம், கோணல், கோயில், சுடுகாடு, தேவலோகம், நாடு, பசுக்கூடம், மருதநிலத்தூர், வயல், வளைவு, வாசனைப் பண்டம், வீணை

கோட்டல் - எழுதல், கோணு வித்தல், வியங்கோண்முற்று

கோட்டாலை - துன்பம்

கோட்டான் - கூகை, கோட்டான்

கோட்டி - அழகு, கூட்டம், கோபுரவாயில், சவை, வினை யெச்சம்

கோட்டியாழ் - நால்வகை யாழி லொன்று

கோட்டுமா - பன்றி, யானை

கோட்டை - அரண், வினைமுற்று

கோட்பதம் - மாட்டுக்குளம்பு

கோட்பறை - நெய்தற்பறை

கோட்பு - கொள்கை

கோணம் - குதிரை, முடுக்குத் தெரு மூக்கு, யானைத்தோட்டி, வளைந்தவள், வளைவு

கோணல் - கூன், மாறுபாடு, வளைவு, வியங்கோண்முற்று

கோணன் - கூனன்

கோணாமுகம் - சூழ்கழியிருக்கை

கோணாய் - ஆணரி, தோண்டான், வினைமுற்று

கோணி - கோணி, பதினாயிரங் கோடாகோடி, பன்றி, வினை யெச்சம்

கோணை - அழிவின்மை, கொடுமை, வினைமுற்று

கோண் - கொடுங்கோன்மை, கோணென்னேவல், வளைவு

கோண்டை - இலந்தைக்கனி

கோதண்டம் - வில்

கோதமம் - ஓர்தீவு

கோதனம் - பசுவின் கன்று

கோதா - உடும்பு, வினைமுற்று, வினையெச்சம்

கோதாவரி - விருத்தகங்கை

கோதி - கோதுவை, வினையெச்சம்

கோது - குற்றம், கோதென்னேவல், சக்கை

கோதுதல் - கோதல்

கோதை - ஒழுங்கு, காற்று, கௌதமநதி, சேரன், நெற் சுவை, பூமாலை, பெண், பெண் மயிர், முன்கைத்தோற் கட்டு, வினைமுற்று

கோத்தல் - கோவைசெய்தல்

கோத்தனி - முந்திரிகைக்கொடி

கோத்திரம் - குலம், பூமி, மலை

கோத்திரவம் - வரகு

கோத்திரை - பூமி, மலை

கோபதி - இடபம், இந்திரன்

கோபம் - சினம், தம்பலப்பூச்சி

கோபாலர் - இடையர்

கோபி - ஓர்மண், கோபியென் னேவல், சினமுள்ளோன்

கோபுரம் - கோபுர வாயில், நகரின் வாயில்

கோமகள் - தலைவி

கோமதை - ஓர் நதி

கோமயம் - ஆப்பி, ஆவிற்குரிய பொருள்

கோமளம் - இளமை, இளமைச் செவ்வி, பசு

கோமாட்டி - தலைவி

கோமாயு - நரி

கோமாள் - தலைவி

கோமான் - அரசன், குரு, சிறந்தோன், பன்றி, மூத்தோன்

கோம்பன் - சினக்குறிப்பு, பெருங் கோபம், வியங்கோண்முற்று

கோம்பி - பச்சோந்தி, வினை யெச்சம்

கோயில் - அரசன்மனை, கோயில்

கோரகம் - இளம்பூவரும்பு, வட்டில்

கோரகை - இளம்பூவரும்பு, குயில்

கோரங்கி - ஓர் பட்டணம்
கோரசம் - கவுதாரி
கோரண்டம் - குறிஞ்சி, மருதோன்றிமரம்
கோரம் - அச்சம், உட்டணம், குதிரை, கொடுமை, சீக்கிரம், சோழன் குதிரை, வட்டில்
கோரம்பர் - கழைக்கூத்தர்
கோரவாரம் - சந்தனம்
கோரிகை - அகப்பை
கோரை - கோரைப்புல்
கோலம் - அழகு, இலந்தைக் கனி, ஒப்பனை, தெப்பம், நீரோட்டம், பலகோலம், பறவை, பன்றி, பாக்கு, பீர்க்கு, மருட்பன்றி, விந்தை, நகர்
கோலம்புனைபெண் - வண்ணமகள்
கோலரம் - முளை
கோலல் - சூழ்ந்திடல், வளைத்தல், வியங்கோண்முற்று
கோலாகலம் - பேரொலி, விலங்கினாலெழுமொலி
கோலாங்கூலம் - முசு
கோலி - இலந்தைமரம், மயிர், வினையெச்சம்
கோல் - அஞ்சனக்கோல், அம்பு, அளந்திடுகோல், இலந்தை, எழுதுகோல், ஊன்றுகோல், குதிரைச்சம்மட்டி, செங்கோல், துலாராசி, துலாம், தூண்டில், தெப்பம், மரக்கொம்பு, யாழினரம்பு
கோவணம் - கௌபீனம்
கோவணன் - ஈசன், வசிட்டன்
கோவம் - கோபம், பொன்
கோவர் - இடையர்
கோவர்த்தனர் - இடையர்
கோவலர் - இடையர்
கோவலன் - கண்ணகி கணவன்
கோவிந்தர் - இடையர்
கோவிந்தன் - கண்ணன்
கோவெனல் - அனுகரணவோசை
கோவை - அணிவடம், ஓர்கொடி, கோத்தமாலை, கோத்தல், வினைமுற்று
கோவைசியர் - இடையர்
கோழி - உறையூர், கோழி
கோழிக்கொடியோன் - ஐயனார், முருகன்
கோழிவேந்தன் - சோழன்
கோழை - கொடுமை, கோழை
கோளகம் - பட்டுச்சீலை, மண்டலிப்பாம்பு, மிளகு
கோளகன் - கைம்பெண் பெற்ற பிள்ளை
கோளகை - மண்டலிப்பாம்பு, வட்டம்
கோளரி - சிங்கம்
கோளன் - கோளுரைப்போன்
கோளி - அத்திமரம், ஆலமரம், கொழிஞ்சிமரம், கொள்வோன்
கோளிகை - பெட்டைக்குதிரை
கோள் - இடையூறு, குணம், கொலை, கொள்ளல், கோள், தீமை, நவக்கிரகம், நாள், புறங்கூறல், பொய், வலி
கோறல் - கொல்லல்
கோற்கொடி - இலந்தை, கரை
கோற்றேன் - தேன்கூடு
கோன் - அரசன், எப்பொருட்கு மிறைவன்

## கௌ

கௌசலம் - ஓர்தேசம்
கௌசிகம் - ஓர்பண், கூகை, சாமவேதம், பட்டுச்சீலை, விளக்குத்தண்டு
கௌசிகன் - இந்திரன், பாம்பாட்டி, விசுவாமித்திரன்
கௌடம் - ஓர்கொடி, ஓர் தேயம்

கௌண்டர் - சண்டாளர், புலையர்
கௌண்டிகர் - தோல்வினைஞர்
கௌதமநதி - கோதாவரியின் பிரிவு
கௌதமன் - சத்தவிருடிகளிலொருவன்
கௌதமி - ஓர்பசு, கோதாவரி, கோரோசனம்
கௌதம் - சிச்சிலிக்குருவி
கௌத்துவம் - அந்தநாள், பதும ராகம், மாணிக்கம்
கௌந்தி - குந்திதேவி, தவப்பெண்
கௌப்பு - பெருமை
கௌமாரம் - அட்டதசகீத புராணத்தொன்று, ஓர் சமயம், ஓர் பருவம்
கௌரம் - வெண்மை
கௌரவர் - குருகுலவேந்தர்
கௌரி - காளி, துர்க்கை, பத்தாண்டுப்பெண், பார்வதி
கௌரிசேயன் - விநாயகன்
கௌரிநந்தனன் - குமரன்
கௌரியன் - பாண்டியன்
கௌவல் - பற்றல், வியங்கோண் முற்று
கௌவை - ஆயிலியநாள், எள்ளிளங்காய், ஒலி, கள், துன்பம், பழிச்சொல், வினைமுற்று
கௌளம் - ஓரிராகம்
கௌளி - பல்லி

## ச

சகசம் - உண்மை, வட்டில்
சகசரி - பொன்னிறங்கலந்த கரும் பூவுள மருதோன்றி மரம், வாடாக்குறிஞ்சி
சகடம் - உரோகணி, ஊர்க்குருவி, பண்டி, பாண்டில் பூண்டவூர்தி, வட்டில்
சகடு - உரோகணி, சந்தேகம், பண்டி
சகடை - பண்டி, முரசு, வாச்சியம்
சகண்டை - முரசு, வாச்சியம்
சகதி - சேறு, பொல்லாநிலம்
சகநாதன் - கடவுள்
சகம் - ஓர்தேசம், சட்டை, பூமி, மார்கழிமாதம்
சகரன் - முதலெழுவள்ளலி லொருவன்
சகலகம் - வெள்ளாட்டுக்கடா
சகலமங்கலை - பார்வதி
சகலம் - எல்லாம்
சகலவியாபி - கடவுள்
சகலன் - ஓர்குடியிற்கொண்டோன்
சகல் - கொசுகு
சகாயம் - துணை
சகாயன் - தோழன்
சகி - சகியென்னேவல், தோழி
சகித்தல் - பொறுத்தல்
சகுடம் - சேம்பு
சகுந்தம் - கழுகு, பறவை
சகுலி - ஒலி, மீன்
சகுனம் - கிழங்கு, நிமித்தம், பறவை
சகுனி - துரியோதனன் மாமன், நிமித்தம் பார்ப்போன், பறவை
சகோதரி - உடன்பிறந்தாள்
சகோரம் - சக்கரவாகப்புள், நிலா முகிப்புள்
சகோரயாழ் - நால்வகை யாழில் ஒன்று
சக்கரபாணி - துர்க்கை, விட்டுணு
சக்கரம் - கடல், சக்கரவாகப்புள், தேருருளை, பிறப்பு, பூமி, பெருமை, மலை, மலை மல்லிகை, வட்டம்
சக்கரவர்த்தி - மற்றொருவரைப் பணியாது தனியாள்வோன்

சக்கரவாளம் - சக்கரவாளகிரி, வட்டவடிவு
சக்கரம் - இந்திரன், விட்டுணு
சக்கராயுதத்தி - துர்க்கை
சக்காரம் - தேமா
சக்கிரி - அரசன், குயவன், செக்கான், திருமால், தேவேந்திரன், பாம்பு
சக்கு - கண்
சக்கை - கோது
சஃகுல்லி - அப்ப வர்க்கம்
சங்கதம் - தேவர்மொழி, நட்பு, பொருத்தல்
சங்கநிதி - சங்குருவாய்க் கிடக்கும் பொன்
சங்கபதம் - அட்டாதசதரும நூலி லொன்று
சங்கபாலன் - அட்டமா நாகத் தொன்று
சங்கமம் - கலத்தல், புணர்ச்சி
சங்கமேந்தி - திருமால்
சங்கம் - ஓர் நிதி, கணைக்கால், கூடுதல், கூட்டம், சங்கு, சவை, நூறாயிரங்கோடி, நெற்றி, படையிலோர் தொகை, புலவர்
சங்கரம் - கலப்பு, போர்
சங்கரர் - போர்செய்வோர்
சங்கரன் - சிவன்
சங்கராபரணம் - ஓரிசை
சங்கரி - சங்கரியென்னேவல், பார்வதி
சங்கரித்தல் - அழித்தல்
சங்கலிதம் - கலத்தல்
சங்கறுப்போர் - வளைபோழ்நர்
சங்கன்னம் - நரம்பு
சங்காசம் - உவமை
சங்காதம் - அழித்தல், ஐந்து தர மீரடிகளையுமொருங்கெடுத்து வைத்து நடித்தல், ஓர் நரகம், கூட்டம்
சங்காரம் - அழித்தல்
சங்கிரந்தனன் - இந்திரன்
சங்கிரம் - காடு
சங்கிராமம் - போர்
சங்கினி - நால்வகைப் பெண்ணி லொருத்தி
சங்கீதம் - வாச்சியத்தோடும் பாடுதல்
சங்கீரணம் - கலப்பு
சங்கீரதம் - புணர்ச்சி
சங்கு - கணைக்கால், கூடுதல், கைவளை, சங்கு, நெற்றி, படைக்கலம்
சங்குமணி - அக்குமணி
சங்கூபிலம் - அட்டாதசகீத புராணத்தொன்று
சங்கேதம் - குழூஉக்குறி
சங்கை - அச்சம், ஐயம்
சங்கோசம் - அடக்கம்
சசம் - முயல்
சசி - இந்திராணி, கர்ப்பூரம், சந்திரன்
சசிதரன் - சிவன்
சசிமணாளன் - இந்திரன்
சச்சம் - மெய்
சச்சிதானந்தன் - கடவுள்
சச்சு - நீர்ச்சுண்டி, பறவைமூக்கு
சஞ்சயம் - கூட்டம்
சஞ்சயன் - வியாசர் சீடரிலொருவன்
சஞ்சரிகம் - வண்டு
சஞ்சலம் - அசைவு, மனக்கவலை மின்னல்
சஞ்சலை - மின்னல்
சஞ்சாளிகம் - வண்டு
சஞ்சிதம் - ஈட்டியது
சஞ்சிவிகரணி - புளியமரம், மூர்ச்சை தீர்த்துயிர் தருமருந்து
சஞ்சீவி - சஞ்சீவினி
சஞ்சீவினி - மூர்ச்சை தீர்த்துயிர் தருமருந்து
சஞ்சு - பறவை மூக்கு
சடகம் - ஊர்க்குருவி
சடங்கம் - ஆறுசாத்திரம்
சடங்கு - செய்முறை

சடசடெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு
சடம் - உடல், கொடுமை, பொய்
சடரம் - வயிறு
சடாதரி - பார்வதி
சடாமகுடன் - சிவன்
சடாரி - கவசம்
சடிதி - சீக்கிரம்
சடிலம் - குதிரை, சடை, நெருக்கம்
சடு - ஆறு
சடை - ஓர் பூடு, சடை, வேர்
சடைச்சி - நெட்டி, பாசி
சடையோன் - சிவன், வீரபத்திரன்
சட்டகம் - உடல், மானுடர் படுக்கைப்பொது, வடிவு
சட்டம் - கதவிற்பலகை போல்வன, திட்டம்
சட்ட - ஓர்திதி, ஓர்பாத்திரம், சட்டியென்னேவல்
சட்டித்தல் - அழித்தல், கொல்லல்
சட்டை - அங்கி
சட்பம் - அறுகு, மயிர்
சண்டமாருதம் - பெருங்காற்று
சண்டம் - கொடுமை, சீக்கிரம், பேடு
சண்டன் - காலன், சிவன், சூரியன், நமன், பேடி
சண்டிகை - காளி, துர்க்கை
சண்டை - போர்
சண்பகம் - செண்பகம்
சண்பனி - யோகினி
சண்முகன் - குமரன்
சதகம் - ஓர் பிரபந்தம்
சதகோடி - ஓரெண், வச்சிராயுதம்
சதக்கிருதன் - இந்திரன்
சததம் - எப்போழ்தும்
சதபத்திரி - தாமரை
சதமகத்தான் - இந்திரன்
சதமுனை - வச்சிராயுதம்
சதம் - அறுபடுபயிர், இலை, இறகு, நிலைமை, நூறு
சதயம் - ஓர் நாள்
சதனம் - இலை, இறகு, வீடு
சதா - எப்போழ்தும், மரக்கலம்
சதாகதி - காற்று, மாறாநடப்பு
சதாசிவம் - முடியாநன்மை
சதாசிவன் - சிவன்
சதாநந்தன் - கடவுள், பிரமன்
சதாபதி - மரவட்டை
சதாபலம் - எலுமிச்சை
சதாபுசம் - வண்டு
சதி - உரோகணி, கற்புடையாள், சோறு, தாளவொத்து, பார்வதி, வஞ்சனை, வட்டம்
சதிபதி - சிவன்
சதிரிசம் - உவமை
சது - நான்கு
சதுக்கம் - நாற்றெருக் கூடுமிடம்
சதுமுகன் - அருகன், பிரமன்
சதுரங்கசேனை - காலாள் தேர் பரியானை
சதுரங்கம் - ஓர்வகைச் சூதாடு கருவி
சதுரர் - நகரப்பதியோர்
சதுரன் - நகரப்பதியோன்
சதுரை - சதுரங்கப்பட்டணம்
சதுர்த்தர் - சூத்திரர்
சதுர்த்தல் - அப்புதல்
சதுர்ப்புயன் - திருமால்
சத்தம் - ஏழு, ஒலி
சத்தி - கக்கல், குடை, கைவேல், சத்தியென்னேவல், சூலம், தேரிடக்கியம், பார்வதி, வலி, விருதுக்கொடி, வெண்குடை
சத்திகம் - குதிரை
சத்தியம் - சபதம், மெய்
சத்தியோசாதம் - சிவனைமுகத்தொன்று
சத்திரம் - அன்னசத்திரம், கைவிடாப்படை, கைவேல், பாணம், யாகம், வெண்குடை
சத்து - உண்மை
சத்துவம் - வலி
சத்தை - இருக்கை

சநகன் - சீதையின் றகப்பன், தகப்பன்
சநநம் - பிறப்பு
சநநி - தாய்
சநபதம் - நாடு
சநலோகம் - மேலேழுலகிலொன்று
சநற்குமாரம் - அட்டாதசவுப புராணத்தொன்று
சநார்த்தனன் - திருமால்
சநி - ஓர் கிரகம், சநியென்னேவல்
சநிப்பு - பிறப்பு
சந்தணி - சந்தனம்
சந்ததம் - எப்போழ்தும்
சந்ததி - சந்தானம்
சந்தநுமுன்மகன் - வீட்டுமாச்சாரி
சந்தப்பா - இருபத்தாறெழுத்து நான்கடியாக வரும் பா
சந்தம் - அழகு, கவியின்வண்ணம், சந்தனம், நிறம், வடிவு
சந்தனம் - சந்தன மரம்
சந்தனுமுன்மகன் - வீட்டுமாச்சாரி
சந்தாபம் - வெப்பம்
சந்தானகரணி - முறிந்தவுறுப்புக் களை யிணைக்குமருந்து
சந்தானம் - ஐந்தருவிலொன்று, சந்ததி
சந்தி - இசைப்பு, சக்தியென் னேவல், பலதெருக் கூடுமிடம், மாலை நேரம், மூங்கில்
சந்திமான் - இடையெழு வள்ளலி லொருவன்
சந்திரகம் - பொன்வண்டு, மயிற் றோகைக்கண்
சந்திரகாந்தம் - சந்திரமுகத்துநீர் விடுங்கல்
சந்திரசேகரன் - சிவன்
சந்திரதிலகம் - சந்தனம்
சந்திரம் - கர்ப்பூரம், பொன்
சந்திரன் - நிலவு
சந்திரிகை - சந்திரனொளி
சந்தில் - சனி
சந்து - சந்தனம், நாற்றெருக் கூடு மிடம், மூட்டு
சந்தை - பலவூர்மனிதரோரூரி லோர்தினத்திற் கொள்ளல், விற்றற்பொருட்டுக் கூடுங் கூட்டம்
சந்நத்தன் - போருக்காயத்தமானோன்
சந்நிபம் - உவமை
சந்நியம் - போர்
சந்மம் - பிறப்பு
சந்மானம் - உபசாரம்
சந்மிநி - காளி யேவல் செய்வோன்
சபதம் - ஆணை
சபதி - விரைவு
சபம் - ஆலம்வீழ் முதலிய, மூங்கில்
சபரம் - கெண்டை மீன்
சபலம் - இரதம், இலாபம், நிறை வேறல், மின்னல்
சபலை - மின்னல்
சமங்கை - வறட்சுண்டி
சமணர் - அமணர்
சமண் - சமணமதம்
சமதன் - சங்காத்தி
சமத்தம் - எல்லாம்
சமப்பால் - நெய்தனிலம், முல்லை நிலம்
சமமுகம் - தியானத்தின் போற்றலையசைவின்மை
சமம் - உவமை, நடு, போர்
சமயம் - காலம், சைவமுதலிய சமயம்
சமரசம் - சமாதானம்
சமரம் - போர்
சமரி - துர்க்கை, பாம்பு
சமர் - போர், முட்பன்றி
சமர்த்தன் - திண்ணியன்
சமவாயம் - கூட்டம், தற்கிழமை
சமழ்த்தல் - நாணுதல், வருத்தல்
சமழ்ப்பு - நாணம்

சமன் - காலன், நடு, நமன்
சமாசன் - தொகைப்படுவது
சமாதி - அட்டயோகத்தொன்று, சாவு
சமாலம் - பீலிக்குஞ்சம்
சமானகரணி - இரணத்தழும்பு தீர்க்குமருந்து
சமானம் - உவமை
சமானன் - நாபியினின்று மெழும் வாயு
சமி - அருகன், சமியென்னேவல், வன்னிமரம்
சமிதி - போர்
சமிதை - ஓமவிறகு
சமித்தம் - ஓமமண்டபம்
சமித்தல் - பொறுத்தல்
சமியன் - அருகன்
சமீரணன் - காற்று
சமீரம் - போர்
சமீரன் - காற்று
சமு - படையிலோர் தொகை
சமுதாயம் - கூட்டம்
சமுத்திரம் - கடல், படையிலோர் தொகை, பத்திலட்சங்கோடி
சமூகம் - குட்டம், சவை
சமை - சமையென்னேவல், வருடம்
சமைத்தல் - அமைத்தல், செய்தல்
சம் - அன்பு
சம்பகம் - செண்பகம்
சம்படம் - சீலை, சோம்பல்
சம்பம் - மரவயிரம், வச்சிராயுதம்
சம்பரம் - எண்காற்புள், சீலை, நீர்
சம்பரன் - ஓரிராக்கதன்
சம்பராரி - இந்திரன், மன்மதன்
சம்பவம் - பிறப்பு
சம்பளம் - கரை, பண்டாரம், பொறாமை, வழிச்சேறற்கு வேண்டும் பொருள், வழியுணவு
சம்பாகம் - நாடு
சம்பீரம் - எலுமிச்சை
சம்பு - அயன், அரன், அரி, அருகன், இரவி, எலுமிச்சை, ஓர்புல், நரி, நாவல்
சம்பூதம் - பிறப்பு
சம்பை - ஓர்தாளம், மின்னல்
சம்போகம் - புணர்ச்சி
சம்மதம் - கோட்பாடு
சம்யோகம் - புணர்ச்சி
சம்வற்சரம் - வருடம்
சம்வாகம் - மலைமேலேற்றியவூர்
சயகண்டை - பரந்தவட்டிகை
சயகம் - பூவரும்பு
சயந்தனம் - தேர்
சயந்தன் - இந்திரன்மகன்
சயமகள் - துர்க்கை, மிதுனவிராசி
சயம் - ஆம்பல், இரவி, கூட்டம், கை, சருக்கரை, மாலை, வெற்றி
சயம்பு - அருகன், கடவுள், தானாகவாதல்
சயனம் - நித்திரை, நித்திரை செய்யுமிடம்
சயிரேகம் - மேகவண்ணப்பூவுள மருதோன்றிமரம்
சயை - சந்திரன் மூன்றாம் பக்கம்
சய்யோகம் - புணர்ச்சி
சரகம் - தேனீ
சரசம் - இனியகுணம்
சரசி - இனியகுணி
சரசு - குளம்
சரடம் - ஓணான்
சரடு - நூலிழை முதலிய
சரணம் - அடைக்கலம், கால், மயிற்றோகை, மருதநிலத்தூர், வீடு
சரணாயுதம் - கோழி
சரண் - அடைக்கலம், கால்
சரண்புகல் - அடைக்கலம்புகல்
சரதம் - மெய்
சரபம் - எண்காற்புள், கும்பாடு, வரையாடு
சரமணி - அடைப்பட்டிகை
சரமம் - முடிவு

சரம் - அம்பு, கொறுக்கை, நடையுளபொருள், நாணல், மணிவடம், மாலை
சரவணபவன் - குமரன்
சரவணம் - கொறுக்கை, நாணம்
சரவை - மாலை
சரளம் - ஒழுங்கு, தகுதி
சரளி - சத்தசுரங்களையு மாரோகண மவரோகண மாகப் பயிலல்
சரற்காலம் - மாரிகாலம்
சராகம் - வண்டு
சராகை - வட்டில்
சராசரம் - நடையுள்ளதுமில்லது
சராசனம் - வில்
சராவம் - அகல், சலாகை
சரி - ஒப்பு, கூட்டம், கைவளை, சரியென்னேவல், மலைச்சாரல், வழி
சரிகை - சரிதல், பொன் முதலிய வற்றின் சரிகை
சரிதம் - சரித்திரம்
சரிதல் - சாய்தல்
சரிதை - ஒழுக்கம், சரித்திரம்
சரித்தல் - சரியச்செய்தல்
சரித்திரம் - ஒழுக்கம்
சரியை - ஒழுக்கம், பிச்சை, வினைமுற்று, சிவபூசை யியல்பினொன்று
சரிவு - சாய்பு
சரீரம் - உடல்
சரு - சோறு, தேவருணவு
சரகு - உயர்ந்தவிலை
சருக்கம் - இலக்கியச்செய்யுட் கூறுபாடு
சருத்தி - தோிடக்கியம், விருதுக் கொடி
சருமம் - தோல், தோற்பாய்
சருமர் - சக்கிலியர்
சருவம் - எல்லாம், பானை
சருவரி - இருள்
சருவல் - சைகைசெய்தல், வியங் கோண்முற்று
சருவாணி - பார்வதி
சருவேச்சுரன் - கடவுள்
சரேந்திரன் - வில்லின் வல்லோன்
சரேலெனல் - ஒலிக்குறிப்பு
சரை - நரை
சரோசம் - தாமரை
சரோருகம் - தாமரை
சர்க்கம் - சருக்கம்
சர்ப்பம் - பாம்பு
சர்வதா - எப்பொழுதும்
சலகம் - நீராடல்
சலசம் - தாமரை
சலசரம் - மீனவிராசி, மீன்
சலலோசனன் - திருமால்
சலசை - இலக்குமி
சலஞ்சலம் - வலம்புரிச்சங்கு
சலதரம் - குளம், மேகம்
சலதி - கடல்
சலநிதி - கடல்
சலபம் - விட்டிற்பறவை
சலம் - அசைவு, சலஞ்சாதித்தல், தணியாக்கோபம், நீர், பொய், முட்பன்றிமுள்
சலராதி - கடல்
சலலம் - முட்பன்றிமுள்
சலலி - முட்பன்றிமுள்
சலவர் - நெய்தனிலமாக்கள்
சலனம் - அசைவு, காற்று
சலனன் - காற்று
சலன் - கால்
சலாகை - ஆகன்மணி, ஈட்டி, ஊசிக்காந்தம், சலாகு
சலாங்கு - பொய்யாப்புள்
சலாம் - வணங்கல்
சலித்தல் - இளைத்தோய்தல், ஒலித்தல், சலனமுறல்
சலியாமை - அசைவின்மை
சலிலம் - நீர்
சல்லகி - ஆத்திமரம்

சல்லடை - தானிய முதலிய வற்றைச் சல்லுங்கருவி
சல்லபம் - முட்பன்றி
சல்லரி - பம்பைமேளம்
சல்லாபம் - வினாவும் விடையுங் கூடிய சொல்
சல்லி - தூக்கங்கள்
சல்லியகரணி - ஆயுதத்தாற்பட்ட காயாமாற்று மருந்து
சல்லியம் - ஆயுதநுனிமுள், எலும்பு, செஞ்சந்தனம், பாணம், முட்பன்றி
சல்லியன் - சுக்கிரன், நகுல சகாதேவர் மாமன்
சவட்டல் - அழித்தல், துவட்டல், மெல்லல், வியங்கோண்முற்று
சவம் - சீக்கிரம், பிசாசம், பிணம்
சவரம் - சாமரம்
சவரர் - வேடர்
சவரி - சாமரம்
சவலம் - பயன்
சவளம் - ஈட்டி
சவி - அழகு, ஒளி, சரமணிக் கோவை, செவ்வை
சவிதா - சூரியன்
சவை - அம்பலம், கூட்டம், புலவர்
சவ்வியசாசி - அருச்சுனன்
சவ்வியம் - வலப்பக்கம்
சவ்வீரம் - ஓர்தேசம், ஓர் மருந்து
சழக்கு - குற்றம்
சளசளெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு
சளுக்குவேந்தர் - சாளுவர்
சளுகம் - அட்டை
சறுக்கல் - வழுக்கல், வியங்கோண் முற்று
சற்சலம் - தெளிநீர்
சற்று - அற்பம்
சனம் - இனம், கூட்டம்
சனித்தல் - பிறத்தல்
சன்மானம் - உபசாரம்
சன்னி - சீதநோய்

## சா

சா - ஒரெழுத்து, சாவென்னேவல்
சாகசம் - மெய்ம்மை, யானை, வீரம்
சாகம் - ஆடு, கீரை, சிறுகீரை, தேக்கமரம், வெள்ளாட்டுக் கடா
சாகரம் - கடல், துயிலொழிதல், பதினாயிரங் கோடா கோடி
சாகரி - ஓரிராகம்
சாகாடு - உரோகணி, பண்டி
சாகாதுண்டம் - அகில்
சாகாமிருகம் - குரங்கு
சாகி - மரப்பொது
சாகினி - சிறுகீரை, சேம்பு
சாகேதம் - அயோத்தி
சாகை - இலை, சாதல், மரக் கொம்பு, வட்டில், வினைமுற்று, வேதம்
சாக்கியம் - புத்தமதம்
சாக்கியர் - புத்தர்
சாக்கை - கருமத்தலைவன், புரோகிதன்
சாசனம் - அரசனாணை, ஆணை, இறையிறுக்காதவூர், தண்டனை, தானபத்திரிகை, வலையர்சேரி
சாசிபதம் - தவளை
சாசுவதம் - அசையாநிலை, நிச்சயம்
சாடி - ஆண்மயிர், கும்பவிராசி, சீலை, தாழி, வினையெச்சம்
சாடிலி - தசைதின்போன்
சாடு - சாடுவென்னேவல், சாதுரியம், பண்டி
சாட்டியம் - வஞ்சம், வருத்தம்
சாட்டுவலம் - பசும்புற்றரை
சாணம் - ஆப்பி, சாணைக்கல்
சாணை - சாணைக்கல்
சாண் - பன்னீரங்குலவளவு

சாதகம் - சனனமெழுதல், துணைக் காரணம், பூதகணம், வானம் பாடி
சாதகும்பம் - பொன்
சாதம் - உண்மை, சோறு, இறப்பு, பூதம்
சாதரூபம் - பொன்
சாதரூபி - அருகன்
சாதல் - இறத்தல்
சாதவாகனன் - ஐயனார்
சாதவேதா - நெருப்பு
சாதனம் - அடையாளம், இடம், ஊர்
சாதனை - சலஞ்சாதித்தல், பொய்
சாதாரணம் - பொது
சாதாரி - ஓர்பண், முல்லை நிலத்திராகம்
சாதி - கள், குலம், சாதியென் னேவல், சிறுசம்பகம், தேக்க மரம், பிரம்பு, மரப்பொது, வினைமுற்று
சாதிக்காய் - பஞ்சவாசத்தொன்று
சாதிப்பாய் - சாதியென்னேவல், பிரப்பம்பாய்
சாது - அருகன், சற்குணத்தோன்
சாதுர்ப்பாகம் - நாலத்தொன்று
சாதேவம் - குழிநாவல்
சாதேவன் - பஞ்சபாண்டவரிலொருவன்
சாத்தல் - அப்புதல், வியங்கோண் முற்று
சாத்தன் - அருகன், ஐயனார், கண்டிப்போன், வயிரவன்
சாத்தியம் - சாதிக்கத்தக்கது
சாத்தியவதேயர் - வியாசர்
சாத்திரம் - நூல்
சாந்தம் - குளிர்ச்சி, சந்தனம், சாணி, பொறுமை
சாந்தன் - அருகன், புத்தன்
சாந்தாற்றி - கால்செய்வட்டம், சிற்றாலவட்டம், பீலிக்குஞ்சம்
சாந்தி - கழிப்பு
சாந்திரம் - நிறைவு, நெருக்கம்
சாந்து - சந்தனம், சாந்தம், பராகம்
சாந்தை - கங்கை, பூமி
சாபம் - சபித்தல், தனுவிராசி, வில்
சாபலன் - ஆட்டுவாணிபன்
சாபறை - நெய்தனிலப் பறை
சாப்பை - புற்பாய்
சாமந்தம் - ஓரிராகம்
சாமந்தர் - அமைச்சர்
சாமம் - ஒருபாயம், கருமை, பச்சை, மூன்றாம் வேதம், யாமம்
சாமரம் - கவரி
சாமளம் - பச்சை
சாமன் - காமன் றம்பி, புதன்
சாமானியம் - பொது
சாமி - அருகன், கடவுள், குரத்தி, குரு, தலைவன், பொன், முருகன், மூத்தோன்
சாமீகரம் - பொன்
சாமுண்டி - காளி
சாமை - ஓர் பயிர்
சாம்பர் - சாம்பல்
சாம்பல் - ஒடுங்கல், சாம்பல், பழம்பூ, வியங்கோண்முற்று
சாம்பவம் - அட்டாதசவுப புராணத்தொன்று
சாம்பவன் - அரன், இராமன், படைத்தலைவரிலொருவன்
சாம்பவி - பார்வதி
சாம்பு - சாம்பென்னேவல், பறை
சாம்புதல் - ஒடுங்குதல், கூம்புதல்
சாம்பூநதம் - பொன்
சாயகம் - அம்பு, வாள்
சாயங்காலம் - அந்திப்பொழுது
சாயம் - அந்திநேரம், நிறம்
சாயரி - ஓர்பண்
சாயல் - அழகு, ஒப்பு, சாயை, நிறம், நுண்மை, மனிதர் படுக்கை, மேன்மை, வியங் கோண்முற்று

சாயவேளாகொல்லி - கொல்லித் திறத்தினொன்று
சாயனம் - கள்
சாயாகவுளம் - ஓரிசை
சாயாக்கிரகம் - கேது
சாயாபதி - சூரியன்
சாயாபுத்திரன் - சனி
சாயானதம் - ஓந்தி
சாயை - சூரியன் றேவி, நிழல், நிறம், வினைமுற்று
சாய் - ஓர் வகைக் கோரை, சாயென்னேவல்
சாய்தல் - இரிதல், நுண்மை
சாய்த்தல் - சாயச்செய்தல்
சாய்ப்பு - தாழ்வு
சாய்வு - சாய்தல், தாழ்வு
சாரங்கம் - ஓரிசை, சாதகப் புள், மான், மேகம், யானை, வண்டு
சாரங்கி - ஓர் யாழ்
சாரசம் - குருகு, தாமரை, வெண்ணாரை
சாரணர் - சமணமுனிவர், வேவு காரர்
சாரதி - தேர்ப்பாகன், புலவன்
சாரமேயன் - நாய்
சாரம் - இனிமை, ஓர்மருந்து, கிரகசாரம், நடை, நிலா முகிப்புள், மரவயிரம், மேடு
சாரர் - வேவுகாரர்
சாரர் - கிட்டல், மருத யாழிசை, மலைப்பக்கம், வியங்கோண் முற்று
சாரி - உலாப்போதல், சூதாடு கருவி, சூறைக்காற்று
சாரிகை - கவசம், சுங்கம், சுழல் காற்று, சூதாடுகருவி, நாகண வாய்ப்புள், வட்டமாயோடல்
சாரித்திரம் - ஒழுக்கம்
சாரியை - சார்ந்துவருமிடைச்சொல்
சாரு - கிள்ளை
சாருகன் - கொலைசெய்வோன்
சாரூபம் - ஓர்பதவி
சாரை - ஓர்சாதிப் பாம்பு, வினை முற்று, நீளமானவரை
சார் - அழகு, இடம், சாரென் னேவல்
சார்ங்கபாணி - திருமால்
சார்ங்கம் - திருமால் வில்
சார்ச்சி - சார்தல்
சார்தல் - கலத்தல், கிட்டல்
சார்த்தூலம் - புலி
சார்ந்தார் - உறவோர்
சார்ந்தோர் - உறவோர்
சார்பறுத்தல் - துறவு
சார்பிலார் - பகைவர், முனிவர்
சார்பு - சார்வு, வினையெச்சம்
சார்வபூமம் - வடதிசை யானை
சார்வபூமன் - ஒருவனைப் பணியாதுலகாள்வோன்
சார்வாரம் - கச்சின் கடைக்கயிறு, குன்றானை
சார்வு - ஆசைப்பெருக்கம், இடம், சார்பு, பற்று
சால - மிகுதி, வினையெச்சம்
சாலகடங்கடர் - இராக்கதர்
சாலகம் - அதலலோகம், இளம் பூவரும்பு, சலதாரை, சிலந்திப் பூச்சி வலை, பலகணி, பறவைக் கூடு வலை
சாலம் - அரண், ஆச்சாமரம், இளம் பூவரும்பு, கூட்டம், சவை, செடி, பலகணி, மரப் பொது, மாயவித்தை, வலை, விலங்கின் கூட்டம்
சாலர் - நெய்தனிலமாக்கள்
சாலி - அருந்ததி, கவசம், கள், நெல்
சாலிகை - கவசம்
சாலினி - கள்வாணிச்சி, தேவர்க் காடுவள்
சாலிவாகனன் - கலிசகாத்தன்
சாலூரகம் - சாதிக்காய்

சாலூரம் - தவளை, மேன்மை
சாலேகம் - சந்தனம், சிந்தூரம், பலகணி, பூவரும்பு
சாலேயம் - நெல் விளையுநிலம்
சாலை - அரசன்மனை, அறத்தின் சாலை, குதிரைப்பந்தி, சாலை, வினை முற்று
சால் - சாலென்னேவல், நீர்ச்சால் படைச்சால் மிகுதி
சால்பு - ஊக்கம், கல்வி, குணம், மாட்சிமை, மேன்மை, வினை யெச்சம்
சால்வம் - ஓர் தேசம்
சாவகம் - பதினெண்பாடையிலொன்று
சாவகர் - சமணர்
சாவகன் - சனி
சாவகன் குறிஞ்சி - குறிஞ்சித் திறத்தினொன்று
சாவித்திரி - சரச்சுவதி
சாவு - சாவு, பிசாசம்
சாவேரி - ஓரிராகம்
சாழல் - ஓர் விளையாட்டு, கரடி
சாளரம் - பலகணி
சாளிகை - வண்டு
சாறு - கள், குலை, கொத்து, திருவிழா
சாற்றல் - சொல்லுதல், வியங் கோண்முற்று
சாற்றுதல் - சொல்லுதல்
சானகம் - வில்
சானகி - ஓரரக்கன், சீதை, மூங்கில்
சானவி - கங்கை
சானு - மலைச்சாரல், முழங்கால்
சானுக்கிரகம் - தேவர்மொழி
சான்மலி - இலவமரம், ஓர் தீவு
சான்றவர் - அறிஞர்
சான்றாண்மை - ஊக்கம்
சான்றோர் - அறிஞர்
சான்றோன் - சூரியன்

## சி

சிகண்டம் - மயிற்றோகை
சிகண்டி - ஆமணக்கு, ஓர் பண், பேடு, மயில்
சிகண்டிசன் - வியாழம்
சிகரம் - உயர்ச்சி, ஒரெழுத்து, தலை, திரை, மலை, மலையுச்சி, வட்டில், வீடு
சிகரி - எலி, கருநாரை, கோபுரம், மலை
சிகல் - குறைதல், கெடுதல்
சிகழிகை - தொடுத்தமாலை, மயிர்முடி, மாலை, வாசிகை
சிகாவலம் - பாசி
சிகாவளம் - மயில்
சிகி - கேது, தீ, மயில்
சிகுரம் - மயிர்ப்பொது
சிகை - குடுமி
சிக்கடி - அவரை
சிக்கம் - உறி, குடுமி, சிறைச் சாலை, சீப்பு, மெலிவு, வண்டு
சிக்கர் - கள்
சிக்கல் - இளைத்தல், கிடைத்தல், வியங்கோண்முற்று
சிக்கறுப்பு - சீப்பு
சிக்குரு - முருங்கை
சிக்குவை - நா
சிங்கத்தோலுடையோன் - வீரபத்திரன்
சிங்கம் - ஓரிராசி, சிங்கம்
சிங்கல் - இளைத்தல், குறைதல், வியங்கோண்முற்று
சிங்கவாகனி - பார்வதி
சிங்களம் - ஓர்கூத்து, ஓர்தேசம், பதினெண்பாடையிலொன்று
சிங்காரம் - அலங்காரம்
சிங்கி - நஞ்சு, வினையெச்சம்
சிங்குவை - நா
சிசு - குழந்தை
சிசுபாலன் - இடையெழுவள்ளலி லொருவன்

சிச்சிலி - சிரற்புள்
சிச்சீ - இகழ்ச்சிக் குறிப்பு
சிஞ்சம் - புளிமா
சிஞ்சிதம் - அசையுமாபரணங் களாலெழுமொலி
சிஞ்சினி - நாணி
சிஞ்சுகம் - கேகயப்புள்
சிஞ்சுமாரம் - முதலை
சிட்டர் - பெரியோர்
சிட்டித்தல் - உண்டாக்கல்
சிதகன் - சுக்கிரன், தூக்கணங் குருவி
சிதடன் - அறிவில்லான், குருடன்
சிதடி - அறிவிலி, சிள் வண்டு
சிதடு - பேதைமை
சிதம் - சயமுறப்படல், ஞானம், விண்மீன், வெண்மை
சிதம்பு - பதனழிவு
சிதரம் - உறி
சிதர் - உறி, சிதரென்னேவல், சீலைத்துணி, பராகம், பூந்தாது, மழைத்துளி, மழைத்தூவல்
சிதர்தல் - சிந்தல்
சிதர்த்தல் - சிந்துதல்
சிதலம் - பதனழிவு
சிதலை - கறையான், சீலைத்துணி, நோய்
சிதவல் - சீலை, தேரிடக்கியம்
சிதறல் - சிந்தல், வியங்கோண் முற்று
சிதறி - மழை, வினையெச்சம்
சிதன் - அச்சமுள்ளோன், சுக்கிரன்
சிதாரம் - தேரிடக்கியம்
சிதார் - சீரை
சிதிலம் - சிதலம்
சிதை - கீழ்மை, சிதையென் னேவல்
சிதைத்தல் - அழித்தல், ஒலித்தல், கெடுத்தல்
சிதையர் - கீழ்மக்கள்
சிதைவு - கேடு
சித்தகம் - தலைச்சீரா
சித்தசன் - மன்மதன்
சித்தம் - உள்ளம்
சித்தல் - சீலை
சித்தன் - அருகன், சிவன், வயிரவன்
சித்தாந்தன் - சிவன்
சித்தார்த்தம் - கடுகு
சித்தி - ஓர் யோகம், சித்தித்தல், சித்தியென்னேவல், மோக்கம்
சித்திரகடகம் - காடு
சித்திரகாயம் - புலி
சித்திரகுத்தன் - எமன், கணக்கன்
சித்திரபானு - ஓர் வருடம், சூரியன், தீ
சித்திரப் படம் - எழுத்துச்சீலை
சித்திரம் - அதிசயம், ஆமணக்கு, ஓர்கவி, சித்திரித்தல், சிறப்பு, பேரழகு, மெய்போற் பொய் கூறல்
சித்திரர் - சித்திரக்கார ர், தச்சர்
சித்திரவேளர்கொல்லி - கொல்லித் திறத்தினொன்று
சித்திலிகை - சீலை
சித்தினி - நால்வகை பெண்ணி னொருத்தி
சித்து - அறிவு, மாயவித்தை, யாகம்
சிந்தகம் - தூக்கணங்குருவி, புளியமரம்
சிந்தம் - புளியமரம்
சிந்தன் - குள்ளன், தூக்கணங் குருவி
சிந்தித்தல் - நினைத்தல்
சிந்து - ஆறு, ஓர் தேசம், ஓர் பா, கடல், குள்ளன், சிந்தென் னேவல், நீர், பதினெண்பாடை யில் ஒன்று, முச்சீரடி
சிந்துதல் - கெடுதல், விடுதல்
சிந்துரம் - சிவப்பு, புளியமரம், யானை
சிந்துவாரம் - கடல், வில், வெண் ணொச்சி

சிந்தூரம் - சிவப்பு, செங்குடை, திலகம், புளியமரம், யானை, வெட்சி
சிந்தை - கருத்து, குறிப்பு, துன்பம், வினை முற்று
சிந்தைசூரியன் - புதன்
சிப்பி - சிப்பி
சிமயம் - மலை, மலையுச்சி
சிமி - குடுமி
சிமிலம் - மலை
சிமிலி - உறி, குடுமி, சிள்வண்டு, பூளை
சிமிழ் - சிமிழென்னேவல், சிமிழ்
சிமிழ்த்தல் - கட்டல்
சிகை - குடுமி
சிம்பல் - ஒலித்தல், வியங்கோண் முற்று
சிம்புரி - சும்மாடு
சிம்புளானோன் - வீரபத்திரன்
சிம்புளி - கம்பளி, செவ்வாடை
சிம்புள் - எண்காற்புள்
சிம்பை - அவரை
சிம்மதம் - பாம்பு
சிம்மு - எல்லை
சிரகம் - உறைத்துளி, கரகம், தலைச்சீரா
சிரங்கு - சிரங்கு
சிரத்தல் - அழித்தல், எழுத்திலா வோசை
சிரத்துதல் - ஒலித்தல், பேசலா லெழுமொலி
சிரத்தை - அன்பு
சிரநதி - கங்கை
சிரமம் - சிலம்பம்
சிரமை - வருத்தம்
சிரம் - உயர்ச்சி, தலை, நெடுங் காலம்
சிரல் - சிச்சிலிக்குருவி, முடிவிடம்
சிரவணம் - காது, திருவோண நாள்
சிரவம் - கவுதாரி, காது
சிராவணம் - ஆவணி மாதம், கல்
சிரித்தல் - நகைத்தல்
சிரித்துப்பேசல் - நயச்சொல்
சிரிப்பு - நகை
சிரீடம் - வாகைமரம்
சிருகாலன் - நரி
சிருங்கம் - விலங்கின் கொம்பு
சிருங்கலம் - சங்கிலி, யானை சங்கிலி
சிருங்கலை - கால்விலங்கு
சிருங்காடகம் - நாற்றெருக் கூடு மிடம்
சிருட்டித்தல் - பிறப்பித்தல்
சிரேணி - இடையர்வீதி, ஒழுங்கு
சிரை - குரங்கு, சிரையென்னேவல், நரம்பு
சிரைத்தல் - மயிர்கழித்தல்
சிரோசம் - மயிர்
சிரோந்தம் - மயிர்ச்செறிவு
சிரோருகம் - தலைமயிர்
சிலகம் - சட்டுவம்
சிலதர் - ஏவல்செய்வோர்
சிலதன் - தோழன்
சிலதி - தோழி
சிலதியர் - ஏவல்செய் தோழியர்
சிலந்தி - ஓர் புண், ஓர் பூச்சி
சிலம்பல் - ஒலித்தல், வியங்கோண் முற்று
சிலம்பன் - குறிஞ்சி நிலத் தலைவன், முருகன்
சிலம்பி - சிலந்திப்பூச்சி, வினை யெச்சம்
சிலம்பு - ஒலி, காற்சிலம்பு, சிலம்பென்னேவல், மலை
சிலர் - சிலபெயர்
சிலவர் - வேடர்
சிலாவட்டம் - சாணைக்கல்
சிலிர்த்தல் - தளிர்த்தல்
சிலீமுகம் - அம்பு, முலைக்கண், வண்டு
சிலுகு - துன்பம்
சிலும்பல் - ஒலித்தல், வியங் கோண்முற்று

சிலேட்டர் - செட்டிகள்
சிலேபியர் - செட்டிகள்
சிலை - ஒலி, ஓர் மரம், கல், சிலையென்னேவல், தனுவிராசி, மலை, மூலநாள், வில்
சிலைத்தல் - ஒலித்தல்
சிலோச்சயம் - மலை
சில் - ஆரவாரம்
சில்லம் - தேற்றாமரம்
சில்லர் - வேடர்
சில்லி - சிள்வண்டு, சிறுகீரை, தேருருளை, வட்டம்
சில்லிகை - சிள்வண்டு, சிலை, நல்லாடை
சில்லை - சிள்வண்டு
சிவகதியிறைவன் - அருகன், சிவன்
சிவணல் - கலத்தல், கிட்டல், பொருதல், பொருந்தல், வியங்கோண்முற்று
சிவதன்மம் - அட்டாதசவுபபுராணத்தொன்று
சிவதை - ஓர்கொடி
சிவத்தல் - கோபம், சிவத்தல், சினக்குறிப்பு
சிவப்பு - சிவப்பு, சினக்குறிப்பு
சிவம் - குறுணி, நன்மை, முத்தி
சிவலோகம் - மோக்கம்
சிவல் - கவுதாரி, பகண்டை
சிவன் - உருத்திரன்
சிவிகை - தண்டிகை, பாண்டில் பூண்டவூர்தி
சிவிறி - நீர் வீசுந்துருத்தி, உலைமூக்கு, பார்வதி, வேர்
சிள்வீடு - சிள்வண்டு
சிறகர் - சிறகு
சிறகு - இறகு
சிறக்கணித்தல் - சுருங்குதல், குறைதல்
சிறக்கணிப்பு - கடைக்கண்பார்வை
சிறத்தல் - சிறப்பு
சிறந்தோர் - உறவோர்
சிறப்பிலாதாள் - மூதேவி
சிறப்பு - மிகுதி, விசேடம்
சிறார் - சிறுவர்
சிறிது - சிறுமையுடையது
சிறியசிந்தையர் - கீழ்மக்கள்
சிறியர் - கீழ்மக்கள்
சிறுகல் - குறைதல், வியங்கோண்முற்று
சிறுகால் - தென்றல்
சிறுகு - சிறுகென்னேவல், துன்பம்
சிறுகுடி - குறிஞ்சி நிலத்தூர்
சிறுக்கல் - குறைத்தல், வியங்கோண்முற்று
சிறுசொல் - பழிச்சொல்
சிறுதாரை - நீர்வீசுந்துருத்தி
சிறுத்தல் - சிறிதாதல், சினத்தல்
சிறுத்தை - சிறுபுலி, வினைமுற்று
சிறுபதம் - வழி
சிறுபுறம் - பிடரி
சிறுமணி - சதங்கை
சிறுமாரோடம் - செங்கருங்காலி
சிறுமி - பெண், மகள்
சிறுமியம் - சேறு
சிறுமூலகம் - ஓர் கிழங்கு, திப்பிலி
சிறுமை - அற்பம், தரித்திரம், துன்பம், நோய்
சிறுமையர் - கீழ்மக்கள்
சிறுவரை - அற்பம், காலவிரைவு, சிறுபொழுது
சிறுவர் - மக்கள்
சிறுவன் - மகன்
சிறுவி - மகள்
சிறுவிதிமகஞ்சிதைத்தோன் - வீரபத்திரன்
சிறை - இடம், இறகு, காவல், சிறைச்சாலை, பக்கம், மதில், வினைமுற்று
சிற்பம் - சிற்பநூல்
சிற்பரன் - சிவன்
சிற்பர் - சித்திரகாரர்
சிற்பியர் - கம்மாளர்
சிற்றறிவு - புல்லறிவு

சிற்றாலவட்டம் - விசிறி
சிற்றில் - குடிசை, சீலை
சிற்றுண்டி - பொரிக்கறி
சிற்றூர் - குறிஞ்சி நிலத்தூர்
சினகரம் - தேவர் கோவில்
சினந்தவிர்ந்தோன் - அருகன்
சினம் - கோபம்
சினவரன் - அருகன், புத்தன்
சினவர் - பகைவர்
சினவுதல் - சினக்குறிப்பு, பொருதல்
சினன் - அருகன், புத்தன்
சினிவாலி - கலைதெரியமாவாசை
சினேந்திரன் - அருகன்
சிலை - உறுப்பு, கருப்பம், சிலை யென்னேவல், பூவரும்பு, மரக் கொம்பு, முட்டை, மூங்கில்
சினைத்தல் - அரும்புதல்
சினைப்பு - சினைத்தல், வெயர்க்குறி
சின் - அசைச்சொல் (உ-ம்: கண்ணும்படுமோவென்றிசின் யானே)
சின்னப்பூ - ஓர் பிரபந்தம்
சின்னம் - அடையாளம், காளம், சிறுமை, துட்டு, பராகம், பெண்குறி, முறம்
சின்னி - ஓர் செடி

## சீ

சீ - இகழ்ச்சிக்குறிப்பு, இலக்குமி, காந்தி, சம்பத்து, சரச்சுவதி, சீயென்னேவல், பார்வதி, விடம்
சீகரம் - கடற்றிரை, காகம், சவரி, திவலை, புனற்றிரை, மழை, மழைத்துளி, மழைத்தூவல்
சீகரி - திவலை
சீகர் - திவலை
சீகாரம் - ஓர் பண்
சீக்கிரி - உசிலமரம்
சீக்கு - செத்தை
சீச்சீ - இகழ்ச்சிக் குறிப்பு
சீடர் - மாணாக்கர்
சீடு - நூற்சீடு
சீதகன் - சுக்கிரன்
சீதம் - குளிர்ச்சி, நீர், மேகம்
சீதரன் - அரி
சீதளம் - குளிர்ச்சி
சீதன் - சந்திரன்
சீது - கள்
சீதேவி - இலக்குமி
சீதை - உழுபடைச்சால், சிதை, பொன்னாங்காணி
சீத்தல் - செப்பம்பண்ணல், நீக்கல்
சீத்தை - கீழ்மக்கள், பதனழிவு
சீபதி - அருகன், கடவுள்
சீப்பு - சீப்பு, தாழக்கோல், வாழைக்குலைச்சீப்பு
சீமாட்டி - சீமாள்
சீமாள் - தலைவி
சீமான் - அருகன்
சீமூதம் - நீருண்டமேகம், பிடியானை, மலை
சீமூதன் - இந்திரன், உழவன், சிவன், துன்புறுவோன், நரகாசுரன், சாரதி
சீமூதை - இரா, கொடிமுந்திரிகை
சீயம் - சிங்கம், சிங்கவிராசி, தென்றிசைப்பாலன்குறி
சீரகத்தாரோன் - குபேரன்
சீரகம் - சீரகம்
சீரங்கம் - அரங்கம்
சீரணம் - பதனழிவு
சீரணி - காடு, சீரணியென்னேவல்
சீரம் - மரவுரி
சீராட்டல் - சிறப்புச்செய்தல், வியங்கோண்முற்று
சீராளன் - சிறுத்தொண்ட நாயனார் மகன்
சீரியர் - அறிஞர், புலவர்
சீருணம் - செம்பு
சீருள் - ஈயம், செம்பு, பஞ்சலோகம்

சீரை - சீலை, சீலைத்துணி, மரவுரி
சீர் - அழகு, காற்றண்டை, சித்திரம், செய்யுளுறுப்பு, செல்வம், தண்டாயுதம், தாளவொத்து, துலாராசி, நன்மை, பாரம், புகழ்
சீர்கேடி - மூதேவி
சீர்த்தி - மிகுபுகழ்
சீர்பதி - கடவுள்
சீர்மை - சிறப்பு
சீலம் - குணம், சரித்திரம், சீந்தில், தருமம், நல்லறிவு, நல்லொழுக்கம்
சீலை - சேலை
சீவகர் - புத்த தவத்தோர்
சீவகன் - ஓரரசன்
சீவந்தி - சீந்திற்கொடி, பாலை மரம்
சீவல் - சீவுதல், வியங்கோண்முற்று
சீவனம் - உயிர் வாழ்தல், நீர்
சீவனி - சஞ்சீவி, சீவநாடி, பாலை மரம்
சீவனீயம் - நீர்
சீவன் - உயிர், வியாழம்
சீவினி - ஓர்மருந்து, யாழினோ ரோசை, சஞ்சீவி
சீறல் - அதட்டல், சினக்குறிப்பு, பெருங்கோபம், வியங்கோண் முற்று
சீறூர் - குறிஞ்சி நிலத்தூர்
சீற்றம் - கோபம், சினம்
சீனம் - ஓர் தேயம், பதினெண் பாடையிலொன்று

சு

சுகதாதை - வியாசர்
சுகந்தம் - நறுநாற்றம்
சுகம் - இன்பம், கிளி, தருமம், நன்மை, முலைக்கண்
சுகன் - சுவர்க்கமுற்றோன், வியாச புதல்வன்
சுகாந்தம் - ஈரவெண்காயம்
சுகிர் - உட்டுளை, சுகிரென் னேவல்
சுகிர்தம் - அறம், நன்மை, நெய்
சுகிர்தல் - நார்முதலிய வகிர்தல்
சுகுமாரம் - மிருது
சுக்கிரசீடர் - அசுரர்
சுக்கிரம் - ஆனிமாதம்
சுக்கிரன் - அசுரகுரு
சுக்கிலம் - சந்திரன் முதற்பக்கம், வெண்மை
சுக்கு - சுண்டி
சுக்கை - மாலை, வான்மீன்
சுங்கம் - ஆயம்
சுங்கன் - சுக்கிரன்
சுசனம் - காற்று
சுசி - ஆடிமாதம், சுத்தம், நெருப்பு, வெண்குடை, வெண்மை
சுசுந்தரி - மூஞ்சூறு
சுச்சு - சுண்டி
சுடரோன் - சூரியன்
சுடர் - ஒளி, சந்திரன், சூரியன், தீ, விளக்கு
சுடர்தல் - ஒளிசெய்தல்
சுடர்நிலை - விளக்குத்தண்டு
சுடர்மௌலியர் - வானோர்
சுடர்விழியோன் - வீரபத்திரன்
சுடலை - சுடுகாலை
சுடலையாடி - சிவன்
சுடாரி - கவசம்
சுடிகை - உச்சி, நெற்றிச்சுட்டி, மயிர்முடி, முடி
சுடுகலம் - இட்டிகை, குயக்கலம்
சுடுகாடு - சுடலை
சுடுசுண்ணம் - சுட்டசாந்து
சுடுநிலம் - சுடுகாடு
சுடுவல் - இரத்தம், வினைமுற்று
சுடுவனம் - இரத்தம்
சுடுவு - சும்மாடு

சுட்டல் - காட்டல், குறித்தல், சுடல், வியங்கோண்முற்று
சுட்டி - நுதலணி, வினையெச்சம்
சுட்டிகை - சுட்டி
சுட்டு - குறி, சுட்டென்னேவல், வினையெச்சம்
சுட்டுக்கோல் - உலையாணிக் கோல்
சுணங்கன் - நாய்
சுணங்கு - தேமல்
சுண்டம் - கள், யானைத்துதிக்கை
சுண்டல் - சுண்டுதல், தெறித்தல், வியங்கோண்முற்று
சுண்டன் - அறிவிலி, சதயநாள், மூஞ்சூறு
சுண்டாலம் - யானை
சுண்டாலி - யானை
சுண்டி - கள், சுக்கு, நீர்ச்சுண்டி, வினையெச்சம்
சுண்டிகை - உண்ணா
சுண்டை - சுண்டைச்செடி, வினைமுற்று
சுண்ணம் - கந்தப்பொடி, சுட்டி சாந்து, சுண்ணப்பொடி, பராகம், புழுதி
சுதந்தி - வடமேற்றிசை யானை, பெண் யானை
சுதம் - கேடு, முறைமை
சுதரிசனம் - கண்ணாடி, சக்கராயுதம்
சுதனம் - ஆயுதப்பொது
சுதன் - மகன்
சுதன்மம் - தேவேந்திரன் மண்டபம்
சுதாகரன் - சந்திரன்
சுதி - சங்கீத சுருதி
சுதை - அமிழ்து, உதைகாற்பசு, சுண்ணாம்பு, சுமை, பால், மகள், வெண்மை
சுத்தம் - சுசி
சுத்தன் - அயன், அரன், அருகன்
சுத்தி - ஓர் கருவி, சங்கு, நெய்க் குத்தி முதலாயின
சுத்திகை - அகல்
சுநகன் - நாய்
சுநாசீரன் - தேவேந்திரன்
சுநி - பெண்ணாய்
சுந் - சனி
சுந்தரம் - அழகு
சுந்தரி - அழகி, இந்திராணி, துர்க்கை, பெண், மூஞ்சூறு
சுந்தன் - ஓரரக்கன்
சுபம் - நன்மை, மங்களம்
சுபாலிகை - அடுப்பு
சுப்பிரதீபம் - மிகுமொளி, வட கீழ்த்திசை யானை
சுப்பிரமணியன் - குமரன்
சுப்பிரம் - மிகுமொழி, வெண்மை
சுமடர் - கீழ்மக்கள்
சுமடு - அறிவின்மை, சும்மாடு
சுமம் - பூ
சுமனசம் - பூமலர்
சுமாலி - கள்
சுமை - சுமை
சுமையடை - சும்மாடு
சும்பகம் - ஊசிக்காந்தம்
சும்பித்தல் - முத்தமிடல்
சும்மை - ஊர், ஒலி ஒலித்தல், சுமை, நகர், நாடு, நெற்போர்
சுயம்பு - கடவுள், தானாகவாதல், பிரமன்
சுயோதனன் - துரியோதனன்
சுரகுரு - வியாழம்
சுரங்கம் - கீழறை
சுரகம் - சாறு, சிறுகிழங்கு, பாதரசம்
சுரடி - ஓரிராகம்
சுரண்டல் - சுரண்டுதல், வியங் கோண்முற்று
சுரதநூல் - காமநூல்
சுரதம் - பாதரசம், புணர்ச்சி, மருந்திழிசாரம்
சுரத்தல் - உண்டாதல், பயத்தல்

சுரந்தி - கங்கை
சுரபி - பசு, வாசனை
சுரப்பு - சுரத்தல்
சுரப்புவடிவு - முலைமேற்றிரள்
சுரம் - அருநெறி, இசை, ஓர் நோய், காடு, பாலைநிலம், வழி
சுரரிடம் - தேவலோகம்
சுரர் - வானோர்
சுரர்பகைவர் - அசுரர்
சுராட்டு - இந்திரன்
சுரி - ஆணரி, சுரியென்னேவல், சுழற்சி
சுரிகுழல் - கவசம், பெண்
சுரிகை - உடைவாள், கவசம்
சுரித்தல் - கழித்தல்
சுரிப்புரம் - சங்கு, நத்தை
சுரிமுகம் - சங்கு, நத்தை
சுரியல் - இளைஞர்மயிர், சுரிதல், சுழலல், நீர்ச்சுழி, பெண்மயிர், வியங்கோண்முற்று
சுருக்கம் - கடல், சுருங்கல்
சுருக்கல் - அடக்கல், கட்டடல், வியங்கோண்முற்று
சுருக்கு - சுருக்கென்னேவல், நெய்த்துடுப்பு
சுருங்கல் - குறைதல், நுழைவாயில், மாலை, வியங்கோண்முற்று
சுருங்கு - சலதாரை, சுருங்கென் னேவல்
சுருங்கை - கோட்டையிற் கள்ள வழி, நுழைவாயில், வினைமுற்று
சுருட்டல் - சுருட்டுதல், வியங் கோண்முற்று
சுருட்டி - ஆலவட்டம், வினை யெச்சம்
சுருட்டு - சுருட்டென்னேவல், சுருள்
சுருணி - யானைத்தோட்டி
சுருதி - ஒலி, காது, வேதம்
சுரும்பாவன் - மன்மதன்
சுரும்பு - ஆண்வண்டு, வண்டு
சுருவை - நெய்த்துடுப்பு
சுருளல் - சுருளுதல், வியங்கோண் முற்று
சுருள் - சுருளென்னேவல், தாமரை யுட்சுருள், பாக்கிலைச் சுருள், பெண்மயிர்
சுரூபம் - நல்லுருவம்
சுரேசம் - இந்திரன், குமரன்
சுரேந்திரன் - இந்திரன்
சுரேந்திரன் மைந்தன் - அருச்சுனன்
சுரை - அம்புத்தலை, உட்டுளை, கள், சுரைக்கொடி, பசு, விலங்கின்முலை
சுரோணி - நிதம்பம்
சுரோத்திரம் - காது
சுலவல் - சுழலல், வியங்கோண் முற்று
சுலாவல் - சுற்றுதல், வியங்கோண் முற்று
சுலோகம் - புகழ்
சுலோகி - கள்
சுலோசனம் - மூக்குக்கண்ணாடி
சுலோபம் - எறும்பு
சுல்லி - அடுப்பு
சுல்லு - வெள்ளி
சுவடி - எழுதிய புத்தகம்
சுவடு - தழும்பு, பக்கறை, பாதம் வைத்த சுவடு
சுவணம் - பொன்
சுவப்பிரம் - நரகம், வளை
சுவர் - பித்திகை
சுவர்க்கம் - வானோர்
சுவலை - அரசமரம்
சுவல் - குதிரைமயிர், தோண்மேல், பிடர், முதுகு, மேடு
சுவவு - சுவர்க்கம், பறவைமூக்கு, மூஞ்சூறு
சுவா - நாய்
சுவாசதம் - கிள்ளை
சுவாசம் - உயிர்ப்பு
சுவாது - தித்திப்பு
சுவாந்தம் - மனது

சுவாமி - அருகன், கடவுள், குரு, சிவன், பொன், முருகன்
சுவி - இத்திமரம்
சுவிகை - கள்
சுவேதம் - வெண்மை, வெள்ளி, வேர்வை
சுவேதவாகனன் - அருச்சுனன்
சுவை - இனிமை, சித்திரைநாள், சுவையென்னேவல்
சுவைத்தல் - உண்டல்
சுழலல் - சுழலல், வியங்கோண் முற்று
சுழல் - காற்றாடி, சுழலென்னேவல், சுழல்
சுழல்படை - வளைதடி
சுழல்வு - சுழற்சி
சுழற்றல் - சுற்றியாட்டல், வியங் கோண்முற்று
சுழி - சுழியென்னேவல், நீர்ச்சுழி முதலியன
சுழிகை - சுழிகை, ஒரு தலம், கள் சுழிதல்
சுழித்தல் - எழுச்சி, சுழிக்குதல்
சுளகு - முறம், விசாகநாள்
சுளித்தல் - கோபம், சினக்குறிப்பு
சுளிவு - கோபம், சினக்குறிப்பு, சினம்
சுளை - பலா பாகற் பழ முதலிய வற்றிற்குரித்து
சுள்ளி - அனிச்சமரம், ஆச்சா மரம், ஞாழல், மாமரம்
சுள்ளை - மட்கலஞ்சுடு சூளை
சுறவு - சுறா
சுறா - மகரமீன், மகரராசி
சுறுக்கெனல் - கடுப்பின் குறிப்பு
சுற்பம் - செம்பு
சுற்றம் - உறவு
சுற்றல் - உடுத்தல், எழுச்சி, சூழ்தல், வட்டமாயோடல், வியங்கோண்முற்று
சுற்று - சுற்றென்னேவல், மதில், மதிற்சுற்று, வட்டமாயோடல்
சுற்றுவாரி - கல்வியூரி, சுவர்ப் புறத்து நீண்டவுத்திரம்
சுனை - குளம்
சுனைதல் - குழைதல், வாடல்

## சூ

சூகம் - தவழ்சாதிப்பொது, நெல்வால்
சூகரம் - பன்றி
சூகை - குகையெறும்பு, யானை
சூசம் - துருவாட்டேறு
சூசி - ஊசி
சூசியம் - சூட்டிறைச்சி
சூசுகம் - முலைக்கண்
சூடகம் - கைவளை
சூடல் - அணிதல், வியங்கோண் முற்று
சூடி - நிலை, வினையெச்சம்
சூடிகை - முடி
சூடு - சூடுதல், சூடென்னேவல், நென்முதலியவற்றரிக்குவியல், வெப்பம்
சூட்டல் - அணிவித்தல், வியங் கோண்முற்று
சூட்டு - சூட்டென்னேவல், நுதலணி, நுதலணிமாலை, மாலை
சூதகம் - அசுத்தம், பழமை, பிறப்பு, மகளிர்துடக்கு
சூதநதி - பொருந்தநதி
சூதம் - சூது, பவளமல்லிகை, பாதரசம், புளிமா, மாமரம்
சூதர் - சூதாடுவர், தேர்ப்பாகர், பாணர், புகழ்வோர்
சூதவம் - வண்டு
சூதன் - சூதாடுவோன், தேர்ப் பாகன், பாணன், புகழ்வோன்
சூது - சூது, தாமரை
சூத்திரம் - இயந்திரம், நூல், பஞ்சினூல்

சூத்திரர் - சதுர்த்தர், தச்சர்
சூநம் - பூமலர், மான்
சூநர் - ஊன்விற்போர்
சூநியன் - மூடவன்
சூநு - மகன்
சூரசுதன் - புதன்
சூரசூதன் - அருணன்
சூரசேனம் - ஓர்தேசம்
சூரணம் - கருணைக்கிழங்கு, தூள்
சூரம் - அச்சம், கடலை, வீரம்
சூரர் - படைவீரர்
சூரல் - பிரம்பு
சூரன் - ஓர்சுரன், சூரியன், தீ, நாய், வீரன்
சூரி - காடுகாள், சாளி, புலவர்
சூரியகாந்தம் - ஓர் பூ, சூரியன், முகத்துத்தீ விடுங்கல்
சூரியர் - புலவர்
சூரியன் - சோழன், ஞாயிறு
சூரை - ஓர்செடி, வினைமுற்று
சூர் - அச்சம், சூரென்னேவல், துன்பம், தெய்வப்பெண், தெய்வம், நோய்
சூர்த்தநோக்கு - கொடுமை
சூர்த்தல் - சுழலல்
சூர்ப்பகைவன் - முருகன்
சூர்ப்பம் - சுளகு
சூர்மகள் - யோகினி
சூலபாணியன் - சிவன், வயிரவன்
சூலம் - இரேவதிநாள், ஓராயுதம், சிவனாயுதம்
சூலல் - அறுத்தல், வியங்கோண் முற்று
சூலி - கருப்பிணி, காடுகாள், காளி, சிவன், துர்க்கை
சூலை - ஓர் நோய், வினைமுற்று
சூல் - கருப்பம், சூலென்னேவல்
சூழல் - ஆராய்தல், ஆலோசனை இடம், கருத்து, குறிப்பு, வியங் கோண்முற்று
சூழாமை - ஆராயாமை
சூழி - உச்சி, உச்சிக்கொண்டை, கடல், குளம், சுனை, யானை முகபடாம்
சூழ்ச்சி - ஆராய்தல், ஆலோசனை
சூழ்தல் - கருதல், சூழ்ந்திடல், பிற்படை
சூழ்போதல் - வளைத்தல்
சூழ்வோர் - உறவோர், சூழநிற் போர், மந்திரிகள்
சூளி - ஆண் மயிர்
சூளிகை - யானைச்செவியடி
சூளுறல் - சத்தியம், வியங்கோண் முற்று
சூளை - குயவன் சூளை, வேசி
சூள் - ஆணை
சூறல் - தோண்டல்
சூறன் - மூஞ்சூறு
சூறாவளி - சுழல்காற்று
சூறை - கொள்ளை, சுழல்காற்று
சூனர் - ஊன் விற்போர்
சூனியம் - இன்மை, பாழ்
சூன்றல் - தோண்டல்

## செ

செகில் - தோண்மேல்
செகுத்தல் - அழித்தல்
செக்கர் - சிவப்பு
செக்கர் வானிறத்தோன் - அரன், வீரபத்திரன்
செக்கான் - வாணியன்
செக்கு - சதயநாள், செக்கு
செங்கதிரோன் - சூரியன்
செங்கதிர்பிறந்தநாள் - உத்திரநாள்
செங்கமலை - செந்திரு
செங்கல் - காவிக்கல், செங்கல்
செங்கழுநீர் - செங்குவளை
செங்களம் - போர்க்களம்
செங்குமுதம் - செவ்வாம்பல்
செங்கை - ஆதிரைநாள், கை

செங்கொல் - பொன்
செங்கொல்லர் - தட்டார்
செங்கோடு - ஓர்மலை, செருந்தி மரம்
செங்கோல் - நீதி
செங்கோற்கடவுள் - நமன்
செச்சை - காடு, சாந்தின் குழம்பு, சோடு, நீறு, வெட்சி, வெள்ளாட்டுக்கடா
செஞ்சாலி - செந்நெல்
செஞ்சி - ஓரூர்
செஞ்சுடர் - தீ
செஞ்சுடர்ப்பகவன் - தீ
செடி - ஒளி, பதனழிவு, பாவம், புதல்
செட்டி - குமரன், வாணியன்
செட்டி - செட்டிமை
செட்டை - இறகு
செண்டாயுதன் - ஐயனார்
செண்டு - குதிரை, வையாளிவீதி, செண்டு, பந்தெறிவீதி
செண்ணம் - வடிவு
செண்பகம் - சண்பகம்
செதுக்கல் - செதுக்குதல்
செதுக்கு - செதுக்கென்னேவல், சேறு, பூதம், மந்தி
செதும்பு - சேறு
செத்தல் - சாதல்
செத்து - சந்தேகம்
செத்தை - உலர்சருகு முதலிய, வினைமுற்று
செந்தமிழ்க்குரியோன் - வயிரவன்
செந்தழல் - கேட்டைநாள்
செந்தாது - பொன்
செந்நிறம் - குறிஞ்சியாழ்த்திறம், சிவப்பு
செந்தினை - கம்பு, செந்தினை
செந்திவண்ணன் - செவ்வாய்
செந்திவளர்ப்போர் - பார்ப்பார்
செந்து - அணு, கிழநரி, சீவன், நரகம்
செந்துருதி - ஓர்பண், நரகம்
செந்துறை - ஆடற்கேற்கும் பாட்டு
செந்தொடை - ஓர்தொடை
செந்தோடையன் - வயிரவன்
செந்நாய் - செந்நாய்
செந்நீர் - இரத்தம்
செந்நெல் - நன்னெல்
செப்பம் - செவ்வை, நடுநிலை, மார்பு, வழி, வீதி
செப்பல் - சொல்லுதல், வியங் கோண்முற்று
செப்பு - செப்பு, செப்பென்னேவல், சொல்
செம்படாம் - செவ்வாடை
செம்பாம்பு - கேது
செம்பால் - இரத்தம்
செம்பியன் - சோழன், முதலெழு வள்ளலிலொருவன்
செம்புலம் - சுடுகாடு, பாலை நிலம், போர்க்களம்
செம்புனல் - இரத்தம்
செம்பொன் - பொன்
செம்மணி - மாணிக்கம்
செம்மரம் - அழிஞ்சில்
செம்மலைப்பாலை - ஓரிசை, அதையெழுபாலையிற் காண்க
செம்மல் - அரசன், எப்பொருட்கு மிறைவன், பழம்பூ, புதல்வன், பெருமை, பெருமையிற் சிறந் தோன்
செம்மறியாடு - ஆடு
செம்மாப்பு - இறுமாப்பு
செம்மார் - சக்கிலியர்
செம்மை - சிவப்பு, செப்பம், செவ்வை, பெருமை
செயலை - அசோகமரம்
செயல் - ஒழுக்கம், காவல், சேறு, தொழில், வியங்கோண்முற்று
செயிர் - குற்றம், கோபம், சினம்
செயிர்த்தல் - சினத்தல்
செய் - செய்யென்னேவல், வயல்
செய்கடன் - முறைமை
செய்கை - ஒழுக்கம், தொழில்

செய்தல் - செயல்
செய்தி - ஒழுக்கம், செய்தி, செய்வாயென்னுமுற்று
செய்யல் - செயல், சேறு, வியங்கோண்முற்று
செய்யாள் - இலக்குமி, சீதை
செய்யுள் - பாட்டு
செய்யோன் - அருகன்
செரு - போர்
செருகல் - சொருகல், வியங்கோண்முற்று
செருக்கல் - மிகமகிழ்தல், வியங்கோண்முற்று
செருக்களம் - போர்க்களம்
செருக்கு - அகங்காரம், களிப்பு, செருக்கல், செருக்கென்னேவல்
செருக்குதல் - அகங்கரித்தல், களித்தல்
செருத்தல் - எருமைமடி, பசுவின் மடி
செருத்தி - விருதுக்கொடி
செருநர் - படைவீரர்
செருந்தி - ஓர்மரம், வாட்கோரை
செருப்பு - கழறொடுதோல்
செருமல் - விலங்குகளிருமல், வியங்கோண்முற்று
செலல் - நீங்கல், வியங்கோண்முற்று
செலவிடம் - எறிதல், விடுதல், வியங்கோண்முற்று
செலவு - செலல், வழி
செலு - நறுவிலிமரம்
செலுத்துதல் - நடத்துதல், விடுதல்
செல் - இடி, கறையான், செல்லேன்னேவல், மேகம்
செல்லல் - துன்பம், நடத்தல், வியங்கோண்முற்று
செல்வம் - கல்வி, சீர், சுவர்க்கம்
செல்வன் - அருகன், மகன், வினைமுற்று
செல்வி - இலக்குமி, தலைவி, மகள்
செவி - காது, கேள்வி
செவிடு - செவிப்புலன் கெடல்
செவிட்டல் - அழித்தல், வியங்கோண்முற்று
செவிமலர் - ஓர்வகைத்தாணி
செவிரம் - பாசி
செவிலி - அக்காள், வளர்த்த தாய்
செவ்வல்லி - செவ்வாம்பல்
செவ்வழி - நெய்தனிலத்திராகம்
செவ்வழிப்பாலை - ஓரிராகம்
செவ்வன் - செவ்வை
செவ்வி - அழகு, காலம், சித்திரைநாள்
செவ்வு - செவ்வை
செவ்வேள் - குமரன்
செவ்வை - செப்பம்
செழியன் - பாண்டியன்
செழுவை - அழகு, கொழுப்பு, மாட்சிமை, வளமை
செறி - செறியென்னேவல், நெருக்கம்
செறிதல் - குளித்தல், நெருங்கல் மிகுதி
செறித்தல் - அழித்தல், கொல்லல், நெரித்தல், பாதீடு, மூழ்கல்
செறிவு - நிறைவு, நெருக்கம், மரப்பொந்து, மிகுதி
செறு - சிறுவயல், செறுவென்னேவல், வயல்
செறுத்தல் - கொல்லல், வெறுப்பு
செறுநர் - பகைவர்
செறும்பு - சலஞ்சாதித்தல்
செறுவு - வயல்
செற்றம் - கோபம், சலஞ்சாதித்தல், சினம்
செற்றல் - செறிவு, செறுத்தல்
செற்றார் - பகைவர்
செற்று - நெருக்கம், வினையெச்சம்
சென்னி - அச்சுவினிநாள், சோழன், தலை, பாணன், முடி
சென்னியர் - பாணர்
சென்னை - சென்னபுரி

## சே

சே - இடபவிராசி, எருது, ஓரெழுத்து, சிவப்பு, சேவென்னேவல், விலங்கேற்றின்பொது
சேகண்டி - சேமக்கலம்
சேகரம் - சேகரித்தல், தலை, தலையின் கண் முடிக்கப் படுவன, முடி
சேகிலி - வாழை
சேகு - மரவயிரம்
சேக்கை - உடற்றழும்பு, கற்கடக விராசி, நண்டு, மனிதர் படுக்கை, வினைமுற்று
சேடகம் - கேடகம்
சேடம் - எச்சில், மிச்சப்பொருள்
சேடர் - அடிமை, ஏவல்செய்வோர்
சேடன் - ஏவல்செய்வோன், ஓர் சாதியான், கட்டிளமையோன், தோழன், பூமிதாங்கு மனந்தனென்னும் பாம்பு
சேடி - இடையர்வீதி, தோழி, வித்தியாதரருலகு
சேடியர் - அடிமைகளிற் சிறந்தோர், ஏவல்செய்யும் பெண்கள்
சேடு - அழகு, இளமை, திரட்சி, நன்மை, பெருமை
சேட்டம் - ஆனிமாதம்
சேட்டன் - தமயன்
சேட்டை - அக்காள், கேட்டை நாள், மூதேவி, விசாகநாள்
சேணம் - மெத்தை
சேணி - ஏணி, வித்தியாதரருலகு
சேண் - அகலம், ஆகாயம், உயர்ச்சி, தூரம், நீளம்
சேதகம் - சிவப்பு, சேறு
சேதம் - கேடு, துண்டு
சேதனம் - அறிவு
சேதனன் - உயிர்
சேதா - செவ்வியபசு, நற்பசு
சேதாம்பல் - செவ்வாம்பல்
சேதாரம் - தேமா, பொன்னுரை, தேய்மானம், வெட்சி
சேதித்தல் - அறுத்தல், வெட்டல்
சேதிமம் - தேவர்கோயில்
சேது - இராமேச்சுரம், சிவப்பு, செய்கரை
சேத்தல் - சிவத்தல்
சேத்து - உவமைச்சொல், கருத்து, சிவப்பு, நெருக்கம், மிகுசிவப்பு
சேந்தன் - முருகன், ஓர் நிகண்டு செய்வித்தோன்
சேந்து - அசோகு, சிவப்பு, தீ, வினையெச்சம்
சேப்பு - சிவப்பு
சேமம் - இன்பம், காவல், புதையல்
சேமரம் - அழிஞ்சில்
சேமித்தல் - புதைத்தல்
சேயரர் - பகைவர்
சேய் - இளமை, குழந்தை, சிவப்பு, செவ்வாய், தூரம், நீளம், மகன், முருகன், மூங்கில்
சேய்த்து - தூரம்
சேய்மை - தூரம், நீளம்
சேரலர் - பகைவர்
சேரலன் - சேரன்
சேரல் - கிட்டல், வியங்கோண் முற்று
சேரார் - பகைவர்
சேரி - ஊர், தெரு
சேருகம் - நாகணவாய்ப்புள்
சேர்தல் - அடுத்தல்
சேர்த்தல் - சமைத்தல், சேர்த்திடல்
சேர்ந்தார் - சிநேகிதர்
சேர்ந்தார்க்கொல்லி - தீ
சேர்பு - வினையெச்சம், வீடு
சேர்ப்பது - கோலல்
சேர்ப்பன் - நெய்தனிலத்தலைவன்
சேர்விடம் - மனிதர்படுக்கை
சேர்வு - திரட்சி, மருதநிலத்தூர், வீடு

சேர்வை - கூட்டம், வினைமுற்று
சேலம் - ஓரூர்
சேலேகம் - சந்தனம், சிந்தூரம்
சேலை - சீலை
சேல் - கெண்டைமீன்
சேவகம் - சேவகத் தொழில், யானை துயிலிடம், வீரம்
சேவல் - காவல், கோழி, மயிலொழிந்த பறவையாண்
சேவற்கொடியான் - குமரன்
சேறல் - எழுச்சி, நடத்தல்
சேறு - இனிமை, கள், கும்பி, தித்திப்பு, திருவிழா, வினை முற்று
சேனம் - பருந்து
சேனாபதி - படைத்தலைவன்
சேனாமுகம் - படையிலோர் தொகை
சேனை - ஆயுதம், கடைவீதி, படை

## சை

சை - இகழ்ச்சி, ஒரெழுத்து
சைகதம் - மணல்
சைசவம் - இளமை
சைதன்னியம் - அறிவு
சைத்தியம் - சீதத்தன்மை
சைத்திரம் - சித்திரைமாதம்
சைநந் - அருகன், புத்தன்
சைநர் - அருகர்
சைந்தவம் - இந்துப்பு, குதிரை
சைம்மினிநகரோன் - நமன்
சையம் - கல், நிலை
சையெனல் - இகழ்ச்சிக்குறிப்பு
சைரிபம் - எருமை
சைலம் - மலை
சைவம் - அட்டாதசபுராணத் தொன்று, சிவசமயம்
சைவலம் - பாசி

## சொ

சொக்கம் - தூய்மை
சொக்கு - அழகு, சொக்கென் னேவல், சோர்வு, பொன்
சொத்துவம் - உரிமை
சொத்தை - புழுத்துளைத்தல்
சொரிதரல் - சுழலல், பொழிதல், வியங்கோண்முற்று
சொரிதல் - ஈதல், சுழலல், மழை பெய்தல்
சொலித்தல் - இடந்திடல், பிரகாசித்தல்
சொலித்திடல் - பிரகாசித்தல், வியங்கோண்முற்று
சொல் - எழுத்தினோசைச் சொல், கள், செந்நெல், செந்நெற்கதிர், சொல்லென்னேவல், புகழ்
சொல்லல் - சொல்லுதல், வியங் கோண்முற்று
சொல்லேருழவர் - புலவர், மந்திரிகள்
சொல்விளம்பி - கள்
சொறி - சொறியென்னேவல், தினவு
சொற்றல் - சொல்லல், வியங் கோண்முற்று
சொன்மாலை - ஏற்றமொழி
சொன்றி - சோறு
சொன்னகாரர் - தட்டார்
சொன்னம் - பொன்
சொன்னல் - சோளம்

## சோ

சோ - அரண், ஒரெழுத்து
சோகம் - உண்டை, சோம்பல், துன்பம், தொடை
சோகி - பலகறை, பிடாரன்
சோகு - பிசாசம்
சோகை - ஓர் நோய்

சோங்கு - குருகு, மரக்கலம், மறத்தல்
சோடு - கவசம், சோடு
சோணம் - சிவப்பு
சோணிதல் - இரத்தம், சிவப்பு
சோதரம் - சகோதரம்
சோதரன் - சகோதரன்
சோதனம் - சுத்தஞ்செய்தல், சோதித்தல்
சோதி - அருகன், ஒளி, ஓர்நாள், கடவுள், சிவன், சூரியன், சோதியென்னேவல், தீ, வான்மீன், விட்டுணு
சோதித்தல் - ஆராய்தல்
சோதிடம் - சோதிடநூல், நன்னிமித்தம்
சோதினி - செத்தை, துடைப்பம்
சோத்திரம் - காது
சோபம் - அழகு, கள், சோம்பல், சோர்வு, பத்துக்கோடி, கோடாகோடி
சோபனம் - அழகு, சுபம், வாழ்த்து
சோபாலிகை - அடுப்பு, விரிதூறு
சோபானம் - கற்படி, தாழ்வாரம்
சோமன் - ஓர் வள்ளல், சந்திரன், தூசு
சோம்பல் - அழுங்கல், சோம்பல், வியங்கோண்முற்று
சோம்பு - அழுங்கல், சோம்பல், சோம்பென்னேவல்
சோரம் - களவு
சோரர் - திருடர்
சோரல் - வாடல், வியங்கோண் முற்று
சோரன் - ஆட்டுக்குட்டி, திருடன்
சோரி - இரத்தம், மழை
சோர்தல் - வாடல், விழுதல்
சோர்வு - களவு, மறதி
சோலை - தோப்பு
சோழம் - ஓர் தேசம்
சோழன் - மூவேந்தரிலொருவன்
சோளன் - ஓர் பயிர்
சோறு - சோறு, பரணிநாள்
சோனகம் - ஓர்தேசம், பதினெண் பாடையிலொன்று
சோனை - சொரிதல், திரிவோண நாள், விடாமழை

## சௌ

சௌசம் - சத்தம்
சௌண்டிகர் - கள் விற்போர்
சௌந்தரமுகம் - பூரித்த மகிழ்ச்சி யான் மலர்ந்தமுகங் காட்டல்
சௌந்தரிகம் - அழகு
சௌமன் - புதன்
சௌமியம் - அழகு, சாந்தம்
சௌமியர் - சாந்தர், முனிவர்
சௌமியன் - சாந்தன், புதன்
சௌரம் - அட்டாதசவுப புராணத்தொன்று
சௌராட்டி ராகம் - உலா விராகம்
சௌரி - கருடன், கன்னன், சனி, நரமன், விட்டுணு
சௌரியம் - களவு, வீரம்
சௌரியன் - கன்னன், சூரன்

## ஞ

ஞண்டு - கற்கடகவிராசி, நண்டு
ஞமலி - நாய், மயில்
ஞமன் - நமன்
ஞலவல் - மின்மினிப்பூச்சி
ஞறா - மயிற்குரல்

## ஞா

ஞாங்கர் - இடர், இனி, கைவேல், பாகம், முன், மேல்
ஞாஞ்சில் - கலப்பை, மதிலுறுப்பு

ஞாட்பு - கூட்டம், படை, பாரம், பூசல், வலி
ஞாதி - தாயத்தான்
ஞாதிகள் - தாயத்தார்
ஞாபகம் - அரும்பொருள், அறிவு, இலக்கியமெடுத்துக்காட்டல்
ஞாயில் - மதிலுறுப்பு
ஞாயிறு - சூரியன்
ஞாலம் - பூமி
ஞாலுதல் - நாலல்
ஞாழல் - குங்குமமரம், கோங்கு மரம், பலினி
ஞாளி - கள், நாய்
ஞாளிகம் - வள்ளைச்செடி
ஞாளியூர்தி - வயிரவன்
ஞானபகை - வேதநூற்பொருள்
ஞானமூர்த்தி - சரச்சுவதி, சிவன்
ஞானம் - அறிவு, கல்வி, நல்லொழுக்கம்
ஞானன் - பிரமன்
ஞானி - அருகன், பிரமன்
ஞான்று - இடைச்சொல், நாள், வினையெச்சம்

## ஞி

ஞிமிர் - ஒலி
ஞிமிறு - வண்டு

## ஞெ

ஞெகிழம் - பொற்சிலம்பு
ஞெகிழி - சிலம்பணி, சிலம்பு, தீ, தீப்பொறி, நெரிப்புறுவிறகு
ஞெகிழ்தல் - அலையயல்
ஞெண்டு - கற்கடகவிராசி, நண்டு
ஞெமிர்தல் - ஒடிதல், பரத்தல்
ஞெமுங்கல் - அமுழ்ந்தல், வியங் கோண்முற்று
ஞெரெலெனல் - அச்சக்குறிப்பு, ஒலி, சீக்கிரத்தின் குறிப்பு
ஞெலிகோல் - தீக்கடைக்கோல்
ஞெலிதல் - கடைதல், குடைதல்
ஞெளிர் - உள்ளோசை, ஒலி
ஞெள்ளல் - உடன்படல், ஒலித்தல், சீக்கிரம், சோர்வு, தெரு, பள்ளம், மிகுதி, மேன்மை, வியங்கோண் முற்று, வீதி
ஞெள்ளெனல் - அனுகரணவோசை

## ஞே

ஞேயம் - அன்பு, சினேகம், நெய்

## ஞொ

ஞொள்கல் - அச்சக்குறிப்பு, அலை தல், இளைதல், சோம்பல், வியங்கோண்முற்று

## த

தகடு - அடர்பு, இலை, ஐமை வடிவு
தகம் - உட்டணம், எரித்தல்
தகரம் - ஈயம், ஓரெழுத்து, தகரம், மயிர்ச்சாந்து, வாசனைப் பண்டம்
தகர் - சுறா, செம்மறியாட்டுக் கடா, தகரென்னேவல், துரு வாட்டேறு, பராகம், பூமி, மேடவிராசி, யாளியினாண், யானையினாண்
தகர்த்தல் - உடைத்தல், குட்டுதல்
தகவு - அறிவு, உரிமை, உவமை, ஒழுக்கம், கிருபை, குணம், தகுதி, தெளிவு

தகழி - அகல்
தகழிகை - உண்கலம்
தகனம் - சுடல்
தகனன் - நெருப்பு
தகனை - உலோகக்கட்டி
தகுணிதம் - வாச்சியம்
தகுதல் - உரிமை
தகுதி - அறிவு, உரிமை, ஒழுக்கம், குணம், பொறுமை, வினை முற்று
தகுதியோர் - அறிஞர், தமர், பெருமையிற் சிறந்தோர்
தகுவர் - அசுரர்
தகுளம் - மகளிர் விளையாட்டு
தகை - அழகு, அன்பு, கவசம், குணம், தகையென்னேவல், தளர்வு, பெருமை, வினை முற்று
தகைதல் - அணையிடல், இளைத்தல், தடுத்தல்
தகைத்தல் - ஆணைஇடல், இளைத்தல், தடுத்தல்
தகைப்பு - இளைப்பு, மதிற்சுற்று
தகைமை - அழகு, குணம், பெருமை
தக்கணம் - தெற்கு, வலப்பக்கம்
தக்கன் - அட்டநாகத்தொன்று, நவப்பிரமாவிலொருவன்
தக்கன் மகன் சிதைத்தோன் - வீரபத்திரன்
தக்கார் - உறவோர், பெருமையிற் சிறந்தோர்
தக்கிரம் - மோர்
தக்கேசி - ஓர் பண்
தக்கை - காதிடுந்தக்கை, தெப்பம், பம்பை, வாச்சியம், பலவகைப் பறை, வினைமுற்று
தக்கோலம் - வாசனைப்பண்டம்
தங்கம் - உயர்ந்த பொன்
தங்கல் - தங்கல், வியங்கோண் முற்று
தங்குடித்தமர் - தாயத்தார்
தங்கை - இளையாள், வினை முற்று
தசம் - சிவிகை, பத்து
தசனம் - பல்
தசிரம் - உட்டுளை
தசும்பு - குடம், கொப்பரி, பொன்
தசை - ஊன், புலால்
தச்சன் - சித்திரை நாள், தச்சன்
தஞ்சம் - எளிமை, தாழ்வு, துணை, பற்றுக்கோடு, பெருமை
தஞ்சை - தஞ்சாவூர்
தடம் - ஓமகுண்டம், கரை, குளம், பெருமை, மலை, மலைப் பக்கம், வரம்பு, வழி
தடவல் - தடவல், வீணை வாசித்தல், வியங்கோண்முற்று
தடவு - தடவென்னேவல், தூபக் கால், பெருமை, வளைவு
தடறு - ஆயுதவுறை
தடா - பானை, மிடா
தடாகம் - குளம்
தடாரி - பம்பை, பேரிகை, மத்தளம், வாச்சியப்பொது
தடி - உடும்பு, உலக்கை, ஊன், சிறுவயல், தடியென்னேவல், தண்டு, மின்வயல், வில்
தடிதல் - அறுத்தல், தறித்தல், வெட்டல்
தடித்தல் - கனத்தல், தாமதித்தல்
தடித்து - மின்னல், வினையெச்சம்
தடிப்பு - பருமை
தடினி - ஆறு
தடுத்தல் - ஆணையிடல்
தடுப்பு - தடுத்தல்
தடை - கவசம், தடுத்தல்
தட்டம் - உண்கலம், பம், பாம்பினச்சுப்பல், மக்கட் படுக்கை, வினைமுற்று
தட்டல் - ஆணையிடல், கிட்டல், தடுத்தல், தாளம் போடல், வியங்கோண்முற்று
தட்டார் - பொற்கொல்லர்

தட்டி - காவல், கேடகம், பலகை, வினையெச்சம்
தட்டு - கம்பு முதலிய சில புன் பயிர்த்தாள், குற்றம், தட்டென் னேவல், தராசுத் தட்டு, திரிகை, தேர்நடு, பரிசை, மரவட்டணை, முட்டு, முறம், வட்டம், வளைவு
தட்டை - கவண், கிளி கடி கோல், தினைத்தாள், மூங்கில், மொட்டை, வினைமுற்று
தட்பம் - குளிர்ச்சி
தணக்கு - தணக்கு, நுணவு
தணத்தல் - நீங்கல், போதல்
தணல் - நெருப்பு
தணவல் - அரசமரம்
தணிதல் - ஆறுதல், பருத்தல்
தணியல் - கள், வியங்கோண்முற்று
தண் - குளிர்ச்சி
தண்சுடர் - சந்திரன்
தண்டகம் - தண்டகாரணியம், வடமொழியிலோர் செய்யுள்
தண்டகன் - ஓரரக்கன்
தண்டதரன் - நமன்
தண்டம் - அரசன் கொடுங் கோன்மையானிறையிறுத்தல், ஊன்றுகோல், ஓர் புருடப் பிரமாணம், குடைக்காம்பு, தண்டிப்பு, நாடு, படை, பண்டாரம், பற்றுக்கோடு, யானைத்துதிக்கை, யானை செல்வழி, வணக்கல்
தண்டலை - ஓரூர், சோலை, பூந் தோட்டம்
தண்டன் - வணக்கல்
தண்டாச்சிறப்பினள் - சரச்சுவதி
தண்டாமை - நிலைநீங்காமை
தண்டாயுதன் - ஐயனார், வைரவன்
தண்டி - ஓர் புலவன், தண்டி யென்னேவல், தண்டேசன், வினையெச்சம்
தண்டிகை - சிவிகை
தண்டித்தல் - கண்டித்தல், வெட்டல்
தண்டு - ஒந்தி, சிவிகை, சேனை, தடி, தண்டாயுதம், தண்டென் னேவல், துளையுடைப்பொருள், நமனாயுதம், படை, பூவிதழ், மிதுனராசி, மூங்கில், வரம்பு, வீணை
தண்டுதல் - தண்டல்
தண்டுலன் - அரிசி
தண்டை - காலணி, பிரப்பங்கேடகம், வினைமுற்று
தண்ணடை - நாடு, பச்சிலை, மருத நிலத்தூர்
தண்ணம் - ஒருகட்பறை, காடு, குளிர், பறைப்பொது, மழு
தண்ணவன் - சந்திரன்
தண்ணுமை - உடுக்கை, உறுமி மேளம், ஒருகட்பறை, பேரிகை, மத்தளம்
தண்மை - இகழத்தகுபொருள், எளிமை, குளிர்ச்சி, தாழ்வு, புல்லறிவு
ததம் - அகலம்
ததல் - நிலை
ததாகதன் - புத்தன்
ததி - தயிர், பருவம்
ததும்பல் - தளும்பல், நிறைதல், பெருகுதல், வியங்கோண்முற்று
ததைதல் - மிடைதல், வெளிப் படாது நெருங்கிநிற்றல்
தத்தம் - ஈகை
தத்தல் - தாண்டல், வியங்கோண் முற்று
தத்திகாரம் - பொய்
தத்தியம் - மெய்
தத்துவம் - உண்மை
தத்துவன் - அரன், அருகன்
தத்தை - கிள்ளை, முன்பிறந்தான், வினைமுற்று
தநயன் - மகன்
தநயை - மகள்

தந்தகுகம் - பாம்பு
தந்தம் - பல், யானைக்கொம்பு, வினைமுற்று
தந்தாவளம் - யானை
தந்தி - ஆண்யானை, யாழ்நரம்பு
தந்திரம் - உபாயம், நூல், படை, யாழ் நரம்பு
தந்திரர் - கந்தருவர்
தந்திரி - மந்திரி, யாழ் நரம்பி னோசை, யாழ் நரம்பு
தந்திவீழுரியோன் - சிவன்
தந்து - கல்விநூல், பஞ்சிநூல், வினையெச்சம்
தந்துரை - பாயிரம்
தந்துவர் - நெய்வார்
தந்தை - தகப்பன், வினைமுற்று
தபதியர் - கம்மாளர், தச்சர்
தபம் - தவம், மாசிமாதம்
தபனன் - சூரியன், நெருப்பு
தபுதல் - கெடுதல், சாதல்
தபோதனர் - முனிவர்
தப்பு - குற்றம், தப்பென்னேவல், பொய்
தமம் - இராகு, இருள்
தமரம் - அரக்கு, இருள்
தமரல் - பெரிதொலித்தல்
தமர் - உறவோர்
தமள் - தம்மவள்
தமனகம் - மருக்கொழுந்து
தமனி - வன்னிமரம்
தமனியம் - பொன்
தமனியன் - இரணியன், சனி, பிரமன்
தமன் - தம்மவன்
தமாலம் - இலை, பச்சிலைமரம்
தமி - தனிமை
தமிசு - வேங்கைமரம்
தமியம் - கள்
தமிழ் - இனிமை, ஓர்பாடை, நீர்மை
தமிழ்நாடன் - பாண்டியன்
தமையன் - அண்ணன்
தம் - அசைச்சொல், சாரியை (உ-ம்: எல்லார்தம்மையும்)
தம்பம் - கவசம், சங்கீதம், தூண், நிலை, பற்றுக்கோடு, யானைத் தறி
தம்பலம் - இந்திரகோபம், தம்பலம்
தம்பல் - தம்பலம்
தம்பி - தம்பியென்னேவல், பின் பிறந்தான்
தம்பித்தல் - வாயு முதலிய வடக்கல்
தம்மனை - தாய்
தம்மிலம் - மயிர்முடி
தம்முன் - தமயன்
தம்மை - தாய்
தயங்கல் - அசைதல், ஒளி செய் தல், வியங்கோண்முற்று
தயாளம் - கிருபை
தயாளன் - கிருபையுடையோன்
தயை - கிருபை
தரக்கு - புலி
தரங்கம் - நீர்த்திரை
தரங்கிணி - ஆறு
தரங்கு - வழி
தரணம் - தரித்தல், தாண்டல்
தரணி - சூரியன், பூமி, தலை
தரம் - அச்சம், கூட்டம், சமானம், பக்குவம், மலை, வலி
தரல் - தருதல், வியங்கோண் முற்று
தரவு - கலிப்பாவினோருறுப்பு, தலைவன் கட்டளை, பிடரி
தரளம் - அசைவு, திரட்சி, முத்து
தரா - ஓர் கசப்புக்கீரை, சங்கு, தரா, பூசநாள், வினைமுற்று, வினையெச்சம்
தராசு - துலாக்கோல், பரணிநாள்
தராதரம் - மலை
தராதலம் - பூமி
தராபதி - அரசன்
தரிசனம் - காட்சி
தரிஞ்சகம் - அன்றில்

தரித்தல் - சுமத்தல், தங்கல்
தரித்திரம் - வறுமை
தரித்திரி - பூமி, வறியள்
தரிப்பு - தரித்தல்
தரியலர் - பகைவர்
தரு - மரப்பொது
தருக்கம் - நியாயம், பொருள்
தருக்கல் - அலங்கரித்தல், களித்தல், வியங்கோண்முற்று
தருக்கு - அகங்காரம், களிப்பு, தருக்கென்னேவல்
தருணம் - இளமை, சமயம்
தருணி - மங்கைப்பருவத்தாள்
தருதல் - கொடுத்தல்
தருப்பணம் - இன்பநிறைவுறச் செய்சடங்கு, ஓர்தாளம், கண்ணாடி
தருப்பை - குசை
தருமக்கிழவர் - வைசியர் பொது
தருமதேவதை - அம்பாலிகை
தருமநாள் - பரணிநாள்
தருமம் - அறம், தொழில், நீதி
தருமராசன் - அருகன், தருமன், பாண்டுமக்களின் மூத்தோன், புத்தன்
தருமன் - நமன், பாண்டு மக்களின் மூத்தோன்
தரவி - சட்டுவம்
தரை - பூமி, வினைமுற்று
தர்க்கம் - தருக்கம்
தர்ப்பகன் - மன்மதன்
தலம் - இடம், இலை, உலகின் பொது, பூமி
தலை - ஆகாயம், ஆதி, இடம், தலை, தலைமை, பெருமை
தலைத்திராணம் - தலைச்சீரா
தலைநாள் - அச்சுவினிநாள்
தலைப்படல் - எதிர்த்தல், வியங் கோண்முற்று
தலைமகள் - தலைவி
தலைமகன் - புருடன்
தலைமை - முதன்மை
தலையணை - தலையணை
தலையல் - நீந்துபுனல், புதுப் புனல் வரவு, மழைபெய்து விடுதல்
தலைவன் - அண்ணன், அரசன், எப்பொருட்குமிறைவன், குரு, புருடன், மூத்தோன்
தல்லி - தாய்
தவ - குன்றல், மிகுதி
தவசு - தவம்
தவத்தர் - முனிவர்
தவம் - தவசு
தவர் - முனிவர், வில்
தவர்தல் - தப்புதல், சிந்தல்
தவலோகம் - மேலேழுலகிலொன்று
தவல் - குறைதல்
தவளம் - வெண்மை
தவளை - தவளை
தவறல் - கடத்தல், குறைதல், சாதல், வியங்கோண்முற்று
தவறு - குற்றம், தவறென்னேவல்
தவனகம் - மருக்கொழுந்து
தவனம் - தாகம்
தவனன் - சூரியன், நெருப்பு
தவன் - புருடன்
தவாவினை - மலை, முத்தி
தவிசு - தடுக்கு, பாய், மெத்தை
தவிடு - தவிடு
தவித்தல் - இளைத்தல்
தவிர்தல் - ஒழிதல்
தவில் - ஓர்பறை
தவ்வி - சட்டுவம்
தவ்வை - அக்காள், செவிலித்தாய், மூதேவி
தழங்கல் - ஒலித்தல், வியங்கோண் முற்று
தழலல் - அழலல், வியங்கோண் முற்று
தழல் - கவண், கார்த்திகைநாள், கிளிகடிகோல், தழலென் னேவல், தீ

தழிஞ்சி -
சாய்ந்தார்மேற்படராமை
தழுவல் - தழுவுதல், வியங்கோண்முற்று, வினைமுற்று
தழை - இலை, தழையென்னேவல், தளிர், பீலிக்குடை, மயிற்றோகை
தழைக்கை - தழைத்தல், வினைமுற்று
தழைதல் - தளிர்த்தல்
தலைத்தல் - தளிர்த்தல்
தளதளெனல் - ஒலிக்குறிப்பு
தளம் - இலை, உப்பரிகை, சாடி, சாந்து, படை, பூவிதழ்
தளம்பல் - ததும்பல், நடுங்கல், வியங்கோண்முற்று
தளர்ச்சி - சோம்பல், சோர்வு
தளர்தல் - தளர்ச்சி
தளவம் - முல்லைக்கொடி
தளவு - முல்லைக்கொடி
தளி - கோயில், மழைத்துளி, விளக்குத்தண்டு
தளிகை - உண்கலம்
தளிமம் - அழகு, மக்கட்படுக்கை, மெத்தை
தளிரியல் - பெண்
தளிர் - தழை, தளிரென்னேவல்
தளிர்த்தல் - துளிர்த்தல்
தளை - ஆண்மயிர், கால் விலங்கு, காற்சங்கிலி, காற்சிலம்பு, தளையென்னேவல், யாப்புறுப்பு
தளைதல் - பிணித்தல்
தளைப்படுதல் - சிறைப்படல்
தள்ளல் - தள்ளுதல், பொய், வியங்கோண்முற்று
தள்ளாடல் - அசைதல், வியங்கோண்முற்று
தறி - கட்டுத்தறி, தறியென்னேவல், தூண், நெய்வார்
தறிகை - உளி, தறி கருவி, மூளை
தறித்தல் - வெட்டல்
தறுகணாளர் - படைவீரர்
தறுகண் - மரம்
தறுகல் - தடைபடல், வியங்கோண்முற்று
தறை - தரை
தற்சமம் - வடமொழிக்கும் பிறபாடைக்கும் பொதுச்சொல்
தற்சனி - சுட்டுவிரல்
தற்செல்வம் - வலி
தற்பம் - மக்கட்படுக்கை, மனைவி, மெத்தை, மேனிலை
தற்பரன் - கடவுள், சிவன்
தற்பவம் - வடமொழியிற்றிரிந்த சொல்
தற்பாடி - வானம்பாடி
தற்புருடம் - சிவனைம்முகத்தொன்று, தன்னியம்
தனஞ்சயன் - அருச்சுனன், உயிர் போகினும் போகா துடலை வீக்கித்தலைகிழித்தகலும் வாயு, தீ
தனதன் - ஈகையாளன், குபேரன்
தனபதி - குபேரன்
தனம் - பொன், முலை
தனவைசியர் - செட்டிகள்
தனாது - தனது
தனி - ஒப்பின்மை, தனி, தனியென்னேவல்
தனிக்கோலான் - கடவுள்
தனிட்டை - அவிட்டநாள்
தனித்தல் - தனிமை
தனிநிலை - ஆயுதவெழுத்து
தனிமை - உவமையின்மை, ஏகாந்தம்
தனு - உடல், சிறுமை, வில்
தனுசர் - அசுரர்
தனுசன் - மகன்
தனை - அளவு
தன்கு - களிப்பு
தன்மம் - அறம்
தன்மை - குணம், மூவிடத்தொன்று

தன்னம் - சிறுமை, பசுவின் கன்று, மான்கன்று
தன்னியாசி - ஓரிராகம்
தன்னை - தாய்

## தா

தா - ஓரெழுத்து, கேடு, தாவு வென்னேவல், தாவென்னேவல், பகை, வருத்தம், வலி
தாகம் - ஆசை, நீர்வேட்கை
தாக்கணங்கு - இலக்குமி
தாக்கல் - எதிர்த்தல், பாய்தல், வியங்கோண்முற்று
தாக்கு - தாக்கென்னேவல், போர்
தாங்கல் - காத்தல், குளம், சுமத்தல், வியங்கோண்முற்று
தாங்கி - பூணாகக்கட்டுவது, வினையெச்சம்
தாசன் - அடிமையன்
தாசி - அடிமை, பரணிநாள், மேக வன்னப்பூவுள மருதோன்றி மரம்
தாசு - சூதாடு கருவி
தாசேகரம் - ஒட்டகம்
தாடங்கம் - காதணி, தோடு
தாடனம் - அடித்தல்
தாடி - மோவாய்மயிர்
தாடிமஞ்சம் - சத்திக்கொடி
தாடிமம் - தாது, மாதுளை
தாணு - சிவன், தூண், நிலை, நிலைபெறுதல், மலை
தாண்டகம் - இருபத்தாறெழுத்தின் மிக்கவடியான் வரும்பா
தாண்டல் - ஆடல், கடத்தல், செலுத்தல், வியங்கோண்முற்று
தாண்டவம் - கூத்து
தாதகி - ஆத்திமரம்
தாதன் - அடிமை
தாதா - ஈகையாளன், தகப்பன், பிரமன்
தாதி - செவிலித்தாய்
தாது - இரதமாதியேழு, காவிக் கல், தாதுமாதளை, நரம்பு, பூந்தாது, பொன்னாதியேழு, மண்ணாதியைந்து
தாதை - தகப்பன், பாட்டன்
தாதைதாதை - பாட்டன்
தாத்திரம் - கோடாலி
தாத்திரி - பூமி
தாபதம் - முனிவரிருக்கும் வாசம்
தாபதர் - சடைமுடியர், சமண முனிவர்
தாபம் - காடு, துன்பம், வெப்பம்
தாபரம் - இடம், உடல், நிலை, பூமி, மரப்பொது, மலை
தாபரன் - கடவுள்
தாபிஞ்சம் - தமாலம்
தாபிதம் - சூடு, தாபித்தல்
தாமணி - தாம்பு
தாமநிதி - சூரியன்
தாமம் - அணைகயிறு, இடம், உடல், ஒழுங்கு, ஒளி, கீர்த்தி, கொன்றைமரம், சுகம், தாமணி, பிறப்பு, பூமாலை, மணிவடம், முடியுறுப்பு, மூவாறுகோவை மணியுள மாதரிடையணி, வீடு
தாமிரப்பருணி - ஓராறு, மேற்றிசை யானைக்குப் பெண்யானை
தாமிரம் - செம்பு
தாமோதரன் - திருமால்
தாம் - அசைச்சொல் (உ-ம்: நீர் தாம்)
தாம்பிரம் - செம்பு
தாம்பு - கயிறு, தாமணிக்கயிறு
தாம்பூலம் - வெற்றிலை
தாம்பூலவல்லி - வெற்றிலைக் கொடி
தாம்பூலி - வெற்றிலைக்கொடி
தாயத்தார் - தாயாதிகள்
தாயம் - உரித்து, சூதாடுகருவி, தந்தைவழிச்சுற்றம், துன்பம்

தாய் - மாதா, வினையெச்சம்
தாரகம் - உச்சவிசை, பிரணவம், வெள்ளி
தாரகாபதி - சந்திரன்
தாரகை - விண்மீன்
தாரணம் - அட்டாங்கயோகத் தொன்று, உறுதி, தரித்தல், நிலை
தாரணி - பூமி
தாரணை - தாரணம்
தாரம் - அரும்பண்டம், இங்குலி கம், நா, பச்சைப்பாம்பினஞ்சு, பாதரசம், பிரணவம், மனைவி, மூக்காற்பிறக்குமிசை, வல்லிசை, வீணை நரம்பிலொன்று, வெண் கலம், வெள்ளி
தாரா - ஓர்புள், குருகு, விண்மீன், வினைமுற்று, வினையெச்சம்
தாராகணம் - விண்மீன்
தாராதரம் - மேகம்
தாராபதி - சந்திரன், வியாழம்
தாரி - வழி
தாரு - மரக்கொம்பு, மரப்பொது
தாருகச்செற்றாள் - காளி
தாருகச்செற்றோன் - குமரன்
தாருகவிநாசனி - காளி
தாருகன் - ஓரசுரன்
தாருகாரி - குமரன்
தாருகாவனம் - ஓர்வனம்
தாருணம் - அச்சம், பயங்கரம்
தாரை - ஒழுங்கு, கண், கண்மணி, காளம், கூர்மை, கொடிப் படை, சிறுசின்னம், சீலை, சுக்ரீவன் மனைவி, திகிரி, தேவகுருவின் மனைவி, நா, நேரோடல், மழை, வலி, வழி, விண்மீன், வினைமுற்று
தார் - கிண்கிணிமாலை, கொடிப் படை, படை, படைவகுப்பு, பூ, பூவரும்பு, மாலை
தார்க்கியன் - கருடன்
தாலகேதனன் - வீட்டுமாசாரி
தாலம் - உன்கலம், கூந்தற்பனை, நா, பனை, பூமி, யானைச்செவி
தாலவட்டம் - பூமி, யானைச் செவி, யானைவால்
தாலவிருந்தம் - பேராலவட்டம், விசிறி
தாலாலம் - பழிமொழி
தாலி - மங்கலநாண்
தாலு - நா
தால் - பிள்ளைக்கவியிலோர் பருவம்
தாவந்தம் - நரகம்
தாவம் - காடு, காட்டுத்தீ, மருத நிலத்தூர்
தாவல் - தாண்டல், பாய்தல், வியங்கோண்முற்று
தாவளம் - மருத நிலத்தூர்
தாவு - குதிரை நடை, தாவென் னேவல், பகை, பற்றுக்கோடு, வருத்தம், பலி
தாவுதல் - தாண்டல், பரத்தல்
தாழி - குடம், சாடி, பரணி நாள்
தாழை - தாழைமரம், தென்னை மரம், வினைமுற்று
தாழ் - சுவர்ப்புறத்து நீண்ட வுத்திரம், தாழக்கோல், தாழென்னேவல்
தாழ்தல் - ஆசை, ஆசைப் பெருக்கம், தங்கல், வணங்கல்
தாழ்த்தல் - தாழ்த்துதல், மந்தம், வியங்கோண்முற்று
தாழ்வடம் - முத்துக்கோவை
தாழ்வாரம் - வீட்டிறப்பு
தாழ்வு - ஈனம், பள்ளம்
தாளம் - ஓர் வாச்சியம்
தாளாண்மை - ஊக்கம், முயற்சி
தாளாளர் - வைசியர்பொது
தாளி - அனுடநாள், ஓர்கொடி, தாளியென்னேவல், பனைமரம்
தாளிதம் - தாளிப்பு
தாள் - ஆதி, கால், முயற்சி

தாறு - அளவு, இருப்புமுள், ஈந்து கமுகு வாழையிவற்றின் குலை, வில்லின் குதை
தாற்றுக்கதிர் - கொத்தாய்க் காய்க்குங்கதிர்
தாற்றுப்பூ - கொத்தாய் நிற்கும் பூ
தானம் - இடம், கொடை, தேவ லோகம், யானைமதம், வலி
தானவர் - அசுரர்
தானவன் - அசுரன், சந்திரன்
தானியம் - பண்டம்
தானை - ஆயுதப்பொது, தூசு, படை
தானைத்தறுகணாளர் - படை வீரர்
தான் - அசைச்சொல் (உ-ம்: நீதான்)
தான்றி - தான்றிமரம்

## தி

திகம்பரர் - சமணமுனிவர்
திகம்பரன் - அருகன், நிருவாணி
திகரம் - இளைப்பு, ஒரெழுத்து
திகழல் - ஒளிசெய்தல்
திகழ் - ஒளி, திகழெனேவல்
திகழ்ச்சி - விளக்கம்
திகழ்தல் - விளங்கல்
திகிரி - உருளை, சக்கராயுதம், தேர், மலை, மூங்கில், வட்டம்
திகை - திகையென்னேவல், திசை, தேமல்
திகைத்தல் - மயங்கல்
திக்காரம் - நிந்தை
திக்கு - திசை
திங்கட்குடையோன் - மன்மதன்
திங்கணாள் - மிருகசீரிடம்
திங்கள் - சந்திரன், மாதம்
திசை - திக்கு
திசைச்சொல் - அவ்வவர், நாட்டுச் சொல்
திசைமுகன் - பிரமன்
திடம் - மெய், வலி
திடர் - திட்டை, மேடு
திடல் - திட்டை, மேடு
திடுதிடெனெல் - ஈரொலிக் குறிப்பு
திட்கல் - அச்சக்குறிப்பு, வியங் கோண்முற்று
திட்டம் - ஒப்புரவு, நிலவரம், வினைமுற்று
திட்டல் - வைதல், வியங்கோண் முற்று
திட்டி - கண், வினையெச்சம்
திட்டு - திட்டென்னேவல், மேடு
திட்டை - உரல், திடர், திண்ணை, மேடு, வினைமுற்று
திட்பம் - காலநுட்பம், திண்மை
திணி - திணியென்னேவல், திண்மை
திணிம் - போர்
திணிதல் - திண்மை
திணித்தல் - துறுத்தல்
திணுக்கம் - திணுங்கல்
திணுங்கல் - நெருங்கல், வியங்கோண்முற்று
திணை - அகத்திணை, அஃறிணை, இடம், உயர்திணை, ஒழுக்கம், குடி, குலம், புறத்திணை, பூமி
திண்டி - தம்பட்டம், யானை
திண்டிமம் - தம்பட்டம்
திண்ணகம் - செம்மறிக்கடா, துருவாட்டேறு
திண்ணம் - மெய், வலி
திண்ணியம் - வலியுடையோன்
திண்டி - வேதிகை
திண்மை - மெய், வலி
திதலை - தேமல்
திதனி - தேமல்
திதி - காசிபப்பிரமாவின் மனைவி, காத்தல், சந்திரனாள், திதியென் னேவல், நிலை, நிலைபெறுதல்
திதித்தல் - நிலைபெறுத்தல்
திதிமைந்தர் - அசுரர்

தித்தம் - கசப்பு
தித்தி - தித்திப்பு, தித்தியென்னேவல், தின்றற்குரியன், வேள்விக் குண்டம்
தித்திரி - சிச்சிலிக்குருவி
திந்திருணி - புளியமரம்
திப்பி - கோது
திமிங்கிலகிலம் - திமிங்கிலத்தை விழுங்குமீன்
திமிங்கிலம் - யானையை விழுங்கு மீன்
திமிசு - வேங்கைமரம்
திமிதிமி - யானையை விழுங்குமீன்
திமிரம் - இருள், நரகம்
திமிராரி - சூரியன்
திமிர்தம் - ஒலி
திமிர்தல் - பூசுதல், வளர்த்தல்
திமிலம் - பேரொலி, யானைமீன்
திமிலர் - நெய்தனிலமாக்கள்
திமிலை - பம்பைமேளம்
திமில் - தோணி, மரக்கலம், வேங்கைமரம்
திமிறல் - வளர்தல்
திமைத்தல் - கிளப்புதல்
தியக்கம் - அசைவு, கலக்கம்
தியக்கு - தியக்கம்
தியாகம் - கொடை
தியாகி - கொடையாளன்
தியானம் - அட்டயோகத்தொன்று, நினைவு
தியோதம் - வெயில்
திரங்கல் - திரைதல், மிளகு, வியங்கோண்முற்று
திரச்சினமுகம் - நாணத்தாற்றலை யாட்டல்
திரட்சி - உண்டை, முத்து
திரட்டல் - கூட்டல், வியங்கோண்முற்று
திரட்டு - கூட்டம், திரட்டென்னேவல்
திரணபதி - வாழை
திரணம் - துரும்பு
திரமிடம் - தமிழ்
திரம் - நிலை
திரவம் - நீர் முதலியவற்றினெகிழ்ச்சி
திரவியம் - பொன்
திரளல் - திரட்சி, வியங்கோண் முற்று
திரள் - உண்டை, குழியம், கூட்டம், திரளென்னேவல், படை
திராமரம் - பவளமல்லிகை
திராமிடம் - தமிழ்
திராவிடம் - ஓர் தேசம், தமிழ்
திரி - திரிசீலை, திரியென்னேவல், மூன்று
திரிகை - இடக்கைமேளம், ஏந்திரம், குலாலசக்கரம், திரிதல்
திரிதரல் - சுழழல், திரிதல், மீளல்
திரிதராட்டிரன்மைந்தன் - துரியோதனன்
திரிதல் - உலாவல், கெடுதல், சுழலல், நடத்தல்
திரிபதகை - கங்கை
திரிபு - வினையெச்சம், வேறுபாடு
திரிபுரம் - முப்புரம்
திரிபுராந்தகன் - சிவன்
திரிபுரி - சாரடை
திரியம்பகன் - அரன், அருகன்
திரிவிக்கிரமன் - விட்டுணு
திரு - இலக்குமி, செல்வம்
திருகல் - முறுக்கல், வளைத்தல், வியங்கோண்முற்று
திருகு - திருகென்னேவல், முறுக்கு
திருக்கு - கண், குற்றம்
திருக்கை - ஓர்மீன், வினைமுற்று
திருடல் - களவு, வியங்கோண் முற்று
திருடன் - கள்ளன்
திருட்டி - கண்
திருட்டு - களவு
திருதி - துணை

திருத்தம் - திருந்தல், வினைமுற்று
திருத்தல் - திருந்தச்செய்தல், வியங்கோண்முற்று
திருநாள் - உற்சவநாள்
திருநீறு - விபூதி
திருந்தலர் - பகைவர்
திருந்தல் - திருத்தமாதல், வியங்கோண்முற்று
திருமகன்மைந்தன் - மன்மதன்
திருமகள் - இலக்குமி
திருமரம் - அரசமரம்
திருமலர் - தாமரை
திருமறுமார்பன் - அருகன், விட்டுணு
திருமாலுந்தி - தாமரை
திருமால்புதல்வன் - மன்மதன்
திருமுற்றம் - குதிரைவையாளி வீதி
திரும்பல் - மீளல், வியங்கோண்முற்று
திருவிலி - கைம்பெண்
திருவுறுப்பு - நுதன்மேலணி
திரை - ஆறு, இடுதிரை, கடல், திரைதல், திரையென்னேவல், புனற்றிரை
திரைத்தல் - திரைக்குதல்
திரையல் - வியங்கோண்முற்று, வெற்றிலை
திரையன் - தொண்டமான்
திலகம் - கலித்துறை, சிந்தூரம், சுட்டி, பொட்டு, மஞ்சாடி மரம்
திலதம் - சுட்டி, நெற்றித்திலகம், பொட்டு
திலம் - எள், மஞ்சாடிமரம்
தில் - அசைச்சொல், ஒழியிசை, காலம், விழைவு
தில்லம் - காடு
தில்லை - ஓர்மரம், சிதம்பரம்
திவசம் - நாள்
திவண்டல் - துவளல்
திவரம் - நாடு
திவலை - சிதறுந்துளி, மழை, மழைத்துளி
திவவு - வீணைவலிக்கட்டு
திவளல் - துவளல், வியங்கோண்முற்று
திவறல் - சாதல்
திவா - பகல்
திவாகரன் - சூரியன்
திளைத்தல் - அனுபவித்தல், நிறைதல், நெருங்கல், பெருகுதல்
திறத்தல் - திறக்குதல்
திறம் - காரணம், குணம், குறை நரம்புள வீணை, கூறுபாடு, வலி
திறம்பல் - மாறுபடல், வியங்கோண்முற்று
திறலோன் - திண்ணியன்
திறல் - பகை, போர், வலி
திறவு - திறத்தல்
திறனில்யாழ் - நெய்தல் யாழ்த்திறம்
திறன் - காரணம், குணம், கூறுபாடு
திறை - அரசிறை
தினகரன் - சூரியன்
தினமணி - சூரியன்
தினம் - நாள்
தினவு - சொறி
தினாந்தம் - காலைப்பொழுது
தினை - ஓர் பயிர், சிறுமை
தின்றல் - புசித்தல்

## தீ

தீ - அறிவு, இனிமை, ஓரெழுத்து, தீமை, தீயென்னேவல், நரகம், நெருப்பு
தீக்குணர் - கீழ் மக்கள்
தீக்கை - விரதநியமம், வினைமுற்று
தீக்கையோன் - அரன், ஆசான்
தீங்கு - குற்றம், தீமை

தீச்சொல் - பழிச்சொல்
தீட்டல் - எழுதல், சித்திரமெழுதல், வியங்கோண்முற்று
தீண்டல் - தொடல், வியங்கோண் முற்று
தீது - குற்றம், தீமை
தீத்திரள் - ஊழித்தீ
தீபமத்திகை - விளக்குத்தண்டு
தீபம் - சோதிநாள், விளக்கு
தீபவதி - ஆறு
தீபவராடி - வராடித்திறத்தொன்று
தீபிகை - விளக்கு
தீமை - பொல்லாங்கு
தீம் - இனிமை, தித்திப்பு
தீம்பர் - கீழ் மக்கள்
தீயகம் - நரகம்
தீயம் - தித்திப்பு
தீயர் - கீழ்மக்கள், வேடர்
தீயளி - காய்
திரம் - கரை, சிறுவரம்பு, வலி
தீர்க்கம் - நிச்சயம், நீளம்
தீர்தல் - நடத்தல், நீளம், முடிதல், விடுதல்
தீர்த்தம் - திருவிழா, நீர்
தீர்த்தர் - கடவுளர்
தீர்த்தல் - முடித்தல், விடுத்தல்
தீர்த்தன் - அருகன், உபாத்தி யாயன், குரு, சிவன்
தீர்த்திகை - ஆறு
தீர்ப்பு - தீர்த்தல்
தீர்வை - இறை, கீரி, வினைமுற்று
தீவலஞ்செய்தல் - கலியாணம்
தீவி - புலி
தீவிகை - தீபிகை
தீவிரம் - சூரியகிரணம், நரகம், பெருங்கோபம்
தீவினை - பாவம்
தீவு - இடைக்குறை, சுவை
தீவேள்வி - கலியாணம்
தீனர் - இரப்போர்
தீனன் - தரித்திரன்

## து

து - ஒரெழுத்து, துவ்வென்னேவல்
துகள் - குற்றம், பராகம், புழுதி
துகிரிகை - சாந்து, சித்திரம்
துகிர் - பவளம்
துகிலிகை - எழுதுகோல், சித்திரம்
துகில் - சீலை, விருதுக்கொடி
துகினம் - பனி
துகைத்தல் - வருந்துதல்
துக்கம் - குற்றம், துன்பம், நரகம்
துன்பம் - உயர்ச்சி, பரிசுத்தம், பெருமை
துச்சவனன் - இந்திரன்
துச்சில் - ஒதுக்கிடம், கூட்டு
துஞ்சல் - உறங்கல், சாதல், சோம்பல், நிலைபெறுதல், வியங்கோண்முற்று
துடக்கு - மகளிர்சூதகம்
துடவை - உழவுகொல்லை, பூந்தோட்டம்
துடி - அகில், உடுக்கை, உதடு, ஏலம், கால நுட்பம், குமர னாடல், குறிஞ்சி நிலப்பறை, கூதாளிச்செடி, சத்தகன்னி கைகளாடல், துடியென்னேவல், பாலைநிலப்பறை
துடித்தல் - குதித்தல், மின்னல்
துடியடி - யானைக்கன்று
துடுப்பு - துடுப்பு
துடுமெனல் - ஒலிக்குறிப்பு
துடுவை - நெய்த்துடுப்பு
துடை - சுவர்ப்புறத்து நீண்ட வுத்திரம், துடையென்னேவல்
துடைத்தல் - துடைக்குதல்
துடைப்பம் - வாருகோல்
துட்கல் - அச்சக்குறிப்பு, வியங் கோண்முற்று
துட்கெனல் - அச்சக்குறிப்பு, வியங் கோண்முற்று
துட்டர் - தீயர்

துட்டன் - தீயன், தேள்
துட்டு - தீமை
துட்டை - வசவி
துணங்கறல் - இருள், திருவிழா
துணங்கை - இருகையுமுடக்கிப் பழுப்புடையொத்தியாடல், கூத்து, திருவிழா
துணர் - பூ, பூங்கொத்து, பூந்தாது
துணவு - சீக்கிரம்
துணி - ஒளி, சோதிநாள், துணியென்னேவல், துண்டம், தூக்கங்கள், தெளிவு, தேரிடக்கியம்
துணிதல் - தெளிதல்
துணித்தல் - அறுத்தல், வெட்டல்
துணிவு - தெளிவு
துணுக்கம் - அச்சம், உள்ளோசை
துணுக்கெனல் - அச்சக்குறிப்பு, வியங்கோண்முற்று
துணை - அளவு, இணை, ஒப்பு, சகாயம், சல்லியம்
துணைக்காரணம் - உபகரணம்
துணைவர் - மந்திரிகள், தோழர்
துணைவன் - தலைவன், தோழன், மந்திரி
துணைவி - தோழி, மனைவி
துணைவு - விரைவு
துண்டம் - சாரைப்பாம்பு, துணி, துண்டித்தல், முகம், மூக்கு, பறவைமூக்கு, யானைத்துதிக்கை
துண்டித்தல் - அறுத்தல், தறித்தல், வெட்டல்
துண்ணெனல் - அச்சக்குறிப்பு, வியங்கோண்முற்று
துதமுகம் - வேண்டாமைக்கு வலமிடந் தலையாட்டல்
துதம் - அசைவு
துதி - தோத்திரம், துதியென் னேவல்
துதித்தல் - வழுத்தல்,
துதைதல் - நெருங்கல்
துத்தம் - கண்மருந்து, சமனிசை, நாய், நாவினாற் பிறக்குமிசை, பால், யாழினோர் நரம்பு, வயிறு
துத்தல் - புசித்தல்
துத்தி - உண்டற்குரியன, ஓர் செடி, தேமல், பாம்பின் படப்பொறி, வினைமுற்று
துந்துமாரி - முதலெழு வள்ளலி லொருவன்
துந்துமி - பறையின்பொது, பேரிகை
துப்பகம் - நெய்
துப்பு - அரக்கு, அறிவு, அனுபோகம், ஆயுதப்பொது, உணவு, குற்றம், சகாயம், சிவப்பு, சுத்தம், துணை, துணைக் காரணம், நெய், பகை, பவளம், பானம், பொலிவு, மிகுதி, வலி
துப்புரவாக்கல் - சுத்தஞ்செய்தல்
துப்புரவு - அலங்காரம், ஐம்பொறி நுகர்தல், ஒப்புரவு
துமானம் - ஆபரணப்பெட்டி
துமி - துமியென்னேவல், மழைத்துளி
துமித்தல் - அறுத்தல், வெட்டல்
தும்பி - கரை, யானை, வண்டி னான், வண்டு
தும்பு - ஓர் கயிறு
தும்பை - ஓர் செடி, கூட்டம், பொருதல், போர் வென்றார்க்கு மாலை, வெற்றிலை
தும்மல் - உயிர்ப்பு, தும்முதல், விடுதல், வியங்கோண்முற்று
தும்மு - கொசுகு, தும்மென் னேவல்
துயக்கு - தளர்ச்சி
துயரம் - துன்பம்
துயருறுவோன் - தரித்திரன்
துயர் - துன்பம்

துயல்வரல் - அசைதல், வியங்கோண்முற்று
துயிலல் - நித்திரைசெய்தல், வியங்கோண்முற்று
துயிலிடம் - மக்கட்படுக்கை
துயில் - துயிலென்னேவல், நித்திரை
துயிறல் - நித்திரைசெய்தல்
துய் - அறிவின்றிரிபு, நூற்கும் பஞ்சிற்றொடர் நுனி
துய்த்தல் - புசித்தல்
துரகதம் - குதிரை
துரகம் - குதிரை
துரங்கம் - செலுத்தல், வியங்கோண்முற்று
துரந்தரன் - பாரந்தாங்குவோன்
துரவு - கிணறு
துரால் - செத்தை, துன்பம்
துரிசு - துன்பம்
துரிஞ்சில் - உசிலமரம், வௌவால்
துரிதம் - கலக்கம், கேடு, சீக்கிரம், துன்பம், பாவம்
துரியம் - சுமத்தல், நான்காமவத்தை, பொதியெருது
துருக்கம் - கத்தூரிமிருகம், கலக்கம், காடு, குங்குமமரம், மலை மேற்கோட்டை
துருக்கர் - ஓர் சாதியார்
துருக்கு - மிலேச்சசாதி
துருசு - களிம்பு, சீக்கிரம்
துருத்தி - ஆற்றிடைக்குறை, ஊதுந்துருத்தி
துருமம் - மரப்பொது
துருமோற்பலம் - கோங்கு மரம்
துரும்பு - திரணம்
துருவண்ணம் - வெள்ளி
துருவம் - அசையாநிலை
துருவல் - கடைதல், துனைத்தல், தேடல், வியங்கோண்முற்று
துருவை - செம்மறியாடு, வினைமுற்று
துரோணம் - எண்காற்புள், காக்கை, தனுவிராசி, தும்பைச் செடி, பதக்கு, வில்
துர்க்கந்தம் - தீயவாசனை
துர்க்கம் - மலைமேற்கோட்டை
துர்த்தூரம் - ஊமத்தை
துலக்கல் - விளக்கல், வியங்கோண்முற்று
துலங்கல் - ஒளிசெய்தல், வியங்கோண்முற்று
துலம் - கனம், நிறை
துலவம் - பஞ்சு
துலா - ஏற்றமரம், நிறைகோல்
துலாம் - ஏற்றவுறுப்பு, ஓரிராசி, ஓர்நிறை
துலிதம் - அசைவு
துலை - கனம், துலாராசி, நிறை, நீரிறைக்குந்தலை
துல்லம் - பேரொலி
துல்லியம் - உவமை
துவக்கல் - ஆரம்பித்தல், கட்டல், வியங்கோண்முற்று
துவக்கு - உடல், சங்கிலி, துவக்கென்னேவல், தோல், பிணக்கு
துவசம் - அடையாளம், விருதுக்கொடி
துவசர் - கள்விற்போர்
துவட்டர் - கம்மாளர்
துவட்டல் - துடைத்தல், துவட்டுதல், வியங்கோண்முற்று
துவட்டா நாள் - சித்திரைநாள்
துவந்துவம் - இரண்டு
துவம் - அசையாநிலை
துவரம் - துவர்ப்பு
துவரை - ஓர்பயறு, துவாரகை, வினைமுற்று
துவர் - சிவப்பு, துவர்ப்பு, பகை, பவளம், விறகு
துவர்க்காய் - பாக்கு
துவர்தல் - திமிர்தல்
துவர்த்தல் - ஓர் சுவை
துவலை - மழை, மழைத்தூவல்

துவல் - சீக்கிரம்
துவளல் - அசைதல், திவளல், வியங்கோண்முற்று
துவறல் - துவலைவிடுதல், விரைவு
துவன்றல் - சாதல், நிறைதல், நெருங்கல், பொலிவு, வியங்கோண்முற்று
துவாதசான்மா - சூரியன்
துவாந்தம் - இருள், நரகம்
துவாரம் - வாயில்
துவி - இரண்டு
துவிதம் - இரண்டு
துவை - இறைச்சி, ஒலி, துவையென்னேவல், பருகுதற்குரியன, பிண்ணாக்கு, புளிங்கறி
துவைத்தல் - ஒலித்தல், பேரொலி, வாச்சியம் வாசித்தல், விடுதல்
துவைபாயனன் - வியாசன்
துவ்வல் - புசித்தல், வியங்கோண்முற்று
துவ்வாமை - வெறுப்பு
துவ்வு - அனுபவம், ஐம்பொறி நுகர்ச்சி
துழனி - ஒலி, பறவைக்கூட்டத்தொலி
துழாய் - துளசி, வினையெச்சம்
துழாய்மௌலி - திருமால்
துழாய்வனம் - துளசி
துழாவல் - கலத்தல், வியங்கோண்முற்று, வெட்டல்
துலக்கம் - அச்சம், ஒளி, சோதிநாள்
துளங்கல் - ஒளிசெய்தல், வியங்கோண்முற்று
துளங்கொளி - கேட்டைநாள்
துளவம் - துளசி
துளவு - துளசி
துளி - துளியென்னேவல், பெண்ணாமை, மழை, மழைத்துளி
துளித்தல் - மழைபெய்தல்
துளிர் - தளிர், துளிரென்னேவல்
துளிர்த்தல் - தளிர்த்தல்
துளும்பல் - அலைதல், திமிர்தல், வியங்கோண்முற்று
துளுவம் - ஓர்தேசம், பதினெண் பாடையிலொன்று
துளை - துவாரம், துளையென்னேவல், மூங்கில், வாயில்
துளைத்தல் - துளைக்குதல்
துள்ளல் - ஆடு, கலிப்பாவோசை, குதித்தல், கூத்து, கொசுகு, வியங்கோண்முற்று
துறக்கம் - தேவலோகம்
துறத்தல் - துறவு, நீக்கல்
துறந்தோர் - நீத்தோர்
துறவர் - முனிவர்
துறவி - முனிவன்
துறவோர் - நீத்தோர்
துறு - துறுகல், துறுவென்னேவல்
துறுகல் - ஓர்கல், சலதாரை முதலிய வடைக்குங்கல்
துறுத்தல் - துறுக்குதல்
துறுபவம் - நெருக்கம்
துறுமல் - திரட்சி, நெருங்கல், வியங்கோண்முற்று
துறுவல் - நெருங்கல், புசித்தல், வியங்கோண்முற்று
துறை - ஆறு, இடம், நீர்த்துறை, பாவினத்தொன்று, வழி, வினைமுற்று
துறைவல்லோர் - கற்றோர்
துறைவன் - நெய்தனிலத்தலைவன்
துற்றல் - உண்டல், குவிதல், நிறைதல், வியங்கோண்முற்று
துற்று - சோறு, துறுகல், துற்றென்னேவல், நெருக்கம்
துனி - அச்சம், ஆறு, கோபம், சினம், துன்பம், நோய், புலவி நீட்டம்
துன்பு - துன்பம்
துன்றல் - நெருங்கல், வியங்கோண்முற்று
துன்னம் - தைத்தல்

துன்னர் - சக்கிலியர், செம்மார், தையற்காரர்
துன்னல் - கிட்டல், நெருங்கல், வியங்கோண்முற்று
துன்னார் - பகைவர்
துன்னு - இறைச்சி, துன்னென்னேவல், முதுகு
துன்னுநர் - சினேகிதர்

## தூ

தூ - ஓரெழுத்து, சுத்தம், தசை, தூவென்னேவல், பகை, பற்றுக்கோடு, புள்ளிறகு, வெண்மை
தூக்கம் - ஆபரணத்துடக்கு வடிவு, காதணி, சல்லியம், நித்திரை
தூக்கல் - ஆராய்தல், தூக்குதல், நிறுத்தல், வியங்கோண்முற்று
தூக்கு - ஆராய்தல், உயர்ச்சி, உவமைச்சொல், உறி, காற்றுலாம், கூத்து, துலாராசி, தூக்கங்கள், தூக்கணங்குருவி, நிறை, பா
தூங்கல் - ஆடல், உறங்கல், கூத்து, சோம்பல், தாழ்வு, யானை, வியங்கோண்முற்று
தூசரம் - கொஞ்சவெள்ளை
தூசர் - வண்ணார்
தூசி - குதிரை, கொடிப்படை, படைவகுப்பு, புழுதி
தூசு - சித்திரைநாள், சீலை, யானைகட்டுங்கயிறு
தூட்டி - சீலை
தூணம் - அம்புக்கூடு, தூண், பகை
தூணி - அம்புக்கூடு, ஓரளவு
தூணிகர் - செட்டிகள்
தூணிரம் - அம்புக்கூடு
தூண் - தூண், பற்றுக்கோடு
தூண்டல் - எழுப்பல், செலுத்தல், வியங்கோண்முற்று
தூண்டில் - மீன்பிடிக்குங்கருவி யிலொன்று
தூதன் - தூதவன்
தூதி - தூதுவள், வினைமுற்று
தூது - செல்லுந்தூது
தூதுணம் - தூக்கணங்குருவி, புறா
தூதுவன் - தூதன், புதன்
தூபமுட்டி - தூபக்கால்
தூபம் - புகை
தூபரம் - கொம்பிலா விலங்கு
தூபிதம் - சூடு
தூமகேது - கொடுமை, தீ
தூமான் - பீடிகை
தூமம் - புகை, மட்கலஞ்சுடு சூளை
தூமலம் - கருமைமிக்கசிவப்பு
தூமிரம் - கருமைமிக்கசிவப்பு
தூமை - தூய்மை
தூம்பிரம் - கருமைமிக்கசிவப்பு
தூம்பு - அருநெறி, உட்டுளை, சலதாரை, மடை, மரக்கால், மூங்கில், வழி, வாயில்
தூயவர் - முனிவர்
தூயாள் - சரச்சுவதி
தூய்தன்மை - அசுத்தம்
துய்தாக்கல் - செப்பம்பண்ணல்
தூய்து - சுத்தம்
தூய்மை - சுத்தம்
தூரம் - சேய்மை
தூரல் - துன்பம், வியங்கோண் முற்று
தூரியம் - உவகைப்பறை, எருது, எழுதுகோல், எறிபடைப் பொது, கைவேல், நல்லாடை, பறைப்பொது, முரசு
தூர் - தூரென்னேவல், வேர்
தூர்க்கை - பூரநாள்
தூர்த்தர் - வஞ்சகர், விடர்
தூர்த்தல் - செறுத்தல்
தூர்த்தன் - வஞ்சகன், விடன்

தூர்த்தை - தூர்த்த குணமுள்ளாள், வினைமுற்று
தூர்வகம் - சுமத்தல், பொதியெருது
தூர்வாசம் - அட்டாதசவுப புராணத்தொன்று
தூர்வை - அறுகு, செத்தை
தூலம் - பஞ்சு, பருமை, வீட்டுத்திரம்
தூவத்தி - வாள்
தூவல் - சிந்தல், மழை, மழை பெய்தல், மழைத்துளி, மழைத் தூவல், வியங்கோண்முற்று
தூவி - அன்னத்திறகு, இறகு, மயிற்றோகை, வினையெச்சம்
தூவு - ஊன், தூவென்னேவல்
தூளி - குதிரையினார்ப்பு, பராகம், புழுதி
தூளிதம் - தூளையுடையதாகப் பண்ணப்பட்டது
தூள் - புழுதி, பூந்தாது
தூறல் - பழிச்சொல், மழை, மழைத்துளி, மழைபெய்தல், வியங்கோண்முற்று
தூறு - கூட்டம், சிறுசெடி, தூறென்னேவல், பழிச்சொல்
தூற்றல் - தூற்றுதல், பழிகூறல், வியங்கோண்முற்று
தூற்றுதல் - பழிகூறல்

## தெ

தெகுளம் - நிறைதல், பெருக்குதல்
தெகுளல் - பெருகல்
தெங்கணம் - ஓர் தேயம்
தெங்கு - தென்னைமரம்
தெட்டல் - வஞ்சித்தல், வியங் கோண்முற்று
தெட்பம் - முதிர்ச்சி
தெண்டிரை - கடல்
தெண்ணீர் - தெளிநீர்
தெப்பம் - நீந்துந்தெப்பம்
தெய்ய - இடைச்சொல் (உ-ம்: சொல்லேன்றெய்ய நின்னோடு பெயர்ந்தே)
தெய்வதம் - தெய்வம்
தெய்வமந்திரி - வியாழம்
தெய்வம் - ஊழ், கடவுள், வருடம்
தெய்வயானைகாந்தன் - குமரன்
தெய்வவிரதன் - வீட்டுமாசாரி
தெரிசொல் - சத்தியம், காரணம்
தெரிதல் - ஆலோசனை, காணல்
தெரித்தல் - எழுதல், சொல்லுதல், மாறுபாடு
தெரிமா - சிங்கம்
தெரியலர் - அறியாதார்
தெரியல் - ஆலோசனை, ஆராய் தல், காணல், பூமாலை, வியங் கோண்முற்று
தெரிவு - தெரிதல்
தெரிவை - பெண், முப்பத்தொரு வயதுப் பெண், வினைமுற்று
தெரு - வழி, வீதி
தெருட்சி - அறிவு, தெளிவு
தெருட்டல் - உறுதிப்படுத்தல், வற்புறுத்தல்
தெருமரம் - சுழலல்
தெருளல் - தெளிவு, வியங்கோண் முற்று
தெருள் - தெருளென்னேவல், தெளிவு
தெவிட்டல் - உமிழ்தல், ஒலித்தல், நிறைதல், நினைத்தல், வியங் கோண்முற்று
தெவிளல் - நிறைதல்
தெவு - கொளற்பொருட்டு (உ-ம்: நீர்தெவு நிரைத்தொழுவர்)
தெவுட்டல் - அடைத்தல், ஒளித்தல், கொப்பளித்தல், தங்கல், நிறைதல், நினைத்தல், வியங்கோண்முற்று
தெவுளல் - பெருகுதல், வியங் கோண்முற்று
தெவ் - பகை, போர்

தெவ்வர் - பகைவர்
தெவ்வினை - போர்
தெவ்வு - சந்திரன், பகை, போர்
தெழித்தல் - அதட்டல், கோபம், சினக்குறிப்பு, துவைத்தல், பேரொலி
தெளிதல் - ஆராய்தல், ஆலோசனை, துளைத்தல், தெளிவு
தெளித்தல் - ஒலித்தல், கொழித்தல், துப்புரவாக்கல், தூவல், விதைத்தல்
தெளிர் - உள்ளோசை
தெளிர்தல் - பேசலாலெழுமொலி
தெளிவு - அறிவு, துணிவு
தெள்ளல் - கொழித்தல், தெளிதல், வியங்கோண்முற்று
தெள்ளி - யானை, வினையெச்சம்
தெள்ளுதல் - கொழித்தல், தெரிதல், தெளிதல்
தெறித்தல் - தெரிக்குதல்
தெறுக்கால் - தேள், விருச்சிக விராசி
தெறுதல் - அழித்தல், தங்கல்
தெறுத்தல் - நெரித்தல்
தெறுநர் - பகைவர்
தெற்றல் - அலைத்தல், மாறுபாடு, வியங்கோண்முற்று
தெற்றி - சித்திரகூடம், திண்ணை, வினையெச்சம்
தெற்று - தெற்றென்னேவல், தேற்றம்
தெனாது - தெற்குள்ளது
தென் - அழகு, இசை, கறுப்பு தெற்கு, தென்னைமரம்
தென்கால் - தென்காற்று
தென்கீழ்த்திசையிறை - தீ
தென்புலத்தார் - பிதிர்த்தேவதைகள்
தென்மலை - பொதியமலை
தென்மேற்றிசைப்பாலன் - நிருதி
தென்றல் - தென்காற்று, முன்பனிப் பருவத்தின் காற்று
தென்றற்றேரோன் - மன்மதன்
தென்றி - தென்காற்று
தென்றிசைக்கோன் - நமன்
தென்னவன் - பாண்டியன்
தென்னை - தெங்கமரம்

## தே

தே - ஒரெழுத்து, கடவுள், கிருபை
தேகம் - உடல்
தேக்கல் - நிறைதல், வியங்கோண் முற்று
தேக்கு - ஓர் மரம், சமுகு, தித்திப்பு, தேக்கென்னேவல்
தேங்கல் - அச்சக்குறிப்பு, நிறைதல், வியங்கோண்முற்று
தேசா - ஓரிராகம்
தேசி - பெருங்குதிரை
தேசிகம் - அவ்வவ்நாட்டுச்சொல், அழகு, ஒளி, ஓர்கூத்து, பொன்
தேசிகன் - உபாத்தியாயன், குரு தேசாந்தரி
தேசிகர் - செட்டிகள்
தேசியம் - திசைச்சொல்
தேசு - ஒளி, பொன்
தேடல் - தேடுதல், வியங்கோண் முற்று
தேட்கடை - மூலநாள்
தேட்டு - தேடல்
தேமல் - படர்சுணங்கு
தேமா - தித்திப்புள்ள மாமரம்
தேம் - ஏழனுருபு (உ-ம்: கோடாய் தேத்து), கள், தித்திப்பு, வாசனை
தேம்பல் - இளைத்தல், பழம்பூ, மெலிதல், வாடல், வியங்கோண் முற்று
தேயம் - இடம், களவு, நாடு
தேயு - நெருப்பு
தேய்தல் - இளைப்பு, உரைதல்
தேய்த்தல் - அழித்தல், குறைதல், உரைத்தல், கொல்லல்

தேய்ப்பு - அரைப்பு
தேய்வு - குறைபாடு, மெலிவு
தேய்வை - பரிமளச்சாந்து, வினைமுற்று
தேரகன் - தேர்ப்பாகன்
தேரர் - புத்தர்
தேரன் - ஆயுர்வேத முழுதுணர்ந்த வோர் புலவன்
தேரார் - கல்லாதார், கீழ்மக்கள், பகைவர்
தேரை - தவளையிலோர் பேதம், வினைமுற்று
தேர் - இரதம், உரோகணிநாள், தேரென்னேவல்
தேர்ச்சி - எண்ணல், கல்வி, தெளிவு
தேர்ச்சித்துணைவர் - மந்திரிகள்
தேர்தல் - ஆராய்தல், சொல்லல், தெரிதல்
தேவகாந்தாரி - ஓரிராகம்
தேவகி - கண்ணன்றாய்
தேவகிமைந்தன் - கண்ணன்
தேவகுலம் - தேவர்கோயில்
தேவசாட்சி - ஆணை
தேவசேனாபதி - குமரன்
தேவதத்தன் - ஓர் வாயு
தேவதாரம் - ஐந்தருவிலொன்று, ஓர்மரம், செம்புளிச்சைமரம்
தேவதேவன் - சிவன்
தேவநகர் - தேவர் கோயில்
தேவன் - அருகன், கடவுள்
தேவாங்கம் - பட்டுச்சீலை
தேவாதி - கடவுள்
தேவாலயம் - தேவர்கோயில், பொன்மலை
தேவி - காளி, துர்க்கை, பார்வதி, மனைவி
தேவை - ஓரூர்
தேளி - ஓர்மீன்
தேள் - அனுடநாள், தேள், விருச்சிக விராசி
தேறல் - கள், தங்கல், துணிவு, நிச்சயம், வியங்கோண்முற்று
தேறு - தேற்றாமரம், தேறென்னேவல்
தேற்றம் - கருமமுடிக்குந் துணிவு, நிச்சயம்
தேற்றல் - தேற்றுதல், வியங்கோண்முற்று
தேனர் - திருடர்
தேனு - எருமை, களவு, குதிரை, தேவப்பசு, பசு
தேன் - கள், பெண் வண்டு, வண்டு, வாசனை

## தை

தை - ஒரெழுத்து, ஓர் மாதம், தையென்னேவல், பூசநாள், மகரராசி
தைதல் - அலங்கரித்தல்
தைத்தல் - துன்னல்
தைத்தியமந்திரி - சுக்கிரன்
தைத்தியர் - அசுரர்
தைத்திரியம் - இரண்டாம்வேதம்
தைப்பை - சட்டை, வினைமுற்று
தையல் - அழகு, பெண், வியங்கோண்முற்று
தைவரல் - அடிவருடல், வியங்கோண்முற்று

## தொ

தொகல் - கூடல், வியங்கோண்முற்று
தொகு - உடல், தோள்
தொகுதி - கூட்டம், திரட்சி, வினைமுற்று
தொகுத்தல் - கூட்டல்
தொகை - கூட்டம், வினைமுற்று

தொங்கல் - ஆண்மயிர், ஆபரணத் திற்றொங்கணி, காதணி, தூக்கங் கள், பீலிக் குடை, பூமாலை, மயிற்றோகை, வியங்கோண் முற்று, வெண்குடை

தொடக்கம் - ஆதி

தொடங்கல் - துவக்கல், வியங் கோண்முற்று

தொடர் - சங்கிலி, தொடரென் னேவல், பஞ்சினூல், பழமை, பிசின், பூமாலை, விலங்கு

தொடர்ச்சி - தொடர்பு, பூங்கொத்து, மலர்த்திரள்

தொடர்தல் - கட்டல், தேடல்

தொடர்ந்தோர் - மித்திரர்

தொடர்பு - உறவு, சிநேகம், பழமை, பா, முறைமை, வினை யெச்சம்

தொடலை - மகளிர் விளையாட்டு, மாலை, விளையாட்டு

தொடல் - சார்தல், தீண்டல், தோண்டல், பிடித்தல், வியங் கோண்முற்று

தொடி - ஒருபலம், கங்கணம், கைவளை

தொடு - தொடுவென்னேவல், தோட்டம், மருதபூமி, வஞ்சம்

தொடுக்கம் - பொன்

தொடுதல் - தீண்டல், தோண்டல்

தொடுதோல் - செருப்பு

தொடுத்தல் - கட்டல், பற்றல், வளைத்தல்

தொடுபதம் - சோறு

தொடுப்பு - கலப்பை, தொடுத்தல், வெறும் புறங்கூறல்

தொடுவு - கொல்லை

தொடை - அம்பு, சுவர்ப்புறத்து நீண்டவுத்திரம், செய்யுளுறுப்பி லொன்று, தொடை, நாணி, பூமாலை, மதிற்சுற்று, வினை முற்று

தொடையல் - தொடுத்தமாலை, மாலை, வாசிகை

தொட்டல் - தோண்டல்

தொட்டி - தொட்டி, தொட்டில்

தொட்டியம் - ஓர் கருவிநூல்

தொண்டகம் - குறிஞ்சிநிலப்பறை

தொண்டலம் - யானைத்துதிக்கை

தொண்டி - ஒரூர், கள்

தொண்டு - அடிமை, ஒன்பது, பழமை

தொண்டை - ஆதொண்டைச் செடி, கழுத்து, கோவைச்செடி, யானைத்துதிக்கை

தொத்து - அடிமை, பழமை, பூங்கொத்து

தொந்தம் - இரண்டுசலஞ்சாதித்தல்

தொந்தி - தொந்தியென்னேவல், வயிறு

தொப்பி - கள்

தொப்பை - தொந்தி

தொயில் - தொய்யில்

தொய்யகம் - தலைப்பாளை

தொய்யல் - அகமகிழ்ச்சி, இன்பம், உழவு, சேறு, துன்பம்

தொய்யில் - உழுநிலம், சாந்தினா லுடலிலி விடுங்கோலம்

தொலை - உவமை, தொலை யென்னேவல்

தொலைதல் - கெடுதல்

தொலைத்தல் - கொல்லல்

தொலைவு - தோல்வி

தொல்லை - பழமை

தொழல் - தொழுதல், வியங் கோண்முற்று

தொழில் - செயல்

தொழு - இரேவதி நாள், தொழு வரம், தொழுவென்னேவல் பசுக்கொட்டம்

தொழுகுலத்தோர் - அந்தணர்

தொழுகை - தொழுதல்

தொழுதல் - கும்பிடுதல், வணங்கல்

தொழுதி - கூட்டம், திரட்சி, பறவைக் கூட்டத்தொலி, வினைமுற்று
தொழுத்தை - வசவி
தொழுப்பு - உழுதொழில், வளைப்பு
தொழும்பர் - அடிமைகள்
தொழும்பு - அடிமை
தொழுவம் - ஆனிலை, வினை முற்று
தொழுவர் - தொழில் செய்வோர், மருதநிலமாக்கள்
தொளி - சேறு
தொள்ளம் - சேறு, தெப்பம்
தொள்ளல் - துளைத்தல், வியங் கோண்முற்று
தொள்ளி - குழைசேறு
தொள்ளை - துளை, துளை யுடைப் பொருள், மரக்கலம், வினைமுற்று
தொறு - அடிமை, கூட்டம், தொழிற்பயில்வு, பசுக் கூட்டம், பொலிவு
தொறுவர் - இடையர்
தொறுவியர் - இடைச்சிகள்
தொறுவு - அடிமை, செய்தொழில், பசுக்கூட்டம்
தொனி - ஒலி, தொனியென்னேவல்
தொனித்தல் - ஒலித்தல்
தொன்மரம் - ஆலமரம்
தொன்மை - எண்வகை வனப் பினுளொன்று, பழமை
தொன்று - பழமை
தொன்னீர் - கடல்

## தோ

தோகம் - சிறுமை
தோகை - இறகு, மயில், மயிற் றோகை, முன்றானை, வால், விருதுக்கொடி
தோக்கை - சீலை, மேற்போர்வை
தோசை - அப்ப வர்க்கம்
தோடகம் - தாமரை
தோடி - ஓரிராகம்
தோடு - காதணி, கூட்டம், தாழை, தெங்கு பனை, பூவிதழ்களிேனடு
தோட்கோட்பு - கட்டுச்சோறு
தோட்சுமை - காவடி
தோட்டம் - கொல்லை
தோட்டி - அழகு, கதவு, சூழ்கழி யிருக்கை, யானைக்குடாரி, வாயில்
தோட்டிமை - ஒற்றுமை
தோணி - அம்பு, இரேவதிநாள் சேறு, நீர், மதிலுறுப்பு, மரக்கலம்
தோண்டல் - அகழ்தல், முகத்தல், வியங்கோண்முற்று
தோண்டான் - கோனாய்
தோண்டி - சிறுபானை, வினை யெச்சம்
தோண்மேல் - பிடரி
தோதகம் - வஞ்சகம்
தோத்திரம் - துதித்தல்
தோப்பு - சோலை
தோமரம் - எறியாயுதம், கைவேல், பெருஞ்சவளம்
தோம் - குற்றம்
தோயம் - நீர், வினைமுற்று
தோய்தல் - கலத்தல், குளித்தல்
தோய்த்தல் - துவைத்தல்
தோய்வு - சார்தல், தோய்தல்
தோரணம் - தலைவாசலின் வாயில், தெருவிற்கட்டுந் தோரணம்
தோரி - சோறு
தோரை - இரத்தம், ஓர்வகை நெல், கை, சரமணிக்கோவை, மூங்கிலரிசி, விரலிறை
தோலாமை - தோல்வியின்மை

தோல் - அழகு, எண்வகை வனப்பினுளொன்று, சொல், துருத்தி, தோலாற்செய்த கேடகம், தோலென்னேவல், தோல், யானை
தோல்வு - தோல்வி
தோழம் - தொழுவம்
தோழன் - பாங்கன்
தோழி - பாங்கி
தோளி - ஒருவகைச்சிவிகை, நீலி
தோள் - கை, புயம்
தோற்பரம் - தேலாற்செய்த கேடகம்
தோற்றம் - ஏற்றமொழி, சொல், பிறப்பு, மகன், வலி
தோற்றரவு - தோற்றல்
தோற்றல் - தோல்வி, தோன்றல், பிறத்தல், முளைத்தல், வியங் கோண்முற்று
தோற்றுவித்தல் - உண்டாக்கல்
தோற்றுன்னர் - சக்கிலியர், செம்மார்
தோன்றல் - ஆண்மகன், இராசா, தமையன், பெருமையிற் சிறந் தோன், மகன், முல்லைத் தலைவன், வியங்கோண்முற்று
தோன்றி - இரத்தம், காந்தள், செங்காந்தள், வினையெச்சம்
தோன்றிநர் - செட்டிகள்
தோன்றுதல் - பிறத்தல், முளைத்தல்

## தௌ

தௌதம் - வெள்ளி
தௌரிதம் - குதிரை வட்டமாய்த் திரும்பல்
தௌவல் - கெடுதல், வியங்கோண் முற்று
தௌவை - அக்காள், தாய், மூதேவி

## ந

நகம் - உகிர், பூமி, மரம், மலை
நகரம் - இராசமனை, ஒரெழுத்து, மருதநிலத்தூர், மருதப்பதி
நகர் - நகரென்னேவல், மருத நிலத்தூர், வீடு
நகாயுதம் - சிங்கம்
நகிலம் - முலை
நகுதல் - இகழ்தல், ஒளிவிடுதல், சிரித்தல்
நகுலம் - கீரி
நகை - ஆபரணம், இகழ்ச்சி, இன்பம், எயிறு, ஒளி, களிப்பு, சிரிப்பு, நகையென்னேவல், பல், பூவரும்பு, மலர்ச்சி, வினை முற்று
நகைச்சொல் - சிரித்துப்பேசல்
நகைத்தல் - சிரித்தல், நிந்தித்தல்
நக்கல் - நக்குதல், வியங்கோண் முற்று
நக்கன் - அருகன், சிவன், நிருவாணி
நங்கை - பெண்ணிற் சிறந்தாள்
நசித்தல் - கெடுத்தல்
நசை - ஆசை, ஒழுக்கம்
நசைநர் - நண்பர்
நச்சல் - வியங்கோண்முற்று, விரும்பல்
நச்சு - ஆசை, நச்சென்னேவல், விடம்
நச்சுதல் - ஆசைப்பெருக்கம்
நஞ்சு - விடம்
நடத்தல் - செலுத்தல், போகல்
நடம் - ஓரிராகம், கூத்து, தாள வொத்தினானடிப்பது
நடர் - நாடகர்
நடலை - துன்பம், நடுக்கம், பொய், வஞ்சனை
நடல் - நடுதல், வியங்கோண்முற்று

நடவை - கடவுமரம், வழி, வினை முற்று
நடனம் - கூத்து
நடனர் - கூத்தர்
நடி - நடியென்னேவல், நாடகக் கணிகை, பெருமை
நடித்தல் - ஆடல்
நடு - இடை, நடுவென்னேவல், நீதி, பூமி
நடுக்கம் - நடுங்கல்
நடுங்கல் - நடுங்குதல், நோய், வியங்கோண்முற்று
நடுதல் - நடல்
நடுநாள் - சித்திரைநாள்
நடுப்பகல் - மத்தியானம்
நடுவன் - நமன்
நடை - ஒழுக்கம், கூத்து, செல்வம் வழி, வினைமுற்று
நடைப்பரிகாரம் - பலபண்டம் முற்று
நட்டபாடை - ஓர் பண்
நட்டம் - கூத்து, கேடு, வினை
நட்டல் - உறவாடல், நடுதல்
நட்டுவன் - ஆட்டுவோன்
நட்டோர் - உறவோர்
நட்பு - உறவு, சிநேகம்
நணுகல் - கிட்டல், வியங்கோண் முற்று
நணுகுதல் - சார்தல்
நண்டு - கற்கடகவிராசி, நண்டு
நண்ணலர் - பகைவர்
நண்ணல் - கிட்டல், சார்தல், வியங்கோண்முற்று
நண்ணார் - பகைவர்
நண்ணுநர் - மித்திரர்
நண்பகல் - மத்தியானம்
நண்பன் - குறிஞ்சி நிலத்தலைவன், தோழன், புருடன்
நண்பு - நட்பு
நதம் - மேற்கோடுமாறு
நதி - கிழக்கோடுமாறு
நதிசரம் - ஆற்றுச்சார்பிற் பிறந்த யானை
நதிபதி - கடல்
நதுத்தல் - அவித்தல்
நத்தமாலம் - புன்கமரம்
நத்தம் - இராத்திரி, இருள், ஊர், சங்கு, நத்தை, புன்கமரம்
நத்து - சங்கு
நத்தை - கருநந்து
நந்தகோபன் - இடையரரசன்
நந்தர் - இடையர்
நந்தல் - ஆக்கம், கெடுதல், நிந்தை, வியங்கோண்முற்று
நந்தனந்தனன் - கண்ணன்
நந்தனம் - இந்திரன் பூந்தோட்டம், ஓராண்டு, பூந்தோட்டம்
நந்தனவனம் - பூந்தோட்டம்
நந்தனன் - மகன்
நந்தினி - மகள்
நந்தன் - ஓரரசன், நந்தகோபன்
நந்தி - அட்டாதசவுப புராணத் தொன்று, இடபவிராசி, எருது, ஓரரசன், சிவன், சிறுபறை, செக்கான், வினையெச்சம்
நந்தியாவட்டத்தாமன் - துரியோதனன்
நந்தியாவர்த்தம் - நந்தியா
நந்திகேச்சுரன் - சிவனூர்த்தி, சிவன்
நந்து - சங்கு, நத்தை
நந்துதல் - ஆதல், கெடுதல்
நந்தை - கொத்தான்செடி, சந்திரன், முதற்பக்கம், வினைமுற்று
நபம் - ஆகாயம், ஆவணி மாதம்
நபுஞ்சகம் - பேடு
நபோமணி - சூரியன்
நமர் - சுற்றத்தார்
நமன் - இயமன், சுற்றத்தான்
நமை - ஓர்மரம்
நம் - சாரியை (உ-ம்: எல்லார் நம்மையும்)

நம்பல் - அசைப்பெருக்கம், நம்புதல், வியங்கோண்முற்று
நம்பன் - சிவன்
நம்பி - அரசமாதைப்பார்ப்பானி ராக்கதமணஞ்செய்யப் பிறந்து விட்டுணுவை யருச்சிப்பான், ஆணிற் சிறந்தவன், வினை யெச்சம்
நம்பு - ஆசை, நம்பென்னேவல்
நயக்கன் - நாய்
நயச்சொல் - சிரித்துப்பேசல்
நயத்தல் - ஆசைப்பெருக்கம்
நயந்தோர் - சிநேகிதர்
நயப்பு - ஆசை
நயப்புணர்வு - கண்ணோட்டம்
நயம் - இன்பம், உபசாரம், நன்மை, நீதி
நயவர் - சிநேகிதர்
நயனம் - கண்
நயன் - இன்பம், நன்மை, பயன், மகிழ்ச்சி
நரகம் - பாதாளம்
நரகர் - பாதாளலோகத்தார்
நரகு - நரகம்
நரசிங்கம் - விட்டுணு பத்தவ தாரத்தொன்று
நரதேவன் - அரசன்
நரந்தம் - கத்தூரி, மிருகம், காக்கை, நாரத்தை, வாசனை
நரபதி - அரசன்
நரம்பு - இசை, நாடி, நாணி
நரர் - மனிதர்
நரலல் - ஒலித்தல், பேசலாலெழு மொழி, வியங்கோண்முற்று
நரலை - கடல், வினைமுற்று
நரல் - செத்தை, நரலென்னேவல்
நரல்வு - உள்ளோசை
நரவாகனன் - குபேரன்
நரற்றல் - ஒலித்தல், வியங்கோண் முற்று
நரன் - மனிதன்
நராந்தம் - காக்கை
நராலை - நரகம்
நரி - நரி
நரிப்பு - இகழ்வு
நரிப்புறம் - மிருகசீரிடம்
நரேசம் - அரசன்
நரேந்திரன் - அரசன்
நரை - இடபவிராசி, எருது, சுரை, சாமரம், நரையென்னேவல், நாரைவெண்மை
நரைத்தல் - மயிர் முதலிய வெளுத்தல்
நலம் - அழகு, இன்பம், உபகாரம், கண்ணோட்டம், நன்மை
நலன் - இன்பம்
நலி - நலியென்னேவல், நோய்
நலிதல் - சரிதல், மெலிதல்
நலிவு - அழிவு
நல்கல் - ஆசைப்பெருக்கம், ஈதல், வியங்கோண்முற்று
நல்குரவு - தரித்திரம்
நல்கூர்ந்தோன் - தரித்திரன்
நல்லம் - கறுப்பு
நல்லவர் - அறிஞர், சிநேகிதர்
நல்லார் - அறிஞர், மாதர்
நல்லாள் - பெண்
நல்லோர் - அறிஞர்
நல்வினை - அறம்
நவநீதம் - வெண்ணெய்
நவம் - ஒன்பது, கார்காலம், கேண்மை, சிநேகம், புதுமை
நவரோசு - ஓரிராகம்
நவியம் - கோடாலி, புதுகை, மழு
நவிரம் - ஆண்மயிர், உச்சி, தலை, புன்மை, மயில், மருதயாழ்த் திறம், மலை, வாள்
நவிர் - ஆண்மயிர், மருதயாழ்த் திறம், வாள்
நவிலல் - கற்றல், சொல்லல், வியங்கோண்முற்று
நவிழ்த்தல் - அவித்தல்
நவிறல் - சொல்லல்
நவீனம் - புதுமை

புடைத்தல் - அடித்தல், குட்டுதல், குத்தல், பறவைச் சிறகடித்தல், புடைத்தல், வீங்குதல்
புடைவை - சீலை
புட்கரம் - ஆகாயம், ஓர் தீவு, குருகு, தாமரைப்பூ, தீர்த்தம், நீர், யானைத்துதிக்கை நுனி, வாள்
புட்கரிணி - தாமரைக்குளம், நாற்சதுரவாவி
புட்கலம் - நிறைதல்
புட்கலைமணாளன் - ஐயனார்
புட்டகம் - சீலை
புட்டம் - காக்கை, சீலை, நிறைவு
புட்டில் - இறைகூடை, கூடை
புட்பகம் - இரத்தினகங்கணம், குபேரவிமானம்
புட்பகவிமானன் - குபேரன்
புட்பகேது - மன்மதன்
புட்பதந்தம் - வடமேற்றிசை யானை
புட்பம் - பூ
புட்பலாவகன் - பார்ப்பனப் பெண்ணுக்குஞ்சாலியனுக்கும் பிறந்து பூக்கொய்து மாலை விற்போன்
புணரி - கடல், கடற்றிரை
புணர் - புணரென்னேவல், புதுமை
புணர்ச்சி - இசைப்பு, கலத்தல்
புணர்தல் - கலத்தல், சார்தல்
புணர்ப்பு - உடல், கூடல்
புணர்வு - இசைப்பு, உடல், கலத்தல்
புணை - தெப்பம், புணையென் னேவல், மரக்கலம், மூங்கில், விலங்கு
புண் - ஊன், விரணம்
புண்டரம் - ஓரிரேகை, கழுகு, நெற்றிக்குறி, வெண்கரும்பு
புண்டரீகக்கண்ணன் - திருமால்
புண்டரீகம் - கழுகு, தாமரை, தென்கீழ்த்திசை யானை, புலி, வண்டு, வெண்கொற்றக்குடை, வெண்டாமரை
புண்ணியமுதல்வன் - புத்தன்
புண்ணியமூர்த்தி - புத்தன்
புண்ணியம் - அறம், தூய்மை, நல்வினை
புண்ணியன் - அரன், அருகன்
புண்ணீர் - இரத்தம்
புதர் - புதர், புலவர்
புதல் - புருவம், புல், பூடு
புதல்வன் - மகன்
புதல்வி - மகள்
புதவு - ஓர்வகைப்புல், கதவு, கோபுரவாயிற் கதவு விட்டுப் புகும் வழி
புதன் - ஓர் கிரகம், தேவன், புலவன்
புதர் - கொக்கு
புதியர் - விருந்தினர்
புதுக்கல் - புதுப்பித்தல், வியங் கோண்முற்று
புதுமை - நூதனம், மிகுதி
புதுவை - புதுச்சேரி
புதை - அம்பின்கட்டு, அம்பு, உடல், புதுமை, புதையென் னேவல், மறைவு
புதைத்தல் - சேமித்தல்
புதையல் - நிட்சேபம், புதைத்தல், வியங்கோண்முற்று
புத்தகம் - எழுதுபுத்தகம், சித்திரப் படாம்
புத்தர் - பௌத்தர்
புத்தன் - திருமாலவதாரத்தொன்று, புத்தன்
புத்தி - அறிவு
புத்திரன் - மகன்
புத்திரி - மகள்
புத்தேணாடு - தெய்வலோகம்
புத்தேளிர் - தெய்வம், வானோர்
புத்தேள் - தெய்வம், புதுமை

புநர்தம் - புநர்பூசநாள்
புநீதன் - அரசன், அருகன், இந்திரன்
புந்தி - அறிவு, புதன்
புந்தியர் - புலவர்
புமான் - ஆண்மகன்
புயகடி - பாம்பு
புயகம் - பாம்பு
புயங்கம் - பாம்பு
புயம் - தோள்
புயல் - சுக்கிரன், மேகம்
புய்த்தல் - பயத்தல், பறித்தல்
புரசு - ஓர் மரம்
புரட்டல் - புரளச்செய்தல், வியங் கோண்முற்று
புரட்டாதி - ஓர் மாதம், பூரட்டாதி
புரட்டை - பூரட்டாதி, வினை முற்று
புரணி - ஊண், தோல்
புரத்தல் - காத்தல், கொடுத்தல், நிலைபெறுதல்
புரந்தரன் - இந்திரன்
புரமூன்றெரித்தோன் - சிவன்
புரம் - இராசதானி, உடல், ஊர், நகரம், மருதநிலத்தூர், முன்
புரவலன் - அரசன், காத்தளிப் போன், கொடையாளன்
புரவி - அச்சுவினிநாள், குதிரை
புரவிவட்டம் - குதிரை வையாளி வீதி
புரவு - கொடை
புரளல் - புரளுதல், வியங்கோண் முற்று
புராடம் - நகருட்சஞ்சாரம்
புராணம் - கதை, காந்த முதலிய புராணம், பழமை
புராதனம் - பழமை
புராரி - சிவன்
புரி - ஆசை, இராசதானி, ஊர், கட்டு, கயிறு, கோட்டை, சங்கு சுருள், புரியென்னேவல், மருத நிலத்தூர்
புரிசை - மதில்
புரிதல் - செய்தல், விரும்பல்
புரிந்தோர் - சிநேகிதர்
புரிமுகம் - கோபுரம்
புரியம் - கூத்து
புரிவு - அன்பு, ஆசை
புரீடம் - மலம்
புருகுற்சன் - ஓர் சக்கரவர்த்தி
புருகூதன் - இந்திரன்
புருடநாள் - இரேவதிநாள்
புருடர் - ஆடவர்
புருடவாகனன் - குபேரன்
புருடன் - ஆன்மா, தலைவன், மக்களிலாண்
புருடோத்தமன் - திருமால்
புருவம் - குதிரை, புருவம்
புருவை - ஆடு, இளமை
புரூரம் - புருவம்
புரூரவன் - ஓர்சக்கரவர்த்தி
புரை - உட்டுளை, உயர்ச்சி, உவமை, குற்றம், புரையென் னேவல்
புரைதல் - போலுதல்
புரைய - உவமைச்சொல், வினை யெச்சம்
புரையுள் - வீடு
புரையோர் - திருடர்
புரோகதி - நாய், முன்னடப்பது
புரோகிதன் - இந்திரன், வருங் காரியஞ் சொல்வோன்
புரோசர் - குருநிலவேந்தர்
புரோசை - யானை கட்டுங்கயிறு
புலத்தல் - புணர்ச்சிக் கமையாதது போல் முறைப்படல்
புலத்தியன் - ஓரிருடி
புலத்தியன் மைந்தன் - வியாசன்
புலமையர் - புலவர்
புலம் - அறிவு, இடம், ஒலி முதலைம்புலம், திசை, வயல்

புலம்பல் - ஆரவாரம், இரங்கல், ஒலித்தல், வியங்கோண்முற்று
புலம்பன் - நெய்தனிலத்தலைவன்
புலம்பு - அச்சம், ஒலி, கலக்கம், தனிமை, துன்பம், புலம்பென்னேவல்
புலரி - விடியல்
புலர்தல் - வாடல்
புலர்த்தல் - பூசுதல், வாட்டல்
புலவர் - அறிஞர், தேவர்
புலவன் - அருகன், அறிஞன், கம்மாளன், கூத்தன், தேவேந்திரன், பாடுவோன், புதன், புலவன், முருகன், வானோன்
புலவி - ஊடலின் முதிர்தல்
புலவு - ஊன், நரகம்
புலன் - புலம்
புலன்வென்றோர் - முனிவர்
புலால் - ஊன்
புலானீர் - இரத்தம்
புலி - சிங்கவிராசி, நால்வகைச் சாந்து, புலி
புலிக்கொடியோன் - சோழன்
புலிங்கம் - ஊர்க்குருவி, தீப்பொறி
புலிதொடக்கி - இண்டு
புலித்தோலுடையோன் - சிவன்
புலிந்தம் - புளிந்தம்
புலுதம் - அளபெடை, குதிரை முழுவோட்டம்
புலை - புலால், விடக்கு
புலைஞர் - சண்டாளர்
புலைமகன் - புலையன்
புலைமை - புலைத்தன்மை
புலோமசை - இந்திராணி
புலோமன் - இந்திராணி, தகப்பன், ஓரரக்கன்
புல் - அனுடநாள், பனைமரம், புலி, புல், புல்லென்னேவல், புன்மை
புல்கல் - புணர்தல், வியங்கோண்முற்று
புல்லகண்டம் - சருக்கரை
புல்லகம் - நுதலணி
புல்லம் - இடபவிராசி, எருது, வினைமுற்று
புல்லர் - கீழ்மக்கள், வேடர்
புல்லல் - அமைதல், கூடுதல், சார்தல், புணர்தல், வியங்கோண்முற்று
புல்லார் - பகைவர், வினைமுற்று
புல்லி - புறவிதழ், வினையெச்சம்
புல்லியர் - கீழ் மக்கள்
புல்லுநர் - சினேகிதர்
புல்லெனல் - ஒளி மழுங்கல், பொலிவழிதல்
புல்வாய் - கலைமான், வினைமுற்று
புவலோகம் - மேலேழுலகிலொன்று
புவனம் - உலகப்பொது, நீர், பூமி
புவனி - பூமி
புவி - பூமி
புழக்கம் - பழகல்
புழல் - ஓரூர், சலதாரை, துளையுடைய பொருள்
புழு - கிரிமி, புழுவென்னேவல்
புழுக்கம் - வெம்மை
புழுக்கல் - சோறு, வியங்கோண்முற்று
புழுங்கல் - சினக்குறிப்பு, புழுக்குவது, வியங்கோண்முற்று
புழுத்தல் - புழுக்கத்தினுண்டாதல்
புழுதி - பராகம், புழுதி
புழுது - அம்புக்குதை
புழை - உட்டுளை, கதவுவிட்டுப் புகுவழி, துளையுடைப்பொருள்
புழைக்கை - யானை
புளகம் - கண்ணாடி, சோறு, புடைப்பு, மயிர் சிலிர்த்தல்
புளகித்தல் - மயிர் சிலிர்த்தல்
புளவை - விரணம்
புளி - ஓர்சுவை, புளியமரம், புளியென்னேவல்
புளிங்கறி - புளிப்புள்ள கறி

புளிஞர் - வேடர்
புளிதம் - ஊன்
புளித்தல் - நெருங்கல், புளிப்பு
புளிந்தம் - ஓர்தேயம்
புளிந்தன் - வேடன்
புளிப்பு - ஓர் சுவை
புளிமா - புளிப்புள்ள மாமரம்
புளினம் - மணற்குன்று, மணற்றிடை
புளினர் - வேடர்
புள் - அவிட்டநாள், பறவைப் பொது, வண்டு
புள்ளம் - கொடுவாள்
புள்ளரசு - கருடன்
புள்ளி - இலக்கப்புள்ளி, ஒற்றெழுத்து, நண்டு, பல்லி, பொறி, மதிப்பு
புள்ளீட்டம் - பறவைக்கூட்டம்
புள்ளுவம் - வஞ்சம்
புள்ளுவர் - கீழ் மக்கள், பாலை நிலமாக்கள்
புள்ளொளி - பறவைக் கூட்டம்
புறக்காழ் - புறவயிரம்
புறங்காடு - சுடுகாடு
புறங்காழ் - புறவயிரம்
புறங்கூறல் - தூற்றல், வியங்கோண் முற்று
புறணி - புறம்
புறத்தவன் - ஐயனார்
புறந்திணை - ஓரொழுக்கம்
புறநீர்மை - ஓர்பண்
புறந்தால் - ஓம்பல், தோல்வி, வியங்கோண்முற்று
புறம் - ஏழனுருபு, (உ-ம்: செல்லு மென்னுயிர்ப் புறத்திறுத்த மருண்மாலை), பக்கம், பின் புறம், மதில், முதுகு, வீரம்
புறம்பணை - குறிஞ்சி நிலம், முல்லை நிலம்
புறவணி - குறிஞ்சி நிலம், முல்லை நிலம்
புறவம் - காடு, குறிஞ்சி நிலம், புறா, முல்லை நிலம்
புறவு - குறிஞ்சி நிலம், முல்லை நிலம், புறா
புறவுரை - பாயிரம்
புறன் - புறம், முதுகு
புற்கசன் - சண்டாளன்
புற்கலம் - உடல்
புற்கலன் - உயிர்
புற்கு - பிலநிறம்
புற்கை - கூழ்
புற்பதி - கூழ்
புற்புதம் - நீர்க்குமிழி
புற்றாளி - அனுடநாள், பனை மரம்
புற்று - புற்று, வளை
புனம் - கொல்லை
புனருத்தி - கூறியது கூறல்
புனர்ப்பவம் - நகம், மீண்டு பிறத்தல்
புனல் - ஆறு, நீர்
புனல்வேந்தன் - வருணன்
புனவர் - குறிஞ்சிநிலமாக்கள்
புனனாடன் - சோழன்
புனிறு - ஈன்றணிமை, சூதகம், தோல், புதுமை
புனிதம் - சத்தம், புநர்பூசம்
புனிதன் - அரன், அருகன், இந்திரன், தூயவன், புத்தன்
புனை - கால் விலங்கு, சீலை, புதுமை, புனையென்னேவல்
புனைதல் - அணிதல், அலங்கரித்தல்
புனைந்துரை - சிறிதினைப் பெருக்கிப் பெரிதினைச் சுருக்கிக் கூறல், பாயிரம்
புனைவர் - கம்மாளர்
புன்கண் - துன்பம், நோய், மெலிவு
புன்கம் - சோறு
புன்காலி - காயாமரம், பாதிரி மரம்
புன்கு - புனமுருங்கை, புன்கமரம்

புன்மை - ஈனம், மறதி
புன்னாகம் - புன்னைமரம்
புன்னாகவராளி - ஓரிராகம்
புன்னை - ஓர் மரம்

## பூ

பூ - அழகு, இலை, ஓரெழுத்து, கூர்மை, பிறப்பு, பூ, பூமி, பூ வென்னேவல், பொலிவு
பூகதர் - புகழ்வோர்
பூகம் - கமுகு, கூந்தற்பனை, திரட்சி
பூக்கம் - ஊர், கமுகு, மருத நிலத்தூர்
பூசம் - ஓர்நாள்
பூசல் - பூசுதல், பெரிதொலித்தல், பொருதல், வியங்கோண்முற்று
பூசனை - ஆராதனை
பூசித்தல் - பூசனை
பூசுதல் - அலங்கரித்தல், சந்தன முதலிய பூசல்
பூசுரர் - அந்தணர்
பூசை - ஆராதனை, பூனை, வினை முற்று
பூஞை - பூனை
பூடணம் - ஆபரணம்
பூடு - பூண்டு
பூட்கை - மேற்கோள், யாளி, யானை
பூட்சி - உடல், பூணல்
பூட்டல் - பூட்டுதல், வியங்கோண் முற்று
பூட்டு - நாணி, பூட்டும் பூட்டு, பூட்டென்னேவல்
பூட்டை - ஏற்றமரம், காராம்பி, செக்கு, வினைமுற்று
பூணல் - அணிதல், வியங்கோண் முற்று
பூணி - எருது, இடபவிராசி
பூணை - முல்லை நிலம், வினை முற்று
பூண் - ஆபரணம், பூணென்னேவல்
பூண்டி - ஊர், வினைமுற்று
பூண்டு - பூடு
பூததாத்திரி - பூமி
பூதநாதன் - சிவன்
பூதம் - இறந்தகாலம், உயிர், ஐம்பூதம், தூய்து, பரணிநாள், பேய்
பூதரம் - பொன்மலை, மலை
பூதலம் - பூமி
பூதவம் - ஆலமரம், மருதமரம்
பூதாரம் - பன்றி
பூதாரன் - அரசன்
பூதி - கொடுமை, பூமி, சாம்பல், செல்வம், துர்க்கந்தம், நரகம், புலால், புழுதி, விபூதி
பூதியம் - உடல், பூமி
பூதை - அம்பு
பூத்தல் - உண்டாதல், பயத்தல், மலர்தல்
பூநாகம் - நாகப்பூச்சி
பூநீர் - பனிநீர்
பூந்துணர் - பூங்கொத்து
பூந்தை - ஓரூர்
பூந்தோட்டம் - நந்தனவனம்
பூபதி - அரசன், ஓர் குளிகை
பூபன் - அரசன்
பூபாலர்- பூவைசியர்
பூபாலன் - அரசன், வேளாளன்
பூபாளம் - ஓரிசை
பூப்பகம் - பெண் குறி
பூப்பு - மகளிர் சூதகம்
பூமகள் - இலக்குமி, பூமிதேவி
பூமன் - செவ்வாய்
பூமி - பூவுலகு
பூமிகொழுநன் - திருமால்
பூமிசன் - அங்காரகன், நரகாசுரன்
பூமிசை நடந்தோன் - அருகன், புத்தன்
பூமின் - இலக்குமி, பூமிதேவி

பூரகம் - மூச்சுள்ளே வாங்கல்
பூரணம் - எல்லாம், நிறைவு, பெருகுதல்
பூரணன் - அரன், அருகன், கடவுள்
பூரணி - இலவமரம்
பூரணை - சந்திரனைந்தாம்பக்கம், சாத்தாவின்றேவி
பூரணைகேள்வன் - ஐயனார்
பூரம் - ஓர்நாள், ஓர்மருந்து, பூரம்
பூரவாகனி - சரச்சுவதி
பூரி - ஓரிசை, ஒரெண், கலப்பு நெல், நாணி, பூரியென்னேவல், பொன், மிகுதி
பூரிகம் - அப்ப வர்க்கம்
பூரிகலியாணி - ஓரிராகம்
பூரிகை - அப்ப வர்க்கம், ஊதிடும் பூரிகை
பூரிதம் - நிரம்பப்பட்டது
பூரித்தல் - உவத்தல், நிறைத்தல்
பூரிப்பு - மிகுகளிப்பு, மிகுதி
பூரிமாயு - ஆணரி, பழமை
பூரியம் - அரசிருக்கை, ஊர், மருத நிலத்தூர், வேந்தர் வீதி
பூரியர் - கீழ்மக்கள்
பூரு - புருவம்
பூருகம் - மரம்
பூருண்டி - மல்லிகை
பூருவம் - 'ஆதி, கிழக்கு, சந்திரன் முன்பக்கம், பழமை, முன்பு
பூருவகவுளம் - ஓரிராகம்
பூர்த்தி - நிறைவு
பூலத்தி - மருதமரம்
பூல் - ஓர்செடி
பூவணம் - ஓர் சிவதலம்
பூவம்பன் - மன்மதன்
பூவரசு - ஓர் மரம்
பூவலயம் - பூமி
பூவல் - சிவப்பு, துரவு
பூவாளி - மன்மதன்
பூவை - காயாமரம், நாகணவாய்ப்புள், பெண், வினை முற்று
பூவைசியர் - உழவர், வேளாளர்
பூழான் - கவுதாரி, கானாங்கோழி
பூழி - குழைசேறு, சேற்றிலெழுங் குமிழி, பராகம், புழுதி
பூழியன் - சேரன்
பூழில் - அகில்
பூழை - கோபுரவாயிற் கதவி லிட்டுப் புகும்வழி
பூழ்தி - பராகம், புலால், புழுதி
பூளை - இலவம்பஞ்சு, ஏர்செடி
பூனை - பூனை

## பெ

பெங்கு - கள்ளிலோர்பேதம்
பெடம் - மிகுதி
பெடை - பறவைப்பெண்
பெட்டகம் - பெட்டி
பெட்டல் - ஆசைப்பெருக்கம், விரும்பல்
பெட்டார் - சினேகிதர்
பெட்டி - பேழை
பெட்டு - பொய்
பெட்டை - ஒட்டகம், கழுதை, குதிரை, சிங்கம், மரையிவற்றின் பெண், பறவைப்பெண்
பெட்பு - ஆசை
பெண் - பெண், விலங்கின் பெண் பொது
பெண்டகர் - அலியர்
பெண்டர் - அலியர்
பெண்டு - பெண்மகள்
பெண்ணை - அனுடநாள், ஓராறு, பனைமரம்
பெண்மரம் - புறவயிரமுள்ளமரம்
பெண்மை - பெண்டன்மை, மாட்சிமை
பெதும்பை - பதினொரு வயதுப் பெண், பெண்பொது

பெம்மான் - பெருமான்
பெயர் - நாமம், பெயரென்னேவல், பெருமை
பெயர்தல் - ஆடல், உரிஞ்சல், போகல், வேறுபடல்
பெயர்த்தல் - வேறுபடுத்தல்
பெயர்வு - பெயர்த்தல்
பெயலை - மழை
பெயல் - மழை, மழைத்துளி, வியங்கோண்முற்று
பெய்தல் - செறித்தல், போடுதல், மழைபொழிதல், விடுதல்
பெய்துரை - பாயிரம்
பெரிது - பெரியது
பெருகல் - நிறைதல், மிகுதல், வியங்கோண்முற்று
பெருகு - தயிர், பெருகென்னேவல்
பெருகுதல் - நிறைதல்
பெருக்கம் - செல்வம், பெருகுதல், மிகுதி
பெருக்கல் - துடைப்பத்தாற் பெருக்கல், நிறைத்தல், மிகல், வியங்கோண்முற்று
பெருக்கு - பெருக்கென்னேவல், வெள்ளம்
பெருங்கிராமம் - ஐஞ்ஞூறு குடியூர்
பெருங்கிழமை - முழுதுமுரிமை
பெருங்குருகு - சக்கரவாகப்புள்
பெருங்கோடணை - முரசு
பெருச்சாளி - பெருச்சாளி
பெருஞ்சொல் - பலரறிசொல்
பெருநாள் - இரேவதி நாள்
பெருநீர் - கடல்
பெருந்தகை - அரசன்
பெருந்தன்மை - மானம்
பெருந்திணை - வழுவுடைக்காமம்
பெருமகன் - அரசன், சிறந்தோன்
பெருமலை - பொன்மலை
பெருமா - யானை
பெருமாட்டி - தலைவி
பெருமான் - அரசன், குரு, சிவன், சிறந்தோன், மூத்தோன், விட்டுணு
பெருமிதம் - களிப்பு, மிகுதி
பெருமீன் - யானைமீன்
பெருமை - பொலிவு, மாட்சிமை, மிகுதி
பெரும்பதி - மருங்கிலூர் சூழ்பதி
பெரும்பறவை - எண்காற்புள்
பெரும்புள் - கூகை
பெரும்பூண் - பெரும்பதக்கம்
பெரும்பூழை - கதவிலிடும்வாயில்
பெறல் - அடைதல், கிடைத்தல், வியங்கோண்முற்று
பெறுவதுகொள்வோர் - கூத்தியர்
பெற்றம் - இடபவிராசி, எருது, பசுச்சாதிப்பொது, வினைமுற்று
பெற்றார் - தந்தை தாயார்
பெற்றி - குணம்
பெற்றிடல் - பெறுதல்

## பே

பே - ஒரெழுத்து, நுரை
பேகம் - தவளை
பேகன் - கடையெழு வள்ளலிலொருவன்
பேசி - தவளைப்பெண்
பேசல் - சொல்லல், வியங்கோண் முற்று
பேச்சு - சொல், சொல்லல்
பேடர் - அலியர்
பேடாடல் - காமனாடல்
பேடியர் - அலியர்
பேடு - அலி, ஊர், மன்மதன் கூத்து, பெண்
பேடை - பறவைப்பெண்
பேட்டை - நகரத்தருகுஞ் சந்தை கூடலுமாகியவூர்

பேணல் - ஆசைப்பெருக்கம், ஓம்பல், கருத்து, குறித்தல், வியங்கோண்முற்று, விரும்பல்
பேதம் - வேற்றுமை
பேதி - இரதம், பேதம், பேதி யென்னேவல்
பேது - உன்மத்தம்
பேதை - அறிவில்லான், ஏழு வயதுப்பெண், கள், தரித்திரன், பெண், பேடி
பேதைமை - அறிவின்மை
பேதையர் - கீழ்மக்கள், தரித்திரர், பாலை நிலமகளிர்
பேம் - அச்சம்
பேயோட்டாடி - சிவன்
பேய் - பிசாசம்
பேய்த்தேர் - கானல்
பேரணிகலம் - பெரும்பதக்கம்
பேரறிவு - மூதறிவு
பேரன் - பெயரன்
பேராண்மை - அரியசெயல்
பேராந்தை - நிலாமுகிப்புள்
பேராளன் - மிருக சீரிட நாள்
பேரி - பறைப்பொது, முரசு
பேரிகை - ஓர்வாச்சியம்
பேரிளம்பெண் - நாற்பது வயதுப் பெண்
பேரின்பம் - ஆனந்தம்
பேர்தல் - அகலல், பெயர்தல்
பேர்த்தல் - பெயர்த்தல்
பேர்த்தி - பெயர்த்தி, வினைமுற்று
பேழை - பெட்டி
பேழ் - பெருமை
பேழ்வாய் - பெருவாய்
பேறு - இலாபம்
பேனம் - நுரை

## பை

பை - அழகு, ஓரெழுத்து, நிறம், பச்சை, பாம்பின்படம், பை, பையென்னேவல், மந்தம்
பைங்கூழ் - நோய், பயிர்
பைசாசம் - பிசாசம்
பைஞ்ஞீலம் - மக்கட் பரப்பு
பைஞ்ஞீலி - ஒரூர்
பைதல் - துன்பம், பையல்
பைதிரம் - நாடு
பைத்தல் - கோபம், சினக்குறிப்பு, பசித்தல், பாம்பு படம் விரித்தல்
பைத்தியம் - ஓர் நோய்
பைத்து - பச்சை
பைமை - தவப்பெண், பச்சை
பைம்பொன் - பொன், மேருகிரி
பையுள் - சிறுமை, துன்பம், நோய்
பையெனல் - மந்தக்குறிப்பு
பைரவம் - அச்சம், பயங்கரம்
பைரவன் - கோத்திரபாலன்
பைரவி - ஓரிராகம், காளி

## பொ

பொகுட்டு - சேற்றிலெழுங்குமிழி, தாமரைக்கொட்டை, மலை
பொக்கம் - பொய், பொலிவு, மிகுதி
பொக்கு - குற்றம்
பொங்கடி - யானை
பொங்கர் - இலவமரம், மரக் கொம்பு, மலை
பொங்கல் - உயர்ச்சி, பொலிதல், மிகுதி, வியங்கோண்முற்று
பொங்கழி - தூற்றாநெல்
பொசிதல் - நீரரும்பல்
பொச்சாப்பு - மறதி
பொச்சை - சுரிகாடு, காடு, சிறு மலை, மலை
பொடி - பராகம், புழுதி, பொடி யென்னேவல்
பொடிதல் - கெடுதல்
பொடித்தல் - கெடுத்தல், புழுதி யாக்கல், முளைத்தல்

பொட்டு - ஓர்புழு, தாலிப் பொட்டு, தானியப் பொட்டு, நெற்றித்திலகம்
பொதி - அம்பலம், ஓலைக்குடை, கரிகாடு, பொதி, பொதியென் னேவல்
பொதிசோறு - கட்டுச்சோறு
பொதிதல் - மூடுதல்
பொதிப்போதா - பெருநாரை
பொதியம் - தென்மலை, வினை முற்று
பொதியவெற்பன் - பாண்டியன்
பொதியில் - பொதியமலை
பொதிர்தல் - மிகுதல்
பொதிர்ப்பு - அச்சம், நடுக்கம்
பொது - சாதாரணம்
பொதுத்தல் - துளைத்தல்
பொதுமகள் - வேசி
பொதுமை - பொதுத்தன்மை
பொதும்பர் - மரச்செறிவு, மரப் பொந்து
பொதுவர் - இடையர்
பொதுவியர் - இடைச்சியர்
பொதுவில் - அம்பலம்
பொதுளல் - தழைத்தல், நெருங்கல், வியங்கோண்முற்று
பொந்து - மரப்பொந்து
பொம்மல் - சோறு, பொலிவு, மிகுதி
பொம்மெனல் - அனுகரணவோசை
பொய் - பொய், பொய்யென் னேவல், மரப்பொந்து
பொய்கை - குளம், கோட்டான்
பொய்தல் - தோழி, மகளிர் கூட்டம், மகளிர் விளையாட்டு
பொய்த்தல் - பொய் சொல்லல்
பொய்யன் - பொய்சொல்லு வோன்
பொரி - கரிக்காடு, பொரி, பொரி யென்னேவல்
பொரிதல் - பொரியாதல்
பொரித்தல் - பொறிக்கறி, பொரியச் செய்தல்
பொரியல் - பொரிக்கறி, பொரி தல், வியங்கோண்முற்று
பொருகளம் - போர்க்களம்
பொருகு - சோறு
பொருக்கு - சீக்கிரத்தின் குறிப்பு, பொருக்குமண்
பொருக்கெனல் - சீக்கிரக்குறிப்பு, சீக்கிரம்
பொருட்செல்வி - இலக்குமி
பொருட்டு - காரணம்
பொருட்பெண்டிர் - வேசிகள்
பொருணி - கள்
பொருதல் - ஒப்புதல், போர் செய்தல், வியங்கோண்முற்று
பொருத்தம் - பொருத்தல், வினை முற்று
பொருத்தல் - பொருத்துதல், மூட்டல், வியங்கோண்முற்று
பொருத்து - சந்து, பொருத்தென் னேவல்
பொருத்துதல் - அமைத்தல், மூட்டுதல்
பொருநர் - படைவீரர்
பொருநன் - அரசன், குறிஞ்சி நிலத் தலைவன், திண்ணயன், நாடகன், படைத்தலைவன், படைவீரன்
பொருநை - ஓராறு, வினைமுற்று
பொருநைத்துறைவன் - சேரன்
பொருந்தம் - பொருநையாறு, வினைமுற்று
பொருந்தர் - வேதகாரர்
பொருந்தலர் - பகைவர்
பொருந்தல் - அடுத்தல், அமை தல், கலத்தல், வியங்கோண் முற்று
பொருந்தாமை - வெறுப்பு
பொருபுவி - பாலைநிலம்
பொருப்பன் - குறிஞ்சிநிலத் தலைவன்

பொருப்பு - கொல்லிமலை, மலை

பொருமல் - அழுதல், வியங்கோண்முற்று

பொருவ - உவமைச்சொல், வினையெச்சம்

பொருவு - உவமை, பொருவென்னேவல்

பொருவுதல் - உவமை, ஒப்பல்

பொருள் - சொற்பொருள், தலைமை, பணம், பலபண்டம், பிள்ளை, பொன், வாய்மை

பொலங்கலம் - ஆபரணம்

பொலம் - அழகு, பொன்

பொலன் - பொலம், பொன்மை நிறம்

பொலி - தூற்றாநெல், பொலியென்னேவல்

பொலிசை - இலாபம்

பொலிதல் - எழுச்சி, மிகுதி

பொலிவு - பொலிதல்

பொல்லம் - கைத்தல்

பொல்லர் - சக்கிலியர், செம்மார், தையற்காரர்

பொல்லாங்கு - ஈனம், மறதி

பொல்லு - பதர்

பொழிதல் - ஈதல், மழைபெய்தல்

பொழிப்புத்திரட்டல் - பொழிப்புரையுரைத்தல்

பொழிப்புரை - ஒவ்வொரு சொற்பயனுரையாமற் செய்யுட் பொருளைத் தொகுத்துரைத்தல்

பொழில் - உலகப்பொது, சோலை, நாடு, பூந்தோட்டம், பூமி, பெருமை

பொழுது - காலம்

பொழுதுபோக்கல் - பொழுது கழித்து விளையாடல்

பொள்ளல் - அப்பவர்க்கம், பொளிதல், மரப்பொந்து, வியங்கோண்முற்று

பொள்ளெனல் - அனுகரண வோசை, சீக்கிரக்குறிப்பு, சீக்கிரம்

பொறி - அடையாளம், அறிவு, இலக்குமி, எழுத்து, ஐம்பொறி, செல்வம், தேமல், தோணி, புள்ளி, பொலிவு, பொறியென்னேவல், மதிலுறுப்பு முத்திரை, விரலிறை

பொறித்தல் - எழுதல், சித்திரமெழுதல்

பொறியிலார் - கீழ்மக்கள்

பொறுக்கல் - பொறுக்குதல், வியங்கோண்முற்று

பொறுத்தல் - சுமத்தல்

பொறுப்பு - பொறுத்தல்

பொறுமை - பொறை

பொறை - சலதாரை முதலிய வடைக்குங்கல், சுமை, பாரம், பூமி, பொறுமை, மலை, வினைமுற்று

பொறையன் - சேரன், தருமராசன்

பொறையிலார் - வேடர்

பொற்பு - அழகு, ஒப்பனை, பொலிவு, மிகுதி

பொற்புறுத்தல் - அலங்கரித்தல்

பொற்றை - சிறுதூறு, சிறுமலை, மலை

பொன் - அழகு, இலக்குமி, பஞ்சலோகப்பொது, பொலிவு, பொன், வியாழம்

பொன்செய்கொல்லர் - தட்டார்

பொன்வாய்ப்புள் - சிச்சிலிக்குருவி

பொன்விளைமாக்கள் - தட்டார்

பொன்றல் - சாதல், வியங்கோண்முற்று

பொன்னகர் - தேவலோகம்

பொன்னகர்க்கிறைவன் - இந்திரன்

பொன்னவன் - இரணியன், [illegible] வியாழம்

பொன்னி - காவேரி

பொன்னித்துறைவன் - சோழன்
பொன்னுலகு - தேவலோகம்
பொன்னெயிற்கோன் - அருகன்

## போ

போ - அசைநிலை (உ-ம்: எரியினன்ன செந்தலையன்றில் பிரியின் வாழாதென்போ), ஓரெழுத்து, போவென்னேவல்
போகடல் - போகவிடல்
போகபூமி - தேவலோகம், விளை நிலம்
போகம் - அனுபோகம், செல்வம், பாம்பினுடல், விளைவு, வினை முற்று
போகல் - உணர்ச்சி, செல்லல், நீளம், வியங்கோண்முற்று
போகி - இந்திரன், பாம்பு, போகி யென்னேவல், வினையெச்சம்
போகிழ் - கொப்பூழ், பறவை, பூவரும்பு
போக்கல் - செலுத்தல், வியங் கோண்முற்று
போக்கு - போகுதல், போக்கென் னேவல், வழி
போசனம் - உணவு, புசித்தல்
போசன் - ஓரரசன், செல்வன்
போடகம் - ஓர்நோய்
போடம் - ஓர் தேசம், வினை முற்று
போடல் - எறிதல், வியங்கோண் முற்று, வைத்தல்
போதகம் - இளமை, சிங்கக்குட்டி, புலிக்குட்டி, மரக்கன்று, யானை, யானைக்கன்று
போதம் - அறிவு, பரணிநாள், மரக்கலம், வினைமுற்று
போதரல் - கொடுபோதல், கொடு வரல், வியங்கோண்முற்று
போதரவிடல் - உயிர்த்தல்
போதல் - அகலல், நீளல், போகல், வரல், வியங்கோண்முற்று
போதன் - அருகன், பிரமன்
போதா - பெருநாரை, வினை முற்று, வினையெச்சம்
போதி - அரசமரம், போதியென் னேவல், மலை, வினைமுற்று
போதிகை - குறுந்தறி
போதிவேந்தன் - புத்தன், மலை யரசன்
போது - காலம், பூ, பூமலரும் பருவத்தரும்பு, போதென்னே வல், வினைமுற்று
போதை - மூதறிவு, வினைமுற்று
போத்திரி - பன்றி
போத்து - எருமை, காட்டுப்பசு, பசு, புலி, புல்வாய், பூனை, மயில், மரையிவற்றினாண், செம்போத்து, நீர்ச்சாதி யினாண், மரக்கன்று, விலங்கின் படுக்கை
போந்தின்றாரோன் - சேரன்
போந்து - அனுடநாள், பனை மரம், வினையெச்சம்
போந்தை - அனுடநாள், இளம் பனை, பனை, வினைமுற்று
போம் - அசைச்சொல், அச்சம், பெயரெச்சம், வினைமுற்று
போருடன்றல் - போரிடல்
போரேறு - செவ்வாய்
போர் - சதையநாள், நெற்போர், பொருதல், போரென்னேவல்
போர்த்தல் - மூடுதல்
போர்ப்பு - போர்த்தல்
போர்வை - தோல், மூடுதல்
போல - உவமைச்சொல், வினை யெச்சம்
போலல் - உவமை, வியங்கோண் முற்று

போலி - ஒன்றுபோலொன் றிருத்தல்
போலும் - இசைநிறையசைச் சொல் (உ-ம்: வடுவென்ற கண்ணாய் வருந்தினை போலும்), பெயரெச்சம், வினைமுற்று
போல் - உவமை, பதர், போலென் னேவல், மூங்கில்
போழ்தல் - பிளத்தல்
போழ்து - காலம், வினைமுற்று
போழ்முகம் - பன்றி
போளி - அப்ப வர்க்கம்
போற்றல் - பாதுகாத்தல், புகழ்தல், வணங்கல், வியங்கோண்முற்று
போற்றார் - பகைவர்
போனகம் - சோறு

## பௌ

பௌஞ்சு - சேனை
பௌடம் - தைமாதம்
பௌடிகம் - அட்டாதச புராணத் தொன்று, முதல்வேதம்
பௌடியம் - அட்டாதச புராணத்தொன்று
பௌண்டிரம் - ஓர் தேயம்
பௌத்தம் - புத்தமதம்
பௌத்திரன் - பெயரன்
பௌத்திரி - பெயர்த்தி
பௌத்தர் - புத்தர்
பௌமன் - செவ்வாய்
பௌரணை - பூரணை, மரக் கன்று
பௌரவர் - குருகுலவேந்தர்
பௌர்ணிமி - பூரணை
பௌவம் - கடல், நீர்க்குமிழி, நுரை, பூரணை

## ம

மக - இளமை, மகன்
மகடூ - பெண்
மகதம் - ஓர்தேசம், பதினெண் பாடையிலொன்று
மகமுறை - யாகக்கிரமம், விருந்து
மகம் - ஓர்நாள், யாகம்
மகரகேதனன் - மன்மதன்
மகரந்தம் - கள், தேன், பூந்தாது
மகரம் - ஒரு நிதானம், ஓரிராசி, ஓரெழுத்து, சுறாமீன், பூந்தாது, முதலை
மகரயாழ் - நால் வகையாழி லொன்று
மகராலயம் - கடல்
மகரிகை - தோரணம்
மகவான் - இந்திரன்
மகவு - குரங்காதி கோட்டில் வாழ் விலங்கின் பிள்ளை, குழந்தை, மகன்
மகள் - பெண்
மகன் - ஆண்மகன், பிள்ளை
மகாகர்வம் - பத்திலட்சம் கோடி
மகாகிதி - கோடி கோடாகோடி
மகாகோணி - இலட்சங் கோடா கோடி
மகாசகை - வாடாப்பூவுள மரு தோன்றிமரம்
மகாசங்கம் - ஆயிரங்கோடா கோடி
மகாசேனன் - முருகன்
மகாசோபம் - நூறுகோடி கோடாகோடி
மகாநசம் - மடைப்பள்ளி
மகாபதுமம் - பத்துக்கோடா கோடி
மகாபதுமன் - அட்டநாகத்தொன்று
மகாமேரு - பொன்மலை

மகாயுகம் - நாலுயுகங்கூடின நாற்பத்துமூன்றிலட்சத்திருபதி னாயிரம் வருடம்
மகாரண்ணியம் - பெருங்காடு
மகாரதன் - பதினோராயிரந்தேர்க் காரரோடு பொருதுவோன்
மகாராசன் - குபேரன், யானை கட்டி வாழ்பவன்
மகாராட்டிரம் - ஓர் தேயம், ஓர் பாடை
மகார் - குழவிப்பன்மை
மகாலோகம் - மேலேழுலகிலொன்று
மகி - பூமி
மகிடம் எருமை
மகிடற்செற்றாள் - காளி, துர்க்கை
மகிமா - மகத்துவம்
மகிமை - பெருமை
மகிழ் - மகிழமரம், மகிழென் னேவல்
மகிழ்ச்சி - இன்பம், களிப்பு
மகிழ்தல் - களித்தல்
மகிழ்நன் - புருடன், மருதநிலத் தலைவன்
மகிழ்வு - இன்பம், களிப்பு
மகீத்திரம் - மலை
மகுடம் - முடி, முடியுறுப்பு
மகுடராமக்கிரியம் - ஓர்பண்
மகேசன் - சிவன்
மகேச்சுவரன் - சிவன்
மகேச்சுவரி - பார்வதி
மகேந்திரசாலம் - வானிலற்புதங் காட்டும்வித்தை
மகேந்திரம் - ஓர் மலை
மகேந்திரன் - இந்திரன்
மகோததி - உடல்
மகோதரம் - ஓர் நோய்
மகோதரன் - இராவணன் மந்திரி
மக்கள் - மனிதர்
மங்கலப்பாடகர் - சூதுகைமாக்கள்
மங்கலம் - தருமம், பொலிவு, விவாகம்
மங்கலன் - செவ்வாய், நாவிதன்
மங்கலி - சிற்பத்தொழிலோர், மாதுக்குஞ் செக்கானுக்கும் பிறந்து மயிர்களைவோன்
மங்கல் - கெடுதல், வியங்கோண் முற்று
மங்களகவுசிகம் - ஓரிராகம்
மங்களம் - வாழ்த்து
மங்குதல் - கெடுதல்
மங்குல் - ஆகாயம், இரவு, மேகம்
மங்கை - பதின்மூன்று வயதுப் பெண், பெண், வினைமுற்று
மங்கைபாகன் - சிவன்
மசகம் - கொசுகு
மச்சம் - அட்டாதச புராணத் தொன்று, ஓர்தேசம், மச்சம், மீனவிராசி, மீன்
மச்சிகை - மோர்
மச்சு - குற்றம், மேனிலை
மஞ்சம் - கட்டில்
மஞ்சரி - ஓர் பிரபந்தம், தளிர், பூங் கொத்து, பூத்திரள், பூமாலை
மஞ்சனம் - குளித்தல், நீரின் முழுகல்
மஞ்சாடி - ஓர் மரம், வயிர நிறுக்கு நிறை
மஞ்சாளி - வயிர நிறுக்கு நிறை
மஞ்சிகம் - காளிக்கொடி, பெட்டி
மஞ்சிகன் - நாவிதன்
மஞ்சிகை - காதணி, குண்டலம், தாளிக்கொடி, பேழை
மஞ்சில் - பழையவரம்பின் வழி
மஞ்சு - அழகு, ஆபரணம், இளமை, கட்டில், பனி, முகடு, மேகம், யானைமுதுகு, வலி
மஞ்சுகம் - கொக்கு
மஞ்சுளம் - அழகு
மஞ்சூடை - பேழை
மஞ்சூரம் - கடலை
மஞ்ஞை - மயில்
மஞ்ஞையூர்தி - குமரன்

மடக்கு - ஓர்சித்திரக்கவி, ஓர் பத்திரம், மடக்கென்னேவல்
மடங்கல் - இடி, ஊழித்தீ, காலன், சிங்கம், நோய், மீளல், முடங்கல், யுகமுடிவு, வியங்கோண்முற்று
மடங்கற்கொடியோன் - வீமன்
மடங்கு - அளவு, மடங்கென்னேவல், வியாதி
மடந்தை - பத்தொன்பது வயதுப் பெண், பெண்
மடப்பம் - ஐஞ்ஞூறு கிராமத்துக்குத் தலைக்கிராமம்
மடமை - அறிவின்மை
மடம் - அறிவின்மை, சந்திரம், முனிவர்வாசம்
மடலூர்தல் - தலைவன் காமத்தாற்றானாகிப்பனை மடலாற் செய்யும் பரிமேலூர்தல்
மடல் - ஈந்தில் ஏற்றமடல், ஓர் பிரபந்தம், கமுகு, தாழை, தெங்கு, பனை வாழையிவற்றிற்குரிய வேடு, பூவிதழ், வியங்கோண் முற்று
மடவரல் - பெண்
மடவாள் - பெண்
மடவை - ஓர் மீன், கடவுமரம், வினைமுற்று
மடன் - அறிவிலான், உன்மத்தம்
மடி - கேடு, சீலை, சோம்பல், தாழை, நோய், பொய், மடியென்னேவல், முலைமேற்றிரள், வயிறு
மடிதல் - கெடுதல், சாதல், மடிதல்
மடித்தல் - மடிக்குதல்
மடிமை - சோம்பு
மடிவு - சாவு
மடு - ஆற்றினுட்பள்ளம், குளம், மடுவென்னேவல்
மடுத்தல் - பருகல், வாய் முதலியவற்றான் மடுத்தல்
மடை - ஆபரணக் கடைப்பூட்டு, சோறு, துவாரம், நீர்ப்பாயு மடை, வினைமுற்று
மடையர் - சமையற்காரர்
மடகல் - அமுக்கேறல், ஒளி மழுங்கல், வியங்கோண்முற்று
மட்டத்துருத்தி - ஓர் விசிறி
மட்டம் - அளவு, கேடகம்
மட்டாயுதம் - வாள்
மட்டி - படைக்கலம், மட்டியென்னேவல்
மட்டித்தல் - மண்டலித்தல்
மட்டியம் - ஓர் தாளம்
மட்டு - அவதி, அளவு, கள்
மட்டை - உடற்குறை, கமுகு, தெங்கு, பனை யிவற்றின் மட்டை
மட்பகைஞன் - குயவன்
மணங்கல் - பானை
மணங்கு - ஆட்டுக்குட்டி, ஓர் நிறை
மணத்தல் - கமழ்தல், கூடல், வாசனை விடுதல், வேட்டல்
மணமகள் - மனைவி
மணமகன் - புருடன்
மணம் - கலியாணம், வாசனை
மணவாட்டி - மனைவி
மணவாளன் - புருடன்
மணவை - அடுப்பு, வினைமுற்று
மணாளன் - ஆண்மகன்
மணி - அழகு, ஓசை, கறுப்பு, நவமணிப்பொது மணிப்பொது, முத்து
மணிமலை - பொன்மலை
மணிவடம் - பாதசாலம், வீரக்கழல்
மணை - ஓராசனம்
மண் - ஒப்பனை, சுட்டசாந்து, பூமி, மண்ணென்னேவல், மலை, மாட்சிமை, முழவின் மார்ச்சனை
மண்கனை - குடமுழவு, வாச்சியம்

மண்டகம் - சருக்கரை போடாத கோதுமைப்பூரி
மண்டம் - தயிரேடு
மண்டர் - படைவீரர்
மண்டலம் - நாடு, பூமி, வட்டம்
மண்டலி - ஓர்வகைப் பாம்பு, கூட்டம், நாய், பூமி, பூனை
மண்டலீகர் - அரசர்
மண்டலேச்சுவரன் - நாற்பதின் காதமுள்ளதேயமாயினும் நூறாயிரங் கிராமமாயினும் புரக்குமரசன், மற்றொருவரைப் பணியாதுலகாள்வோன்
மண்டல் - நெருங்கல், மிகல், வியங்கோண்முற்று
மண்டிகை - அப்ப வர்க்கம்
மண்டிலம் - குதிரை, கூத்து, நாடு, போர், வட்டமாயோடல்
மண்டுதல் - நெருங்கல்
மண்டூகம் - தவளை
மண்டை - இரப்போர்கலம், தலையோடு, வினைமுற்று
மண்டோதரி - இராவணன் மனைவி
மண்ணம் - சுட்டசாந்து
மண்ணரிநார் - குயவர் மண்ணரி நார்
மண்ணரியான் - குயவன்
மண்ணல் - அலங்கரித்தல், கழுவல், வியங்கோண்முற்று
மண்ணவர் - மனிதர்
மண்ணிலம் - பூமி
மண்ணீடு - திண்ணை, மாடம்
மண்ணீட்டாளர் - சிற்பாசாரியர்
மண்ணுடையான் - குயவன்
மண்ணுலகு - பூமி
மண்ணை - அறிவில்லான், இளமை, பிசாசம், வினைமுற்று
மண்ணோர் - மனிதர்
மண்பொதுத்தந்தை - பிர்மன்
மண்மகன் புதல்வர் - வேளாளர்
மண்மக்கள் - சூத்திரர்

மதகயம் - யானை
மதகரி - ஆண்யானை
மதகு - நீரோடி
மதங்கம் - ஓர் மலை
மதங்கர் - ஓரிருடி, பாணர்
மதங்கி - காளி, பதினாறுவயதுப் பெண், பாடுவாள்
மதத்தல் - கொழுத்தல்
மதமத்தகம் - கஞ்சா
மதமொய் - யானை
மதம் - கருத்து, சமயமதம், சம்மதம், செருக்கு, யானை மதம், வலி
மதர் - களிப்பு, மதரென்னேவல், மிகுதி
மதர்த்தல் - களித்தல்
மதர்ப்பு - மதர்வு
மதர்வு - களிப்பு, மிகுதி
மதலிகை - ஆபரணத்துடக்கு வடிவு, தூக்கம்
மதலை - கொடுங்கை, கொன்றை மரம், தூண், மகன், மரக்கலம்
மதனம் - கடைதல், காமம், மௌனம்
மதன் - அழகு, கலக்கம், காமன், மாட்சிமை, வலி, வளமை
மதாணி - ஆபரணம், பெரும் பதக்கம்
மதாவளம் - யானை
மதி - அறிவு, கற்கடகவிராசி, சந்திரன், நிதானம், மதியென்னேவல், மாதம், முன்னிலையசைச்சொல் (உ-ம்: சென்மதி பெரும)
மதிகம் - மோர்
மதிதிசை - வடக்கு
மதித்தல் - கடைதல், மதத்தல், வரையறுத்தல்
மதிநாள் - மிருகசீரிடம்
மதிப்பகை - இராகு, கேது
மதிமகன் - புதன்
மதியம் - சந்திரன், வினைமுற்று

மதியுணி - இராகு
மது - இருப்பைப் பூத்திராவகம், ஓரரக்கன், கள், சித்திரைமாதம், தேன், மகரந்தம், வசந்தகாலம்
மதுகம் - அதிமதுரம், எட்டி, தரா, தித்திப்பு
மதுகரம் - ஆண்வண்டு, கள், வண்டு
மதுகை - வலி
மதுசகன் - மன்மதன்
மதுசூதனன் - திருமால்
மதுபதி - காளி
மதுபம் - வண்டு
மதுரசம் - முந்திரிகை
மதுரம் - ஓர்கவி, சமனிசை, செஞ் சந்தனம், தித்திப்பு, முந்திரிகை
மதுரை - ஓர் நகர், கள்
மதுவம் - கள்
மதூகம் - இருப்பை, வண்டு
மத்தகம் - தலை, நுதல், பொல்லா நிலம்
மத்தம் - உன்மத்தம், ஊமத்தை, களிப்பு, மத்து
மத்தவாரணம் - அர்த்த சந்திர வடிவுள்ள தலையணை, மத யானை
மத்திகை - குதிரைச்சம்மட்டி, விளக்குத்தண்டு
மத்திமம் - இடை, சமனிசை, நடு,
மத்திமன் - சாமானியன், நடு வுளவன்
மத்தியமம் - நடு, நடுவிரல்
மத்தியமாவதி - ஓரிசை
மத்தியம் - இடை, கள், நடு
மத்திய விருத்தம் - உந்தி
மத்தியானம் - உச்சிப்பொழுது
மத்திமை - காமமு நாணமுஞ் சமமாகவுள்ளவள்
மத்திரிப்பு - சினம்
மத்து - தயிர் முதலிய கடையுமத்து
மத்துமலை - மந்தரமலை
மத்துவம் - மத்துவமதம்
மந்தமா - யானை
மந்தம் - அற்பம், ஓர்நோய், கூர்மையின்மை, சோம்பல், மத்து, மெல்லெனல்
மந்தரம் - அட்டகிரியிலொன்று, தேவலோகம், மந்தவிசை
மந்தரை - கூனி, விரோசனன் மகள்
மந்தனம் - யானை முகபடாம்
மந்தனி - தயிர்கடை தாழி
மந்தம் - கூர்மையில்லான், சனி
மந்தாகினி - அறுபதாண்டுள்ள வள், கங்கை
மந்தாரம் - ஐந்தருவிலொன்று, செம்பரத்தை
மந்தானம் - மத்து
மந்தி - கருங்குரங்கின்பெண், பெண் குரங்கு, பெண்முசு
மந்தியென்னேவல் - வண்டு
மந்தித்தல் - மந்தப்படல்
மந்திரம் - அரசன்மனை, ஆலோசனை, எண்ணல், ஓர்தேயம், குதிரைப் பந்தி, தேவர் கோயில், நாப்புடைப் பெயராதுச்சரித்தல், வீடு
மந்திரி - குபேரன், சுக்கிரன், தந்திரி, புதன், மந்திரியென் னேவல், வருங்காரியஞ்சொல் வோன், வியாழம்
மந்திரித்தல் - மந்திரம்பண்ணல்
மந்துரம் - குதிரைப்பந்தி
மந்தோதரி - மண்டோதரி
மம்மர் - துன்பம், மயக்கம்
மயக்கம் - உன்மத்தம்
மயக்கு - மயக்கம், மயக்கென் னேவல், வியங்கோண்முற்று
மயங்கல் - மயங்குதல், வியங் கோண்முற்று
மயம் - அழகு, ஒட்டை
மயர்வு - மயக்கம்
மயல் - உன்மத்தம், செத்தை, பிசாசம், மயக்கம்

மயன் - அரக்கர்தச்சன், கின்னரம், தச்சன், வினைஞன்
மயானம் - சுடுகாடு
மயிடம் - எருமை
மயிடற்செற்றாள் - காளி, துர்க்கை
மயிரகம் - மயிர்ச்சீலை
மயிரொழுங்கு - மயிர்க்குழற்றி
மயிர் - உரோமம்
மயிர்வாரி - சீப்பு
மயிர்வினை - கத்திரிகை
மயிர்வினைஞன் - நாவிதன்
மயிலை - இருவாட்சி, ஓர் நகர், மீனவிராசி, மீன்
மயில் - மயில்
மயூரம் - மயில்
மரகதம் - பச்சை, பச்சைமணி
மரகதவல்லி - தருமதேவதை, பார்வதி
மரகதன் - குபேரன்
மரக்கலம் - கப்பல்
மரக்கலன் - மீகாமம்
மரக்கா - நந்தனவனம்
மரக்கால் - உப்பளம், சோதிநாள், துர்க்கைக்கூத்து, முகந்தளக் குங்கருவியிலொன்று, விட்டுணு கூத்து
மரக்கோல் - மொட்டம்பு
மரச்செறிவு - சோலை, மரப் பொது
மரணம் - சாவு
மரணை - சாதல்
மரபு - குணம், கிழமை, முறைமை
மரம் - விருக்கம்
மரல் - அரலை
மரவட்டம் - நெடும்பரிசை
மரவம் - குங்குமமரம்
மரவினையாளர் - தச்சர்
மரவுரி - நார்ச்சீலை
மரவை - மரச்செப்பு
மரா - வெண் கடம்பு
மராடம் - பதினெண் பாடையி லொன்று, மகாராட்டிர தேயம்
மராட்டம் - இடம், புறமயிர், பெண் மயிர்
மராமரம் - அரசமரம், ஆச்சா மரம், கடப்பமரம்
மராம் - கடம்பு, வெண் கடம்பு
மராளம் - அன்னம், பாம்பு, மாதளை
மரிசம் - மிளகு
மரிசி - புதுவரம்புவழி
மரித்தல் - சாதல்
மரியாதம் - நீதி
மரியாதை - அமைவித்த நிச்சயம், கடற்கரை, வரம்பு
மரீசம் - மிளகு
மரீசி - கிரணம், சத்தவிருடி களிலொருவர்
மரீசிகம் - கானல்
மரீசிகை - கானல்
மரு - ஒரு பரிமளப்புதல், மரு வென்னேவல், வாசனை
மருகன் - மருமகன்
மருகி - மருமகள்
மருகு - மகரவாழை
மருங்கு - இடை, பக்கம்
மருங்குல் - இடை, பக்கம்
மருட்சி - அறிவின்மை, மயக்கம்
மருட்டம் - கள், வினைமுற்று
மருட்டல் - மயங்குவித்தல், வியங் கோண்முற்று
மருண்மா - யானை
மருதம் - ஓர்மரம், மருதநிலத்தி ராகம், மருதநிலம், வயல்
மருதவேந்தன் - இந்திரன்
மருது - மருதமரம்
மருத்து - காற்று
மருத்துவர் - அச்சுவினி தேவதை கள், வைத்தியர்
மருத்துவனாள் - அச்சுவினிநாள்
மருத்துவன் - இந்திரன், வைத்தியன்
மருந்தம் - நஞ்சு
மருந்து - அமுதம், மருந்து

மருப்பு - இஞ்சி, விலங்கின் கொம்பு
மருமம் - மார்பு
மருமராஞ்சம் - அசையுஞ் சீலையானுமிலையானு மெழுமொலி
மருமகன் - மருகன்
மருமான் - மகன், மருமகன், வழித் தோன்றல்
மருதவலர் - பகைவர்
மருவல் - கிட்டல், வியங்கோண் முற்று
மருவுதல் - கிட்டல்
மருளல் - அஞ்சல், எழுத்திலா வோசை, பேசலாலெழுமொலி, மயங்கல், வியங்கோண்முற்று
மருளிந்தராகம் - ஓர்பண்
மருள் - உவமையுருபு, உன்மத்தம், பிசாசம், மருளென்னேவல்
மரை - ஓர்மிருகம், தவளை, தாமரை
மரைநீகம் - தவளை
மர்க்கடம் - குரங்கு
மலகரி - ஓரிராகம்
மலங்கல் - அசைதல், குளம், வியங் கோண்முற்று
மலங்கு - ஓர்மீன், மலங்கென் னேவல்
மலம் - அழுக்கு
மலயக்கால் - தென்றல்
மலயகம் - சந்தனம், தென்றல்
மலயம் - பொதியமலை
மலரோன் - பிரமன்
மலர் - பூமலர், மலரென்னேவல்
மலர்ச்சி - எழுதல், களிப்பு, பொழிவு
மலர்தல் - எதிர்தல், தோன்றல், நிறைதல், விரிதல்
மலர்த்திரள் - பூங்கொத்து
மலர்த்தேன் - பூந்தாது
மலாடு - மலைநாடு
மலாவகம் - பிண்ணாக்கு
மலிதல் - நிறைதல், பெருகல்
மலினமுகன் - இறந்தோன், தீக்கடவுள், தீயோன், முசு, வண்டு
மலினம் - கருமை, மாசு
மலீமசம் - மாசு
மலை - உவமை, மலை, மலை யென்னேவல்
மலைச்சார்பு - குறிஞ்சிநிலம்
மலைதல் - அணிதல், எதிர்த்தல், பொருதல், மறுத்தல்
மலைநாடன் - சேரன்
மலைப்பச்சை - குளவி
மலைப்பாறை - மலைப்பக்கம்
மலைப்பு - கூத்தின்விகற்பம், போர், மலைவு
மலைமகள் - பார்வதி
மலைமடந்தை - பார்வதி
மலையமான் - சேரன்
மலையம் - குறிஞ்சியாழ்த்திறம், மலையினுச்சி, வினைமுற்று
மலையன் - கடையெழுவள்ளலி லொருவன், குறிஞ்சிநிலத்தலை வன், சேரன், வினைமுற்று
மலையாரம் - சந்தனம்
மலைவு - உவமை, போர், மயக்கம், மாறுபாடு
மல் - கூத்தின் விகற்பம், திருமால் கூத்து, வலி, வளமை
மல்கல் - நிறைதல், பெருகல், வியங்கோண்முற்று
மல்லம் - தட்டம்
மல்லரி - பம்பை மேளம்
மல்லல் - மிகுதி, வலி, வளமை
மல்லன் - ஓரரசன், வலியோன்
மல்லாரி - பம்பை மேளம்
மல்லிகை - இரப்போர்கலம், ஓர் பூஞ்செடி, விளக்குத்தண்டு
மல்லை - இரப்போர்கலம், வட்டம்
மழலை - நிரம்பா மெல்லியசொல்
மழவன் - கட்டிளமையோன்

மழவு - இளமை, குழந்தை
மழித்தல் - மொட்டையாக்கல்
மழு - எரியிரும்பு, பரசாயுதம்
மழுங்கல் - பொலிவழித்தல், வியங்கோண்முற்று
மழுவாளி - சிவன்
மழை - குளிர்ச்சி, நீர், மேகம்
மழைக்கோள் - சுக்கிரன்
மளமளெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு
மள்ளம் - வலி
மள்ளர் - உழவர், குறிஞ்சி நில மாக்கள், திண்ணியர், படை வீரர்
மள்ளல் - வலி
மறத்தல் - பொச்சாப்பு
மறத்தியர் - பாலை நிலப்பெண்கள்
மறப்பு - மறதி
மறப்புலி - சிங்கம்
மறமலி - யானை
மறம் - கொலை, கோபம், சினம், நமன், பாவம், பிணக்கு, வலி, வீரம்
மறலி - நமன், மயக்கம்
மறல் - எழுச்சி, ஓர்கூத்து, காலன், குற்றம், சாதல், தரித்திரம், நமன், பகை, பிணக்கு, போர், மயக்கம், மறதி, விங்கோண் முற்று
மறவர் - படைவீரர், பாலை நிலமாக்கள், வேடர்
மறவி - ஈனம், கள், மறதி
மறி - அளுங்கு, ஆடு, குதிரை மானிவற்றின் குட்டி, மறியென் னேவல், மான், மேடவிராசி
மறிதல் - மடங்கல்
மறிதரல் - தடுத்தல்
மறித்தல் - மீளல்
மறு - குற்றம், மறுவென்னேவல், மாசு
மறுகல் - சுழலல், வியங்கோண் முற்று
மறுகு - குறுந்தெரு, நெடுந்தெரு மறுகென்னேவல்
மறுத்தல் - கொடாமை, நீக்கல், வெட்கம்
மறுமை - வருபிறப்பு
மறுவல் - கத்தூரிமிருகம்
மறுவி - கத்தூரிமிருகம்
மறை - அடைக்கலம், இரகசியம், கேடகம், சொல், மந்திரம், மறை, மறையென்னேவல், வினைமுற்று, வேதம்
மறைக்கொடியோர் - பார்ப்பார்
மறைக்கொடியோன் - துரோணா சாரியன், பிரமன்
மறைதல் - மறைவு
மறைத்தலைவி - இலக்குமி
மறைபுகல் - அடைக்கலம்புகல்
மறைப்பு - மறைவு
மறைமுதலி - சிவன்
மறையவர் - அந்தணர்
மறையிலார் - கீழ்மக்கள்
மறையோன் - பிரமன், வியாழன்
மறைவு - மறைதல்
மற்கொல் - பகை
மற்று - அசைநிலை (உ-ம்: அது மற்ற வலங்கொள்ளாது வினைமாற்று (உ-ம்: இனி மற்றொன்றுரை)
மற்றை - சுட்டியதற்கினம்
மற்றையது - சுட்டியதற்கினம்
மற்றோ - அதிசயவிரக்கச்சொல்
மனக்கோட்டம் - அழுக்காறு
மனத்தழுக்கம் - அழுக்காறு
மனம் - மனம்
மனவிழி - இசைப்பாட்டு
மனவு - அக்குமணி, சங்குமணிப் பொது
மனாவு - அரைப்பட்டிகை
மனிதர் - புருடர்
மனு - அட்டாதச தருமநூலி லொன்று, மந்திரம், மனுச் சக்கரவர்த்தி

மனுவர் - கொல்லர்
மனை - நிலம், மனைவி, வீடு
மனையாட்டி - மனைவி
மனையாள் - மனைவி
மனோகரம் - அழகு, இச்சை
மனோக்கியம் - அழகு, மனத்திற்குவப்புளது
மனோசன் - மன்மதன்
மனோபலம் - தைரியம்
மனோரதம் - இச்சை
மனோற்பவன் - மன்மதன்
மனோன்மணி - பார்வதி
மன் - அசைநிலை (உ-ம்: அதுமற் கொண்கன்றேரே), ஆக்கம், (உ-ம்: பண்டுகாடுமன்), ஒழி யிசை (உ-ம்: கூரியதோர் வாண்மன்), கழிவு (உ-ம்: சிறியகட்பெறினே யெமக்கீயு மன்னே), பெருமை, மிகுதி (உ-ம்: எந்தையெமக்கருளுமன்)
மன்பதை - மக்கட்பரப்பு
மன்மதன் - காமன், மனங்கலக் குவிப்போன்
மன்விருத்தம் - ஆசிரியவிருத்தம்
மன்ற - தேற்றம், (உ-ம்: கடவுளா யினுமாகமடவை மன்ற வாழிய முருகே)
மன்றம் - அம்பலம், நிச்சயம், நெடுந்தெரு, வாசனை, வெளி
மன்றல் - கலியாணம், நெடுந்தெரு வாசனை
மன்று - வெளி
மன்றுபடுதல் - வெளிப்படல்
மன்னர் - அரசர்
மன்னர் பின்னோர் - வைசியர்
மன்னர்மன்னர் - துரியோதனன்
மன்னல் - நிலைபெறுதல், வியங் கோண்முற்று
மன்னவன் - அரசன், உத்திரட் டாதி, எப்பொருட்குமிறைவன்
மன்னன் - மன்னவன்
மன்னார் - பகைவர்
மன்னுலகு - தேவலோகம்
மன்னோ - அசைச்சொல்

## மா

மா - அழகு, ஆண் குதிரை, ஆண்பன்றி, ஆண் யானை, இலக்குமி, ஓரெழுத்து, கறுப்பு, குதிரை, சீலை, செல்வம், பெருமை, மா, மாமரம், வயல், வியங்கோளோடு வருமசைச் சொல் (உ-ம்: உப்பின்று புற்கையுண்கமா கொற்கை யோனே), வண்டு, வலி, விலங் கின் பொதுப்பெயர், வெறுப்பு
மாகதம் - மகததேசத்துள்ளது
மாகதர் - அரசமாதுக்கும் வைசிய னுக்கும் பிறந்தொருவர் வீர முதலியவற்றைப் புகழ்வோர், பாணர்
மாகதி - ஓர் பாடை, திப்பிலி, முல்லைக்கொடி
மாகம் - ஆகாயம், மகநாள், மாசி மாதம்
மாகரி - ஆண்யானை
மாகாளி - காளி
மாகுலவர் - வேடர்
மாக்கருவி - குதிரைக்கல்லணை
மாக்கள் - மனிதர்
மாசறல் - நன்மை
மாசி - ஓர் மாதம், புது வரம்பு, மகநாள்
மாசு - அழுக்கு, கருமை, குற்றம், மேகம்
மாசுணம் - பாம்பு, பெரும்பாம்பு
மாசுதீர்ப்பான் - நாவிதன்
மாசேனன் - அருகன், கடவுள்
மாசை - பொன்
மாஞ்சி - வாசனைப்பண்டம்
மாஞ்சில் - சடாமாஞ்சில்

மாடகம் - வீணை, முறுக்காணி
மாடம் - உழுந்து, வீடு
மாடல் - செய்தல்
மாடு - அகன்மணி, இடம், செல்வம், பக்கம், பொன், மாடு
மாடை - பொன்
மாட்சி - பெருமை
மாட்சிமை - பெருமை
மாட்டல் - மூட்டல், வியங்கோண்முற்று
மாணம் - மாட்சிமை
மாணல் - நன்மை, மாட்சிமை, வியங்கோண்முற்று
மாணவகன் - எட்டாண்டிற்குள்ளாய சிறுவன், மாணாக்கன்
மாணாக்கன் - கற்போன்
மாணார் - பகைவர்
மாணி - பிரமசாரி
மாணிக்கம் - ஓரிரத்தினம்
மாணிக்குழி - ஓரூர்
மாண் - மாட்சிமை, மாணென்னேவல்
மாண்டல் - மாட்சிமை
மாண்டார் - இறந்தோர், பெரியோர்
மாண்பு - அழகு, மாட்சிமை
மாதங்கம் - யானை
மாதங்கர் - சண்டாளர்
மாதங்கன் - அரசமாதுக்கும் வேடனுக்கும் பிறந்து செருப்புத் தைப்போன், வேடன்
மாதங்கி - காளி, துர்க்கை
மாதண்டம் - பெரும்பாதை
மாதம் - மாசம்
மாதரி - காளி
மாதர் - அழகு, ஆசை, மகளிர்
மாதலி - இந்திரசாரதி
மாதவம் - கள், கவம், வசந்த காலம், வைகாசி மாதம்
மாதவர் - முனிவர்
மாதவன் - திருமால், வசந்தன்
மாதவி - அருச்சுனன் மனைவி, கண்ணன் மனைவி, கள்ளினை யட்டவெல்லம், குருக்கத்தி மரம், கோவலன் கூத்தி, தூதிகை, நாடகக்கணிகை, வசந்தகால மல்லிகை
மாதவிகொழுநன் - அருச்சுனன்
மாதா - தாய், பார்வதி
மாதி - வட்டமாயோடல்
மாதிகம் - குதிரைமார்க்கம்
மாதிரம் - ஆகாயம், திசை, பூமி, மலை, யானை
மாதிரி - ஒப்பு
மாது - அசைச்சொல் (உ-ம்: விளிந்தன்று மாதவர்த்தெளிந்த வென்னெஞ்சே), பெண்
மாதுலன் - மாமன்
மாதுலுங்ககம் - மாதளை
மாதுவம் - கள்
மாதுளங்கம் - மாதளை
மாதுளம் - மாதளை
மாதேவன் - சிவன்
மாதோ - அசைச்சொல்
மாத்திரம் - பிரமாணம்
மாத்திரை - அளவு, காலநுட்பம், காலவிரைவு, குளிகை
மாநடன் - சிவன்
மாந்தம் - ஓர்நோய், வினைமுற்று
மாந்தர் - ஆண்மக்கள், மனிதர்
மாந்தல் - குடித்தல், புசித்தல், வியங்கோண்முற்று
மாந்தி - மாமரம், வினையெச்சம்
மாபலன் - காற்று
மாபலி - மாவலி
மாபுலி - சிங்கம்
மாமகன் - மன்மதன்
மாமணி - மாணிக்கம்
மாமருத்துநூலோர் - வைத்தியர்
மாமன் - அம்மான்
மாமாத்திரர் - வைத்தியர்
மாமி - மாமன் மனைவி
மாமுனி - அருகன்

மாமை - அழகு, நிறம்
மாயம் - அழகு, கறுப்பு, தீமை, பொய், வஞ்சம், வினைமுற்று
மாயவள் - இடாகினி, காளியேவல் செய்மகள், தெய்வப்பெண்
மாயன் - திருமால்
மாயாதேவி - புத்தன்றாய்
மாயாதேவிசுதன் - புத்தன்
மாயாபுரி - சத்தபுரியிலொன்று, பித்தளை
மாயாவி - மாயைசெய்வோன்
மாயூரம் - ஓரூர்
மாயை - இந்திரசால முதலியன, இரதிதேவி, இலக்குமி, காளி, சத்தபுரியிலொன்று, பொய், மாயாசக்தி, வஞ்சம், வினை முற்று
மாயையுற்றாள் - காளி
மாயோள் - பெண்
மாயோனாள் - திருவோணம்
மாயோன் - திருமால்
மாயோன்மருகன் - குமரன்
மாய்தல் - சாதல், மறைதல்
மாய்த்தல் - கொல்லல்
மாய்வு - சாவு, மறைவு
மாரகம் - மரணம்
மாரசயன் - புத்தன்
மாரணம் - கொலை
மாரன் - மன்மதன்
மாராட்டம் - ஊர்
மாராயம் - உவகை
மாரி - கள், சாவு, நீர், பற்பலரிறக்கு நோய், மழை, மேகம், வடுகி
மாரிநாள் - உத்திரநாள்
மாரீசம் - அட்டாதச வுபபுராணத் தொன்று
மாரீசன் - இராவணன் மாமன்
மாருதம் - காற்று
மாருதி - அனுமான், வீமன்
மார்கழி - ஓர் மாதம், மிருக சீரிடம்
மார்க்கசிரம் - மார்கழி மாதம்
மார்க்கணம் - அம்பு, தேடல்
மார்க்கணர் - இரப்போர்
மார்க்கண்டேயம் - அட்டாதசவுப புராணத்தொன்று
மார்க்கண்டேயர் - ஓர் முனிவர்
மார்க்கம் - தெரு, நெடுந்தெரு, மார்கழி மாதம், வழி
மார்ச்சாலம் - பூனை
மார்த்தாண்டம் - அட்டாதச புராணத்தொன்று
மார்த்தாண்டன் - சூரியன்
மார்பு - அகலம், நெஞ்சு
மாலதி - சிறுசண்பகம், மல்லிகை, முல்லை
மாலம் - குங்குமமரம், பேய்
மாலயற்கரியான் - சிவன்
மாலர் - கவசம், பார்ப்பனப் பெண்ணுக்குஞ் சூத்திரனுக்கும் பிறந்தோர், புலையர், வேடர்
மாலவன் - புதன்
மாலி - ஓரரக்கன், கள், மாலை யணிந்தவன்
மாலிகை - நிரல்படநிற்குங்குழு, மாலை
மாலிமி - இளைமைப் பருவத்திற் செய்நட்பு
மாலினி - காளி
மாலுகம் - வேம்பு
மாலுக்கிளையாள் - துர்க்கை
மாலுதானம் - கண்குத்திப்பாம்பு
மாலுந்திவந்தோன் - பிரமன்
மாலுமி - மீகாமன்
மாலூரம் - வில்வமரம்
மாலூர்தி - கருடன்
மாலை - அந்திப்பொழுது, அரசன்மனை, இயல்பு, இரா, ஒழுங்கு, சொல்லாலும் பூவாலும் பொன்னாலு மணியாலுந்தொடுத்த தொடை, நோய்
மால் - அருகன், இந்திரன், கருமை, காற்று, சோழன்,

திருமால், புதன், பெருமை, மயக்கம், மேகம், வேட்கை
மால்பு - கண்ணேணி
மாவர் - குதிரைப்பாகர், யானைப் பாகர்
மாவலி - ஓர் சக்கரவர்த்தி
மாவிரதியர் - சிவசமயத்தோர்
மாவிளம் - வில்வமரம்
மாவுரம் - வலி
மாவெனல் - அழைத்தல்
மாழாத்தல் - மயக்கம்
மாழை - அழகு, அறிவின்மை, உலோகக்கட்டி, ஓலை, திரட்சி, புளிமா, பொன், மாமரம்
மாழ்கல் - சாதல், மயக்கம், மேவல், வியங்கோண்முற்று
மாழ்கு - மாழ்கென்னேவல், மிருகசீரிடம்
மாழ்தல் - சோம்பல், மயக்கம்
மாள - முன்னிலையசைச்சொல் (உ-ம்: சிறிது தவிர்ந்தீக மாளநின் பரிசில ருய்ம்மார்), வினையெச்சம்
மாளல் - சாதல், வியங்கோண் முற்று
மாளவம் - ஓர் தேசம்
மாளவகவுளம் - ஓரிராகம்
மாளவி - ஓரிராகம்
மாளிகை - அரசன் மனை, வீடு
மாறல் - ஆடல், தவிர்த்தல், விடுதல், வியங்கோண்முற்று, விற்றல்
மாறன் - பாண்டியன்
மாறு - கைம்மாறு, துடைப்பம், மாறென்னேவல்
மாறுகம் - சீலை
மாற்றம் - சொல், பகை, வேற்றுமை
மாற்றலர் - பகைவர்
மாற்றல் - கொடாமை, வியங்கோண்முற்று
மாற்றார் - பகைவர்
மான - உவமைச்சொல் (உ-ம்: கோங்கமுகை மானக்குவி முலை நங்காய்) முன்னிலையசைச் சொல், வினையெச்சம்
மானசம் - கருத்து, மனது, மானதவாவி
மானமா - கவரிமா
மானம் - அபிமானம், அளவு, உவமை, குற்றம், பெருமை, வலி, வெட்கம்
மானல் - ஐயம், ஒத்தல், மயக்கம், வியங்கோண்முற்று
மானவர் - ஆண் மக்கள், படைவீரர், மனிதர், மானமுடையோர்
மானவு - தெளிவு
மானார் - பகைவர்
மானி - மானமுடையோன்
மானிடத்தன்மன் - குபேரன்
மானிடமேந்தி - சிவன்
மானிடர் - மனிதர்
மானியம் - அரசர்கள் சம்மானத்தால் விட்ட நிலம்
மானினி - பெண்
மானுடர் - மனிதர்
மானேந்தி - சந்திரன், சிவன்
மானேறு - உத்திரநாள், கலைமான்
மான் - உருவம், மகாமீன், மகரராசி, மானென்னேவல், மான், விலங்கின்பொது
மான்மகன் - பிரமன், மன்மதன்
மான்மதம் - கத்தூரி
மான்றலை - மிருகசீரிடம்
மான்றல் - மயக்கம்

## மி

மிகப்படல் - மிகுதல்
மிகல் - மிகுதி, வியங்கோண்முற்று
மிகவல்லோர் - அறிஞர்
மிகுகொடையாளன் - கன்னன்

மிகுதி - அநேகம், திரட்சி, பூரிப்பு, பொலிவு, வினைமுற்று
மிகை - கேடு, துன்பம், மிகுதி, வருத்தம், வினைமுற்று
மிக்கவை - ஊன், சோறு, நியாய மல்லவை, நிறைதல்
மிக்கோர் - அறிஞர்
மிசை - உயர்ச்சி, சோறு, தரித்திரம், மிசையென்னேவல், மேடு, மேல்
மிசைதல் - உண்ணல்
மிசைத்திரள் - கரடு
மிச்சில் - எச்சில், ஒழிபொருள்
மிச்சை - அஞ்ஞானம், தரித்திரம்
மிஞிறு - வண்டு
மிஞ்சல் - மிகுதல், வியங்கோண் முற்று
மிடல் - வலி
மிடறு - கழுத்து, கீழ்வாய், தொண்டை
மிடா - பானை, மிடா
மிடி - மிடியென்னேவல், வறுமை
மிடித்தல் - வறுமையுறல்
மிடிமை - வறுமை
மிடியன் - வறியன்
மிடை - தூறு, மிடையென்னேவல்
மிடைதல் - நெருங்கல்
மிண்டன் - திண்ணியன்
மிண்டு - மதத்தாற், பிழைத்தல், மிண்டென்னேவல்
மிண்டுதல் - நெருங்கல்
மிதத்தல் - மிதப்பு
மிதம் - அளவு
மிதலை - கொப்பூழ்
மிதவை - சோறு, தெப்பம், வினை முற்று
மிதி - மிதித்தல், மிதியென்னேவல்
மிதித்தல் - குதித்தல்
மிதியடி - பாதகுறடு
மிதிலை - சனகநகர்
மிதுனம் - இரட்டை, புணர்ச்சி, மிதுனவிராசி
மித்திரநாள் - அனுடநாள்
மித்திரம் - நட்பு
மித்திரர் - சினேகிதர்
மித்திரன் - சினேகிதன், சூரியன்
மித்திரை - தோழி
மித்தை - பொய்
மியா - முன்னிலையசைச்சொல் (உ-ம்: கேண்மியா)
மிரதம் - பாம்பு
மிரியல் - மிளகு
மிருகசீரிடன் - ஓர்நாள்
மிருகண்டன் - ஓரிருடி
மிருகதரன் - சந்திரன்
மிருகநாபி - கத்தூரிப்பூனை
மிருகபதி - சிங்கம்
மிருகமதம் - கத்தூரி
மிருகம் - மான், விலங்கின்பொது
மிருகராசன் - சிங்கம்
மிருகாங்கன் - சந்திரன், சிவன்
மிருகாதனம் - ஓர் வகைப் புலி
மிருகாதி - புலி
மிருகேந்திரன் - சிங்கம்
மிருடன் - சிவன்
மிருதங்கம் - முழவு
மிருதம் - போர்
மிருதி - தரும நூல், மரணம்
மிருது - மென்மை
மிருத்தஞ்சயன் - சிவன்
மிருத்திகை - மண்
மிருத்து - மண், மரணம்
மிருநாளம் - தாமரைக்கொடி
மிலேச்சம் - சரச்சுவதியாற்றின் வடதேசம்
மிலைச்சல் - அணிதல், வியங் கோண்முற்று
மிலைதல் - சூடுதல்
மிழலை - மழலைச் சொல்

மிழற்றல் - சொல்லல், நிரம்பா மென்சொல், பேசலாவெழு மொலி, வியங்கோண்முற்று
மிளகு - மிளகு
மிளிர் - பெருமை, மிளிரென் னேவல்
மிளிர்தல் - ஒளி செய்தல்
மிளிறு - கரடி
மிறல் - பெருமை
மிறை - அச்சம், குற்றம்
மிறைக்கவி - சித்திரக்கவி
மிறைத்தல் - துன்பப்படல்
மின் - ஒளி, பெண்மகள், மின்னல், மின்னென்னேவல்
மின்னல் - ஒளி செய்தல், வியங் கோண்முற்று

## மீ

மீ - ஆகாயம், உயர்ச்சி, ஓரெழுத்து, மேல்
மீகான் - மீகாமன்
மீக்குவம் - மருத மரம்
மீக்கூர்தல் - பெருகுதல்
மீக்கூறல் - புகழ்தல், மெச்சல், வியங்கோண்முற்று
மீக்கூற்று - புகழ்
மீக்கோள் - எறுதல், மேற்போர்வை
மீட்சி - மீளுதல்
மீட்டல் - வீணை வாசித்தல், வியங் கோண்முற்று
மீட்டுதல் - வீணை வாசித்தல்
மீமாஞ்சை - ஓர் சமயம், பிரமாணத்தாலுண்மையறிதல்
மீமிசை - மேல்
மீதுரை - பேருரை
மீதூர்தல் - நெருங்கல்
மீளல் - திரும்பல், வியங்கோண் முற்று
மீளாக்கதி - மோக்கம்
மீளி - அரசன், திண்ணியன், பாலைநிலத் தலைவன், பெருமை, மேன்மக்கள், வலி
மீனக்கொடியோன் - மன்மதன்
மீனம் - மீனவிராசி, மீன்
மீனவன் - பாண்டியன்
மீனெறி - மீன்குத்திக்குருவி
மீனேறு - மகரமீன்
மீன் - சித்திரைநாள், நெய்தற்பறை, மகரமீன், மச்சம், விண்மீன்
மீன்சுவை - சித்திரைநாள்

## மு

முகடி - மூதேவி
முகடு - சுவர்ப்புறத்து நீண்ட வுத்திரம், மலையுச்சி
முகத்தல் - மொள்ளல்
முகமன் - உபசாரம்
முகமுகெனல் - ஈரொலிக்குறிப்பு
முகம் - இடம், முகம்
முகரிமை - பேரறிவு
முகரெனல் - ஒலிக்குறிப்பு
முகவுரை - பாயிரம்
முகாரி - ஓரிராகம்
முகில் - மேகம்
முகிழம் - மலரும் பருவத்தரும்பு
முகிழ் - மலரும் பருவத் தரும்பு, முகிழெனேவல்
முகிழ்த்தல் - குவிதல்
முகினி - புளியமரம்
முகுந்தன் - திருமால்
முகுரம் - கண்ணாடி
முகை - கூட்டம், மலரும் பருவத் தரும்பு, மிடா, முகையென் னேவல்
முகைத்தல் - அரும்புதல்
முக்கணன் - சிவன், விநாயகன், வீரபத்திரன்
முக்கணி - காளி, பார்வதி

முக்கல் - பேசலாலெழுமொழி, வியங்கோண்முற்று
முக்குடுமி - சூலம்
முக்குடைச்செல்வன் - அருகன்
முக்குற்றங்கடிந்தோன் - கடவுள், புத்தன்
முக்கூட்டு - பரணிநாள்
முக்கோல் - திருவோணம்
முசர் - தயிர்
முசலம் - இருப்புலக்கை, உலக்கை
முசலி - உடும்பு, ஓணான், தாழை, பலபத்திரன், பல்லி, முதலை
முசலிகை - உடும்பு
முசல் - முயல்
முசித்தல் - மெலிதல்
முசிப்பு - மெலிவு
முசு - ஓர் சாதிக்குரங்கு
முசுடர் - கீழ்மக்கள்
முசுண்டர் - கீழ்மக்கள்
முசுண்டி - படைக்கலம்
முசுப்பதி - பாசறை
முச்சந்தி - முத்தெருக் கூடுமிடம்
முச்சி - உச்சி, உச்சிக் கொண்டை, மயிர்முடி
முச்சியர் - உறைகாரர்
முச்சில் - சிறுமுறம்
முஞல் - கொசுகு
முஞ்சல் - சாதல், முற்றல், வியங்கோண்முற்று
முஞ்சி - ஓர்சாதி நாணற்புல், வினையெச்சம்
முடக்கம் - முடங்குதல்
முடக்கு - முடக்கென்னேவல், விரலணி
முடங்கல் - ஓலை, தாழை, நோய், மடங்கல், மூங்கில், வியங்கோண்முற்று
முடங்கு - நோய், முடங்கென்னேவல்
முடங்குளை - சிங்கம்
முடமுடெனல் - அனுகரண ஓசை

முடலை - உண்டை, நாற்றம், பெருமை, வலி
முடவன் - அருணன், சனி, முடவன்
முடி - கிரீடம், குடுமி, தலை, துலாய், நாறுமுடி, மயிர்முடி, முடியென்னேவல்
முடிதல் - கடை, சாதல், முடிச்சு முடிதல்
முடித்தல் - முற்றுவித்தல்
முடியல் - எல்லாம், வியங்கோண் முற்று
முடிவு - கடை
முடுகல் - எதிர்த்தல், சீக்கிரம், மொய்த்தல், வலி, வியங்கோண் முற்று
முடுகியல் - வண்ணம்
முடுகு - அராகம், கடமைப் பெண், முடுகென்னேவல்
முடுக்கர் - மலைக்குகை
முடுக்கல் - ஓட்டல், மொய்த்தல், வியங்கோண்முற்று
முடுவல் - செந்நாய், நாய், பெண்ணாய்
முடுவற்படையோன் - வயிரவன்
முடை - ஓலைக்குடை, தீயவாசனை, நாற்றம், புலால், முடையென்னேவல்
முடைச்சேரி - முல்லை நிலத்தூர்
முடைதல் - இளைத்தல், நிணத்தல்
முட்டம் - ஒரூர், வினைமுற்று
முட்டி - எட்டிமரம், கைப்பிடி, பிச்சை, வினையெச்சம்
முட்டு - கடிவாளம், குறைவு, முட்டென்னேவல்
முட்டுதல் - எதிர்த்தல், குறைவுறல்
முட்டுப்பாடு - குறைபாடு, தீமை
முட்டை - அண்டம், தவிடு, வினைமுற்று
முட்பன்றி - முள்ளம்பன்றி
முணங்கு - அடக்கம்

முண்டகம் - கள், தாமரை, தாழை, நெற்றி, முட்செடி, முள்ளிச்செடி
முண்டகாசனை - இலக்குமி
முண்டம் - உடற்குறை, தலை, திரட்சி, மொட்டைத்தலை
முண்டனம் - மழித்தல்
முண்டி - நாவிதன், முண்டியென்னேவல், மொட்டைத் தலையன்
முண்டிதம் - மொட்டை
முண்டித்தல் - மழித்தல்
முண்டை - விதவை
முண்மா - முட்பன்றி
முதம் - உவகை
முதலல் - முதலாதல், வியங்கோண் முற்று
முதலி - முதல்வன், வினையெச்சம்
முதலுதல் - முதலாதல்
முதலை - நீர்வாழ்முதலை, வினை முற்று
முதலோன் - கடவுள்
முதல் - ஆதி, ஏழனுருபு, (உ-ம் சுரன் முதல் வந்தவுரன் மாய மாலை), முதலென்னேவல்
முதல்வர் - வானோர்
முதல்வன் - அரசன், அரன், அருகன், கடவுள்
முதல்வி - தலைவி
முதற்பா - வெண்பா
முதனாள் - அச்சுவினிநாள்
முதியர் - மூத்தோர்
முதிரம் - மேகம்
முதிரை - அவரை, காராமணி, கொள், துவரை யிவை முதலி யன, வினைமுற்று
முதிர்ச்சி - முதிர்வு
முதிர்தல் - காய்தல், வறத்தல்
முதிர்ந்திடல் - முதிர்தல்
முதிர்ப்பு - கலக்கம்
முதிர்வேனில் - ஆனியாடியின் பருவம்
முது - பழமை
முதுகு - பின்புறம்
முதுக்குறைவு - பேரறிவு
முதுசொல் - பழஞ்சொல்
முதுநிலம் - களர், பெரும்பாழ் நிலம்
முதுமகன் - சனி
முதுமை - பழமை, பழமொழி, மூப்பு
முதுவர் - புலவர், மந்திரிகள், மூதுணர்ந்தோர், மூத்தோர்
முதை - காடு வெட்டிச்சுட்ட கொல்லை
முதைப்புனம் - பழங்கொல்லை
முதையல் - முதுகாடு
முத்தகம் - கருக்குவாளி மரம், தனித்தனியே முற்றுப்பெறுஞ் செய்யுள்
முத்தக்காசு - கோரைக்கிழங்கு
முத்தமிழுரியோன் - அகத்தியன், வயிரவன்
முத்தம் - உதடு, பிரியம், மருத நிலம், முத்து
முத்தர் - திடர், பக்குவர்
முத்தலை - சூலம்
முத்தலைவேலோன் - வைரவன்
முத்தன் - அரன், அருகன், புத்தன், முத்திபெற்றோன், வயிரவன்
முத்தாபலம் - இசங்கஞ்செடி, முத்து
முத்தி - மோக்கம்
முத்திரிகை - எழுத்துப் பொறித்த மோதிரம்
முத்திரை - அடையாளம், எழுத்துப் பொறித்த மோதி முதலிய, ஒன்றின் மேற்பதிக்கு முத்திரை
முத்து - முத்தம்
முத்தை - கவளம், திரட்சி, மிகவுந் தெரிவிலாள்
முத்தொழிலோர் - வைசியர் பொது

முத்தொழிற்பகவன் - கடவுள்
முந்தல் - முற்படல், வியங்கோண் முற்று
முந்து - முந்தென்னேவல், வெண்ணாரை
முந்தூழ் - மூங்கில்
முந்தை - பழமை, வினைமுற்று
முந்நீர் - கடல்
முப்புரம் - திரிபுரம்
முப்புரிநூலோர் - பார்ப்பார்
முப்புள்ளி - ஆய்தவெழுத்து
மும்மீன் - மிருகசீரிடம்
முயக்கம் - முயங்கல்
முயக்கு - முயக்கம்
முயங்கல் - தழுவல், வியங்கோண் முற்று
முயலல் - முயற்சி, வியங்கோண் முற்று
முயலின் கூடு - சந்திரன்
முயலுதல் - முயற்சி
முயல் - போர், முயலென்னேவல், முயல்
முயற்சி - ஊக்கம்
முயிறு - எறும்பின் விசேடம்
முரசக்கொடியோன் - தருமராசன்
முரசம் - முரசு, வாச்சியப்பொது
முரசு - உத்திரட்டாதி நாள், ஓர் வாச்சியம், வாச்சியப்பொது
முரட்கை - கலிப்பா
முரணல் - மாறுபடல், வியங் கோண்முற்று
முரண் - ஓர் தொடை, பகை, போர், முரணென்னேவல், வலி
முரம்பு - உப்பளம், கல்லின்மேடு, கழி, பலரடுத்துயர் நிலம், பாறை
முரலல் - ஒலித்தல், பேசலாலெழு மொலி, வியங்கோண்முற்று
முரல்வு - உள்ளோசை
முரளி - மூக்கால் வாசிக்குஞ்சிறு குழல், வேய்ங்குழல்
முரற்றல் - ஒலித்தல்
முரன் - ஓரரக்கன்
முராரி - திருமால்
முரிதல் - ஒடிதல், கெடுதல், முறிதல்
முரித்தல் - முறித்தல்
முரிப்பு - எருத்துத்திமில், முரித்தல்
முரிவு - முறிவு
முருகன் - இளையோன், குமரன், வெறியாட்டாளன்
முருகியம் - குறிஞ்சி நிலப்பறை
முருகு - அகில், அழகு, இளமை, எழுச்சி, கள், திருவிழா, முருகன், வாசனை
முருக்கல் - அழித்தல், உருக்குதல், கொல்லல், வியங்கோண்முற்று
முருக்கு - எலுமிச்சை, கொலை, முருக்கு, முருக்கென்னேவல்
முருக்குதல் - அழித்தல், உருக்குதல், கொல்லல்
முருங்கை - ஓர்மரம், வினைமுற்று
முருடர் - வேடர்
முருடு - ஓர் வாச்சியம், பறைப் பொது, பெருங்குறடு, விறகு
முருந்து - இறகினடியிற் குருத்து, வெண்குருத்து, வெண்மை
முலை - கொங்கை
முல்லை - இசை, கற்பு, மன்மதன் கணை, முல்லைக் கொடி, முல்லை நிலம், வனமல்லிகை, வெற்றி
முல்லையர் - இடையர்
முழக்கம் - ஒலி
முழக்கல் - முழக்கல், வாச்சியம் வாசித்தல், வியங்கோண்முற்று
முழங்கல் - ஒலித்தல்
முழந்தாள் - முழங்கால்
முழந்து - முழங்கால்
முழல் - கழற்சிக்கொடி
முழவம் - குடமுழா, முரசு
முழவு - பறைப்பொது
முழா - முழவுமேளம்

முழுகல் - குளித்தல், வியங்கோண் முற்று
முழுக்கு - முழுகல்
முழுது - எல்லாம்
முழுதும் - எல்லாம்
முழுதொருங்குணர்ந்தோன் - அரன், அருகன், கடவுள்
முழுத்தல் - மூழ்குவித்தல், வியங் கோண்முற்று
முழுமகன் - அறிவிலான்
முழுமை - எல்லாம்
முழுவதும் - எல்லாம்
முழுவலயம் - வென்றி
முழுவெலும்பு - தலை கழிந்த வெலும்பு
முழை - துடுப்பு, மலையினுட் குகை
முழைத்தல் - எழுத்திலாவோசை
முளரி - ஓமவிறகு கடைக்கொள்ளி, காடு, தாமரை, நெருப்பு, முட் செடி, விறகு
முளவு - முட்பன்றி
முளி - மர முதலியவற்றின் காடு, முளியென்னேவல்
முளித்தல் - காய்தல், வறத்தல்
முளை - அங்குரம், தண்டாயுதம், தறி, மகன், முளையென்னேவல், மூங்கில்
முளைத்தல் - முளைக்குதல்
முள் - நுண்மை, முள்
முள்ளி - ஓர் செடி
முறம் - புடைக்குமுறம், விசாக நாள்
முறி - இலை, எழுதுமுறி, தளிர், முறியென்னேவல்
முறிதல் - ஒடிதல்
முறித்தல் - ஒடித்தல்
முறியர் - விற்றற்குரியவடிமைகள்
முறிவு - முறிதல்
முறுகல் - கடுப்பு, திருகல், வியங் கோண்முற்று
முறுக்கல் - திருகல், முறுக்குதல், வியங்கோண்முற்று
முறுவல் - எயிறு, சிரிப்பு
முறை - இடைச்சொல், ஒழுக்கம், குணம், பழமை, புத்தகம், முறைமை
முறைதெரிந்தோன் - சிற்பாசாரி, பிரமன்
முறையிலார் - கீழ்மக்கள்
முற்கம் - பயறு, முற்கு
முற்கரம் - படைக்கலம்
முற்காவலன் - குபேரன்
முற்கு - முற்கந்தெறித்தல்
முற்குளம் - பூராடநாள்
முற்கொழுங்கோல் - பூரட்டாதி
முற்சனி - மகநாள்
முற்றம் - முன்றில்
முற்றல் - காழ்க்கோடல், முடிவு, மூப்பு, வளைத்தல், வளைவு, வியங்கோண்முற்று
முற்றில் - முறம், விசாகநாள்
முற்று - முடிவு, முற்றென்னேவல்
முற்றுதல் - முடிதல்
முற்றும் - எல்லாம், கடை, பெய ரெச்சம், மூலநாள், வினைமுற்று
முனி - அகத்தி, தவத்தோன், புத்தன், முனியென்னேவல், யானைக்கன்று, வில்
முனிதல் - சினக் குறிப்பு, சினம், வெறுத்தல்
முனிவர் - அந்தணர், சடைமுடி யோர், தவத்தர்
முனிவு - கோபம், சினம்
முனீந்திரன் - புத்தன்
முனை - நுனி, பகை, முதன்மை, முனையென்னேவல், வெறுப்பு
முனைதல் - சினக்குறிப்பு
முனைந்தோர் - பகைவர்
முனைப்பதி - பகைவர்மேற் சென்றோருறைவிடம்
முனையிடம் - பாலைநிலத்தார்
முனைவர் - பகைவர், முனிவர்

முனைவன் - அருகன், பகைவன், பத்தன், வினைமுற்று
முனைவு - கோபம், சினம், வெறுப்பு
முன் - இனியென்பது, ஏழனுருபு (உ-ம்: கற்றார் முற்றோன்றா கழி விரக்கம்), பக்கம், பழமை, முதல், முன், முன்னென்னேவல், மேல்
முன்சொல் - பழஞ்சொல்
முன்பனி - மார்கழியின் பருவம்
முன்பிறந்தாள் - அக்காள்
முன்பு - பழமை, பெருமை, முன், வலி
முன்றாதை - பாட்டன்
முன்றானை - மேற்போர்வை
முன்றில் - முற்றம்
முன்றோன்றல் - தலைமயன்
முன்னம் - கருத்து, சீக்கிரிமரம், மனம், முன், வினைமுற்று
முன்னர் - ஆதி, இடம், முன், நெஞ்சு
முன்னல் - நினைத்தல், வியங் கோண்முற்று
முன்னவன் - சிவன், தலைமயன்
முன்னிலை - காரணம், மூவிடத் தொன்று
முன்னிளவல் - தலைமயன்
முன்னூல் - கடவுள்மொழிந்த நூல்
முன்னூற்கேள்வன் - கடவுள்
முன்னை - அக்காள், அண்ணன், பழமை, முன்னைமரம், வினை முற்று
முன்னோர் - மந்திரிகள்
முன்னோன் - கடவுள், விநாயகன்

## மூ

மூ - ஓரெழுத்து, மூப்பு, மூவென் னேவல்
மூகம் - மௌனம்
மூகன் - ஊமை
மூகை - ஊமை
மூக்கரிகத்தி - வெற்றிலைகிள்ளுங் கருவி
மூக்கு - நாசி, பறவைமூக்கு
மூங்கில் - மூங்கில்
மூங்கை - ஊமை
மூசல் - சாதல், மொய்த்தல், வியங் கோண்முற்று
மூச்சு - உயிர்ப்பு
மூஞ்சல் - மொய்த்தல்
மூஞ்சூறு - சுசுந்தரி
மூடர் - அறிவிலார், கீழ்மக்கள்
மூடல் - மூடுதல், வியங்கோண் முற்று
மூடிகம் - எலி, பெருச்சாளி
மூடம் - மூடம், மூடல்
மூட[illegible]ல் - [illegible]கைத்தல், வியங் கோண்முற்று
மூட்டு - குதிரைக் கடிவாளம், சந்து, மூட்டென்னேவல்
மூட்டை - மூட்டை, வினைமுற்று
மூதணங்கு - காடுகாள்
மூதா - தம்பலப்பூச்சி
மூதாதை - பாட்டன்
மூதிரி - எருமை
மூதிரை - திருவாதிரை நாள்
மூதுரை - பழமொழி
மூதேவி - இலக்குமி முன் பிறந்தாள்
மூதை - வெட்டிச் சுட்டகாடு
மூத்தல் - முதுமையுறல்
மூத்தாள் - அக்காள், கிழவி, தலைவி
மூத்திரம் - சிறுநீர்
மூத்தோர் - புலவர், மந்திரிகள்
மூத்தோன் - அண்ணன், விநாயகன்
மூப்பு - தலைமை, முதுமை
மூய்தல் - மூடுதல்
மூரல் - சிரிப்பு, சோறு, பல்
மூரி - எருது, எருமை, சோம்பல் நெரிவு, பழமை, பெருமை, வலி

மூர்க்கம் - சலஞ்சாதித்தல், நாகப் பாம்பு
மூர்க்கர் - கீழ்மக்கள்
மூர்ச்சை - நினைவுமயங்கிக் கிடத்தல்
மூர்த்தம் - இருகடிகைப் பொழுது, உருவமுடையது, தலை
மூர்த்தி - அருகன், உடல், உருவம், சிவன், புத்தன்
மூர்த்திகன் - குமரன், வயிரவன்
மூர்த்தினி - தலை
மூலகந்தம் - வெட்டிவேர்
மூலகம் - கிழங்கு, முள்ளங்கி
மூலதனம் - மூலத்திரவியம்
மூலம் - ஓர் நாள், ஓர் நோய், காரணம், கிழங்கு, முதல், வேர்
மூலிகை - வேர்
மூலியம் - விலை
மூவிலைவேல் - சூலம்
மூவுதல் - முடிதல்
மூவுலகாதாரன் - கடவுள்
மூவுலகாளி - கடவுள்
மூவுலகுணர்ந்தோன் - அருகன்
மூவுலகேந்தி - கடவுள்
மூழி - அகப்பை, துடுப்பு, மத்து
மூழை - துடுப்பு, மத்து, முகவை
மூழ்கல் - முழுகல், வியங்கோண் முற்று
மூழ்த்தல் - மொய்த்தல், வியங் கோண்முற்று
மூளல் - மூளுதல், வியங்கோண் முற்று
மூளுதல் - நெருப்பு முதலிய மூளல்
மூளை - தலை முதலியவற்றின் மூளை, வினைமுற்று

## மெ

மெச்சல் - கொண்டாடல், துதித்தல், வியங்கோண்முற்று
மெத்து - மென்மை
மெத்தை - அமளி, மேல்வீடு
மெய் - உடல், உண்மை, ஒற்றெழுத்து
மெய்காப்பாளர் - காவலர்
மெய்ந்நலம் - வலி
மெய்நூலன் - துரோணாசாரியன்
மெய்புகுகருவி - கவசம்
மெய்ப்படாம் - திரைச்சீலை
மெய்ப்பிரம் - மேகம்
மெய்ப்பை - சட்டை
மெய்மதம் - அட்டாதச நூலி லொன்று, மெய்யான சமயம்
மெய்மை - உண்மை, கருத்து
மெய்யர் - அந்தணர், முனிவர்
மெய்யன் - உண்மையுள்ளோன், மகன்
மெய்யுரைத்தல் - கவசம்
மெய்விரதன் - தருமராசன்
மெலிதல் - மெலிவு
மெலிவு - இளைப்பு
மெல்லல் - மெல்லுதல், வியங் கோண்முற்று
மெல்லன் - நெய்தனிலத் தலைவன்
மெல்லியர் - மாதர்
மெல்லியல் - பெண், மரத்திளங் கொம்பு
மெல்லிலை - வெற்றிலை
மெல்லெனல் - மந்தக்குறிப்பு
மெழுகு - மெழுகு, மெழுகென் னேவல்
மென்பால் - மருதநிலம்
மென்மை - மிருது
மென்னடை - அன்னம்

## மே

மேகநாதம் - சிறுகீரை
மேகநாதன் - இந்திரசித்து
மேகபுட்பம் - நீர்

மேகப்புள் - வானம்பாடி
மேகம் - ஓர்நோய், முகில்
மேகரஞ்சி - ஓரிராகம்
மேகராகக்குறிஞ்சி - ஓர்பண், குறிஞ்சித்திறத்தினொன்று
மேகலை - சீலை, மாதரிடையணி யுளெழுகோவை
மேகவாகனன் - இந்திரன்
மேகாரம் - மயில்
மேக்கு - உயர்ச்சி, மேல், மேற்கு
மேசகம் - மயிற்றோகைக்கண்
மேடம் - ஆடு, மேடவிராசி
மேடு - உயர்ச்சி, ஊர், சிறு திட்டை, வயிறு
மேடுகம் - சுவர்
மேடை - மேடு
மேட்டிமை - மேன்மை
மேதகம் - மதிப்பு, மேன்மை
மேதம் - கொலை
மேதாரம் - மலை
மேதாவியர் - அறிஞர்
மேதி - எருமை, வினைமுற்று
மேதிச்சென்னிமிதித்தோள் - துர்க்கை
மேதினி - பூமி
மேதை - அறிவு, இறைச்சி, கள், தோல், நரம்பு, நிணம், புதன், மேன்மை
மேதையர் - புலவர்
மேத்தியம் - சுத்தம்
மேநகை - தேவதாசி, மேரு மலைக்குப் பெண்ணு மிமய மலைக்கு மனைவியுமாகிய மனோரமையென்பவள்
மேநகைபுதல்வி - பார்வதி
மேம்பாடு - புகழ், மேன்மை
மேய்தல் - உண்டல்
மேய்த்தல் - மேயச் செய்தல்
மேரு - பொன்மலை, மலை
மேலகம் - மோக்கம்
மேலமரிறைவன் - முருகன்
மேலுலகம் - தேவலோகம்
மேலோர் - அறிஞர், புலவர், வானோர்
மேல் - அகலம், ஆகாயம், இனி யென்பது, ஏழனுருபு (உ-ம்: தன்மேற்கடுவரை நீரிற்கடுத்து வரக்கண்டும்), மேல், மேற்கு
மேவலர் - பகைவர்
மேவல் - ஆசைப்பெருக்கம், உண்டல், வியங்கோண்முற்று, விரும்பல்
மேவினர் - உறவோர், சிநேகிதர்
மேவு - ஆசை, மேவென்னேவல்
மேழகம் - கவசம், செம்மறிக்கடா, துருவாட்டேறு
மேழி - மேழி
மேழியர் - பூவைசியர், மருதநில மாக்கள்
மேளம் - பலவாச்சியக்கூட்டம்
மேளனம் - கூட்டம்
மேற்கு - மேல், மேற்றிசை
மேற்குலத்தோர் - அந்தணர்
மேற்கோள் - சனி, மேன்மை
மேற்செம்பாலை - ஓரிராகம்
மேற்றிசைப்பாலன் - வருணன்
மேனி - உடலுருவம், நிறம், வடிவு

## மை

மை - அஞ்சனம், கறுப்பு, குற்றம், செம்மறியாடு, நீர், மலடு, மேகம், மேடவிராசி, மையென்னேவல்
மைதல் - மையச்செய்தல்
மைதுலி - சீதை
மைதுனம் - புணர்ச்சி
மைத்திரம் - சிநேகம்
மைத்திரியம் - சிநேகம்
மைத்துனன் - மச்சினன்
மைநாகன் - மலையரயனுக்கும் மேநகைக்கும் புத்திரன்

மைந்தர் - ஆண்மக்கள், மனிதர்
மைந்தன் - மகன்
மைந்து - மயக்கம், வலி, வினை யெச்சம்
மைமா - பன்றி
மைமுகன் - முசு
மைம்மை - மலடி, மலட்டெருமை
மையம் - நடு, வினைமுற்று
மையல் - உன்மத்தம், மயக்கம், வியங்கோண்முற்று

## மொ

மொகமொகெனல் - ஈரடுக் கொலிக்குறிப்பு
மொக்குள் - கொப்பூழ், நீர்க்குமிழி, மலரும் பருவத்தரும்பு
மொச்சை - ஓர்கொடி
மொடமொடெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு
மொட்டு - இளம்பூவரும்பு
மொட்டை - மழித்தல்
மொத்தம் - பொது, வினைமுற்று
மொத்தல் - அடித்தல், வியங் கோண்முற்று
மொந்தை - ஓர்கட்பறை, ஓர் பாத்திரம்
மொய் - கூட்டம், போர், போர்க் களம், மொய்த்தல், மொய் யென்னேவல், யானை, வண்டு
மொய்கதிர் - முலை
மொய்த்தல் - நெருங்கல், மூடுதல்
மொய்த்தாய் - தாய்
மொய்ம்பு - தோள், வலி
மொழி - சொல், மொழியென் னேவல்
மொழிதல் - சொல்லல்
மொழிமை - பழஞ்சொல்
மொள்ளல் - முகத்தல், வியங் கோண்முற்று

## மோ

மோ - ஓரெழுத்து, முன்னிலை யசைச்சொல் (உ-ம்: கேண்மோ), மோவென்னேவல்
மோகம் - ஆசை, உன்மத்தம், காமம்
மோகர் - சித்திரக்காரர்
மோகனம் - அட்டசித்தியிலொன்று
மோகன் - மன்மதன்
மோகினி - திருமால் பெண்ணுருக் கொண்ட மோகினி
மோக்கம் - தீர்தல், பரகதி
மோசம் - வஞ்சனை
மோசனம் - ஓர்வகைநெல், தீர்தல்
மோடி - காடுகாள், பிணக்கு
மோடு - உயர்ச்சி, பெருமை, வயிறு
மோதகம் - அப்ப வர்க்கம், தோசை
மோதம் - உவகை, வாசனை
மோதல் - அடித்தல், வியங்கோண் முற்று
மோதிரம் - ஆழி
மோத்தல் - ஆக்கிராணித்தல்
மோத்தை - வெள்ளாட்டுக்கடா
மோவாய் - தாடி
மோழல் - பன்றி
மோழை - கஞ்சி, கொம்பின்மை
மோனம் - மௌனம்
மோனர் - முனிவர்
மோனை - ஆதி, ஓர் தொடை

## மௌ

மௌஞ்சி - நாணற்புல்லாற்செய்த வரைஞாண்
மௌத்திகம் - முத்து
மௌரவி - வின்னாண்

மௌலி - கள், சிகை, மயிர் முடி
மௌவல் - வனமல்லிகை
மௌனியர் - முனிவர்

## ய

யசமானன் - தலைவன்
யசனம் - யாகம்
யசுசு - இரண்டாம் வேதம்
யசுரு - இரண்டாம் வேதம்
யட்டி - ஊன்றுகோல், முத்துத் தாழ்வடம்
யதி - தாளப் பிரமாணம், முனிவர், மோனை
யது - ஓரரசன்
யமகம் - வந்தசொல்லே வருதல்
யமளம் - இரட்டை
யமி - முனிவன்
யமுனை - காளிந்திநதி
யயாதி - குருகுலத்தரசர்களி லொருவன்
யவம் - ஓர் வகைக்கோதுமை
யவனம் - ஓர்தேயம்
யவனர் - கம்மாளர், சித்திரக்காரர், சோனகர்

## யா

யா - அசைச்சொல் (உ-ம்: யாபன்னிருவர் மாணாக்கர கத்தியனார்க்கு), ஓரெழுத்து, ஓர் மரம், சந்தேகம், வினா
யாகபோசனர் - வானோர்
யாகம் - வேள்வி
யாக்கை - உடல், கட்டு, வினை முற்று
யாங்கு - இடத்தினை யுற்றசொல், எங்கு
யாங்ஙனம் - எங்ஙனம்
யாசகம் - இரப்பு
யாசகர் - இரப்போர்
யாசித்தல் - இரத்தல்
யாணர் - அழகு, தச்சர், நன்மை, புதுமை, வளமை
யாண்டு - எங்கு, காலம்
யாண்டை - இடத்தினை யுற்ற சொல், எவ்விடம்
யாதனம் - தெப்பம், மரக்கலம்
யாதனை - துன்பம், நரகத்திற் கொல்லாது வருத்துநோய்
யாது - இராக்கதர், எது, ஐயுற்ற சொல், கள்
யாதுதானர் - இராக்கதர்
யாதோ - ஐயச்சொல்
யாத்திரை - திருவிழா, பிரயாணம்
யாப்பு - கட்டு, செய்யுள்
யாமம் - இடக்கைமேளம், இராத்திரி, சாமம், தெற்கு
யாமவதி - இராத்திரி
யாமனை - காளி
யாமிகன் - நகரசோதகன்
யாமியம் - தெற்கு
யாமினி - இராத்திரி
யாமினியம் - தெற்கு
யாரி - கதவு
யார் - வினா
யாவும் - எல்லாம்
யாழ - முன்னிலையசைச்சொல் (உ-ம்: நீயே செய்வினை மருங்கிற் செல் வயர்ந்தி யாழநின்கை புனைவில்லினா ஞர்தியே)
யாழ் - அச்சுவினிநாள், திருவா திரைநாள், மிதுனவிராசி, வீணை
யாழ்வல்லோர் - கந்திருவர்
யாளி - சிங்கம், சிங்கவிராசி, யாளி
யாளியூர்தி - க்காளி, துர்க்கை
யாறு - ஆறு
யானம் - கள், சிவிகை, மரக்கலம்
யானை - ஆனை, வடதிசைப் பாலன்குறி

யானைச்சார்பு - யானை துயிலிடம்
யானை முகவற்கிளையோன் - வீரபத்திரன்
யானைமுகன் - விநாயகன்
யானையுண்குருகு - சக்கரவாகப்புள்
யானையுரித்தோன் - சிவன்

## யு

யுகந்தரம் - தேர் முதலியவற்றினுகத் திற்பிணிக்கு நெடுந்தறி
யுகமுடிவு - உலகமுடியுங்காலம்
யுகம் - இருபொருள், ஓர்காலத் தளவு, நுகத்தடி, பூமி
யுகளம் - இரண்டு
யுகளி - இரண்டு
யுகாதி - அருகன்
யுத்தம் - உசிதம், கூடல், நியாயம், போர்
யுக்தி - உபாயம், யோசித்தல்
யுவ - ஓராண்டு
யுவதி - பதினாறு வயதுப் பெண்
யுவராசன் - இளவரசன்

## யூ

யூகம் - ஓர்புல், கருங்குரங்கு, காந்தி, தருக்கம், படை, படை வகுப்பு, பெண்குரங்கு, முசு
யூகி - யூகியென்னேவல், விவேகி
யூகித்தல் - ஆராய்தல்
யூதநாதன் - யானைக்கூட்டத்துத் தலையானை
யூதபம் - யானைக்கூட்டத்துத் தலையானை
யூதம் - யானைக்கூட்டம், விலங்கின் கூட்டம்
யூபம் - உடற்குறை, யாகப் பசுவைக் கட்டுந்தறி, யாகம்

## யோ

யோகம் - அட்டயோக முதலிய யோகம், அதிட்டம், உபசாரம், உபாயம், உயர்ச்சி, உற்சாகம், கூடல், கூட்டம், சாவு, தியானம், பஞ்சாங்கத்திலொன்று
யோகர் - சமணமுனிவர், முனிவர்
யோகி - அரன், அருகன், ஐயனார், முனிவர்
யோகினி - காளி, யோகினி
யோக்கியம் - தகுதி, நன்கு
யோசனை - ஒலித்தல், ஓரெல்லை யளவு, யோசித்தல்
யோசனைகந்தி - வியாசர்தாய்
யோசித்தல் - ஆராய்தல்
யோனி - காரணம், பெண்குறி

## யௌ

யௌதகம் - மகட்கு மருமானுக் குந்தந்தபொருள்
யௌவனம் - அழகு, களிப்பு

## வ

வகிர் - வகிரென்னேவல், வழி, வார்
வகிர்தல் - அறுத்தல், கோதல், பங்குசெய்தல், போழ்தல்
வகுத்தல் - வகைப்படுத்தல்
வகுந்து - வழி, வினையெச்சம்
வகுப்பு - அழகு, வகுத்தல்
வகுலி - மீன்
வகுளம் - மகிழமரம்
வகுளி - ஒலி
வகை - கூறுபாடு, வகுப்பு
வக்கிரம் - கொடுமை, பொய், பொறாமை, மீளமடங்குதல், வட்டம், வளைவு

வக்கிரன் - செவ்வாய்
வக்கிராங்கம் - அன்னம்
வங்கணம் - சிநேகம்
வங்கம் - ஈயம், ஓர் தேசம், கத்தரிச் செடி, பதினெண் பாடையி லொன்று, மரக்கலம், வெள்ளி
வங்கர் - சண்டாளர்
வங்காரம் - உலோகக்கட்டி
வங்காளம் - ஓரிராகம், ஓர் தேசம்
வங்கி - துறடு
வங்கியம் - இசைக்குழல்
வங்கு - கற்புழை
வங்கூழ் - காற்று
வசதி - மருத நிலத்தூர், வீடு
வசந்தபயிரவி - ஓரிராகம்
வசந்தம் - இந்திரன் மாளிகை, இளவேனில், தென்றல்காற்று, வாசனை
வசந்தன் - தென்றற்காற்று, மன்மதன்
வசந்திகை - தேமல்
வசனம் - சொல்
வசனித்தல் - சொல்லல்
வசி - கூர்மை, சூலம், தழும்பு, வசியம், வசியென்னேவல், வாள்
வசிட்டன் - பிரமன், மானத புத்திரன்
வசித்தல் - தங்கல், வாசகம்
வசித்துவம் - அட்டபாக்கியத் தொன்று, வசமாக்கல்
வசியம் - கைவசம்
வசிவு - வளைவு
வசீகரணம் - புணர்ச்சிக் கிணக்கம், வசம்
வசீகரம் - வசம்
வசு - கிரணம், நெருப்பு, பசுவின் கன்று, பொருள், பொன்
வசுக்கள் - அட்டவசுக்கள்
வசுதேவன் - கண்ணன்றந்தை
வசுதை - பூமி
வசுநாள் - அவிட்டநாள்
வசுந்தரை - பூமி
வசுமதி - பூமி
வசை - இகழ்ச்சிச்சொல், குற்றம்
வச்சகம் - மலைமல்லிகை
வச்சி - காயாமரம்
வச்சிரகம் - தாமரைக்காய்
வச்சிரபாணி - இந்திரன்
வச்சிரம் - கதுரக்கள்ளி, வச்சிரா யுதம், வயிரமணி
வச்சிரவல்லி - பிரண்டை
வச்சிராங்கம் - சதுரக்கள்ளி
வச்சிராவர்த்தம் - இராமன்வில்
வச்சிரி - இந்திரன்
வச்சையம் - கலைமான்
வஞ்சகன் - தூர்த்தன், வஞ்சிப் போன்
வஞ்சப்பெண் - காளியேவல் செய்பவள்
வஞ்சம் - கொடுமை, சிறுமை, பொய், வாள்
வஞ்சவம் - பாம்பு
வஞ்சனம் - வஞ்சித்தல்
வஞ்சனி - இடாகினி, காளியேவல் செய்மகள், பெண்
வஞ்சனை - தெய்வப்பெண், வஞ்சம்
வஞ்சி - ஓர்கொடி, ஓர்பா, கரு வூர், தருமதேவதை, பகைவர் மேற்செல்லுஞ் சேவகர்க்கு மாலை, பெண், வஞ்சியென் னேவல்
வஞ்சித்தல் - வஞ்சனை செய்தல்
வஞ்சிவேந்தன் - சேரன்
வஞ்சுளம் - அசோகமரம்
வஞ்சுளன் - கரிக்குருவி
வடகம் - உல்லாசம், தோல்
வடகிரி - பொன்மலை
வடகீழ்த்திசைப்பாலன் - ஈசான்
வடக்கு - வடதிசை
வடதிசைப்பாலன் - குபேரன்
வடந்தை - வடகாற்று
வடமரம் - ஆலமரம்

வடமீன் - அருந்ததி
வடமேற்றிசைப்பாலன் - வாயு
வடம் - ஆலமரம், ஊர், கயிறு, நாணி, பூவரும்பு
வடவாமுகம் - ஊழித்தீ
வடவானலம் - வடவாமுகாக்கினி
வடவிருக்கம் - ஆலமரம்
வடவை - ஊழித்தீ, எருமை, பெண் குதிரை, பெண்யானை
வடி - கள், நாய், வடியென்னேவல்
வடிகயிறு - குதிரைக்கயிறு
வடிதல் - சிந்தல், நீளல், வடியல்
வடித்தல் - வடிக்குதல், வசமாக்கல்
வடியல் - வடிதல்
வடிவம் - உடலுருவம், வடிவு, வினைமுற்று
வடிவு - அல்குல், அழகு
வடு - இளங்காய், குற்றம், செம்பு, தழும்பு, மருதயாழ்த்திறம், வடுவென்னேவல், வண்டு
வடுகன் - வயிரவன்
வடுகன்றாய் - காடுகாள்
வடுத்தல் - இளங்காயரும்பல்
வடுகி - காடுகாள்
வடுகு - உபநயனம், ஓர்தேயம், ஓர்பாடை
வடுவரி - வண்டு
வட்கல் - கெடுதல், வியங்கோண் முற்று, வெட்கல்
வட்கார் - பகைவர்
வட்டணம் - பரிசை
வட்டணை - தாளம், வட்டம்
வட்டணையுறுத்தல் - தாளம் போடல்
வட்டம் - குளம், கேடகம், கைமணி, கொள்கலம், சக்கரம், சீலை, தாழ்வு, திரிகை, நீர்ச்சால், பரிவேடம், பீடம், பொற்காசு முதலியவற்றின் வட்டம், வளைதடி
வட்டி - பலகறை, முதற்பொருட்கு வருமூதியம், வட்டியென்னேவல்
வட்டிகை - கூடை, கைமணி, சித்திரம், நால்வகைச் சாந்து
வட்டித்தல் - ஆணையிடல், ஊணிடுதல், தாளம்போடல்
வட்டில் - கூடை, புட்டில், வட்டில், வழி
வட்டு - சூதாடு கருவி, திரட்சி
வட்டுடை - சீலை
வட்டை - வழி
வட்புலி - சிங்கம்
வணக்கம் - தொழுதல், வினை முற்று
வணக்கல் - வளைத்தல், வியங் கோண்முற்று
வணங்காமுடியினன் - துரியோதனன்
வணர் - வளைவு
வணிகம் - செட்டு
வணிகன் - கொள்ளல் விற்றல் செய்வோன், வைசியன்
வணிச்சியம் - வாணிச்சியம்
வண்களமர் - சூத்திரர், வேளாளர்
வண்சிறை - மதில்
வண்டர் - கவிகள் கற்றோர், மங்கலப் பாடகர்
வண்டல் - மகளிர் விளையாட்டு, வண்டல்
வண்டன் - திண்ணியன்
வண்டானம் - நாரை
வண்டு - அம்பு, குற்றம், கைவளை, சங்கு, பூசநாள், வண்டு
வண்டுணாமலர்மரம் - சண்பக மரம், வேங்கை மரம்
வண்டுறை - எழுத்திலாவோசை
வண்ணகம் - முடுகியல்
வண்ணமகள் - கோலஞ்செய்வாள்
வண்ணம் - அழகு, இராகம், குணம், சந்தம், சாந்துப்பொது, நன்மை, நிறம், வடிவு

வண்ணார் - ஏகாலியர்
வண்மை - அழகு, ஈகை, குணம், புகழ், மெய்மை, வளமை
வதனம் - முகம்
வதன் - கொலை செய்வோன்
வதானியன் - குபேரன், வரையாது கொடுப்போன்
வதி - சேறு, வதியென்னேவல், வழி
வதிதல் - தங்கல்
வதிரன் - செவிடன்
வதுவர் - குதிரைப்பாகர், யானைப் பாகர்
வதுவை - புதுமணம், வாசனை
வதை - கொலை, வதையென் னேவல்
வதைத்தல் - கொல்லல்
வத்தி - விளக்குவர்த்தி
வத்திரம் - சீலை, முகம்
வத்து - பொருள்
வந்தனமாலை - வாயிலிற்கட்டுந் தோரணம்
வந்தனம் - அட்டாங்கமாகப் பணிதல், விநயம், வினைமுற்று
வந்தனை - ஆராதனை, வணக்கம், வினைமுற்று
வந்தி - மலரடி, வந்தியென்னேவல்
வந்திகள் - கவிஞர், புகழ்வோர், மங்கலப்பாடகர்
வந்தித்தல் - வணங்கல்
வந்தித்துநிற்போர் - புகழ்ந்து பாடுவோர்
வந்தியர் - புகழ்வோர், மங்கலப் பாடகர்
வந்தியை - மலடி, வினைமுற்று
வந்து - காற்று, வினைமுற்று, வினையெச்சம்
வந்தை - பெருமை, மலடி, வினை முற்று
வபனம் - மழிப்பு
வபு - உடல்
வபை - வயிற்றினாபிக்குள் வெண்டுகில் போன்ற புரை யாகியநிணம்
வமனம் - சத்திபண்ணல்
வம்பலர் - அயலோர், புதியோர்
வம்பல் - திசை
வம்பி - வசவி
வம்பு - கச்சு, நிலையின்மை, புதுமை, மிடர், வாசனை
வயங்கல் - ஒளிசெய்தல், நடத்தல், வியங்கோள்முற்று
வயது - யௌவனம், வயசு
வயந்தம் - வசந்தம்
வயப்புலி - சிங்கம்
வயப்போத்து - சிங்கம்
வயமா - சிங்கம், புலி, யானை
வயம் - குதிரை, நீர், பறவை, வசம், வலி
வயல் - கழனி, மருதநிலம், வெளி
வயவரி - புரி
வயவர் - படைவீரர்
வயவன் - கரிக்குருவி, காதலன், திண்ணியன், வலியன்
வயவு - ஆசை
வயவை - வழி
வயாவு - ஆசை, கருப்பம், வருத்தம்
வயானம் - பறவை
வயானன் - வலியன்
வயிரப்படை - வச்சிராயுதம்
வயிரம் - கூர்மை, சலஞ்சாதித்தல், சினம், தண்டாயுதம், திரு வோணம், பூணாகக்கட்டுவது, மரவயிரம், வத்திரம், வச்சிரா யுதம்
வயிரியம் - மயிர்ச்சீலை
வயிரியர் - கூத்தர், பாணர்
வயிர் - ஊதுகொம்பு
வயிறு - வயிறு
வயினம் - பறவை
வயின் - இடம், ஏழனுருபு (உ-ம்: அவர் வயிற்செல்வாய்), வயிறு, வீடு
வரகு - ஓர்பயிர்

வரதம் - வரங்கொடுத்தல்
வரதன் - அரன், அரி, அருகன்
வரநதி - கங்கை
வரப்பு - எல்லை
வரப்புள் - வயல்
வரம் - அனுக்கிரகம், நவநிதி யிலொன்று, மேன்மை
வரம்பு - எல்லை, வழி
வரர் - மேலோர், வானோர்
வரல் - வருதல், வியங்கோண் முற்று
வரவு - வருகை
வரன் - சிவன், தமயன், பிரமன், புருடன்
வரன்முறை - ஊழ், வரலாறு
வரன்றல் - கொழித்தல், வியங் கோண்முற்று
வராகம் - அட்டாதச புராணத் தொன்று, பன்றி
வராகன் - திருமால்
வராகி - சத்தமாதர்களிலொருத்தி
வராங்கம் - தலை
வராடகம் - தாமரைக்காய், பல கறை
வராடம் - தாமரைக்காய், பல கறை
வராடி - பலகறை, முதுகு நூற் சீலை
வரால் - ஓர்வகை மீன், வினை முற்று
வராளம் - பாம்பு
வராளி - ஓரிசை
வரி - இசைப்பாட்டு, எழுத்து, குடியிறை, தேமல், நீளம், நெல், வண்டு, வரியென்னேவல், வழி, விரலிறை
வரிக்கடை - வண்டு
வரிசந்தி - நாற்றெருக் கூடுமிடம்
வரிசை - ஒழுங்கு, முறைமை, வெகுமானம்
வரிதல் - எழுதல், கட்டல், சித்திர மெழுதல்
வரித்தல் - கட்டல், பூசுதல்
வரிப்புறம் - அணில்
வருக்கம் - கூட்டம், வகுப்பு
வருக்கை - பலாமரம்
வருச்சித்தல் - நீக்கல்
வருடம் - ஆண்டு, பாரதவருட முதலிய, மழை, வினைமுற்று
வருடல் - தடவல், வியங்கோண் முற்று
வருடை - எண்காற்புள், குறும் பாடு, மேடவிராசி, வரையாடு, வினைமுற்று
வருட்டம் - வினைமுற்று, வேம்பு
வருட்டல் - வற்புறுத்தல், வியங் கோண்முற்று
வருணம் - எழுத்து, குலம், நிறம், நீர்
வருணனாள் - சதயநாள்
வருணனை - தோத்திரம்
வருணன் - புனற்கரசன்
வருதல் - நடத்தல், வரல்
வருத்தம் - உள்ளக்களிப்பு, துன்பம், வினைமுற்று
வருத்தல் - துன்புறுத்தல், வியங் கோண்முற்று
வருபுனல் - ஆறு
வரூதம் - தேரைப்பாதுகாக்கும் புலித்தோன் முதலிய
வரூதினி - ஓர்தெய்வப் பெண், படை
வரேந்திரன் - வரத்தின்மிக்கவன்
வரை - அளவு, கரை, சிறுவரம்பு, மலை, மூங்கில், வரையென் னேவல், விரலிறை
வரைச்சிறகரிந்தோன் - இந்திரன்
வரைதல் - எழுதல், கொள்ளல், சித்திரமெழுதல், நீக்கல், மாற்றல், விவாகம்
வரைபகவெறிந்தோன் - குமரன்
வரைப்பு - எல்லை, மதில்
வரையறுத்தல் - மதித்தல், வளைத்தல்

வரையறை - அளவு
வரையாடு - குறும்பாடு
வரையுறுத்தல் - வளைத்தல்
வரைவின்மாது - வேசி
வரைவு - அளவு, எல்லை, பிரிவு, மாறுபாடு
வர்க்கம் - வருக்கம்
வர்க்கு - கஞ்சி
வர்த்தமானம் - நிகழ்காலம்
வர்த்தி - இரத்தினங்களின் கீழ்ப் பதிக்குந்தகடு, திரிச்சீலை, பரிமளத் திரவியங்களை கூட்டியரைத்துச் செய்த வத்தி, வர்த்தியென்னேவல்
வர்த்தித்தல் - வளர்தல்
வர்த்துலம் - வட்ட வடிவு
வலக்காரம் - பொய்
வலத்தல் - சொல்லல், நிணத்தல், வளைத்தல்
வலத்திடல் - சொல்லல்
வலந்தம் - வசனம், வளைவு
வலம் - இடம், ஏழனுருபு (உ-ம்: காழ்வரை நில்லாக்களிறன் னான் கைவலத்தியாழ்வரை நின்றது), மேல், வலப்பக்கம், வலி, வெற்றி
வலம்புரி - நந்தியாவர்த்தம், வலம்புரி, வலம்புரிச் சங்கு
வலயம் - கடல், குளம், கைக் கடகம், சுற்று, வட்டம்
வலவன் - சமர்த்தன், தேர்ப்பாகன், வெற்றியாளன்
வலவை - இடாகினி, காளி, காளியேவற்பெண், வல்லவள், வல்லோன்
வலன் - வலம்
வலாகம் - கொக்கு
வலாரி - இந்திரன்
வலி - பற்றிரும்பு, வலியென் னேவல், வல்லமை
வலிதல் - தங்கல், துணிதல்
வலித்தல் - உடன்படல், நிணத்தல்
வலிமுகம் - குரங்கு
வலியன் - கரிக்குருவி
வலியான் - கரிக்குருவி
வலியுறுத்தல் - உறுதிசெய்தல், வலி தருதல், வியங்கோண்முற்று
வலீமுகம் - குரங்கு
வலு - கொசுகு
வலை - மீன்வலை முதலாயின
வலைப்படல் - சிறைப்படல், வியங்கோண்முற்று
வலையர் - நெய்தனிலமாக்கள்
வல் - சீக்கிரம், சூதாடு கருவி, மேடு, வலி
வல்கிதம் - குதிரையிருகாற்றூக்கி யாடிவரு நடை
வல்சி - உண்டல், சோறு
வல்லகி - வீணை
வல்லணங்கு - காளி
வல்லபன் - நாயகன், பிரிய முள்ளோன்
வல்லபை - ஓரசுரமாது, பிரிய நாயகி
வல்லரி - கொடி, தளிர், பூங் கொத்து
வல்லவன்- இடையன், பருப்புக் கறிகள் சமைப்போன், புருடன், வல்லான்
வல்லவி - மனைவி
வல்லாரை - ஓர்பூடு, கேட்டை நாள்
வல்லார் - சமர்த்தர், மாட்டாதார்
வல்லாளன் - திண்ணியன், வல்லான்
வல்லி - அளவு, இடைச்சேரி, கால் விலங்கு, நீங்கல், படர்கொடி, பிரிதல்
வல்லிகம் - கொடி
வல்லிகை - காதணி, யாழ்
வல்லிசை - உச்சவிசை, பாம்பு
வல்லியம் - இடையரூர், கொல்லி மலை
வல்லுநர் - வல்லோர்

வல்லுளி - பன்றி
வல்லூகம் - ஆண்குரங்கு, கரடி, முசு
வல்லூரம் - வள்ளூரம்
வல்லெனல் - அநுகரண வோசை
வல்லை - ஓர்நோய், கடுப்பு, கால விரைவு, கோட்டை, பெருங்க ாடு, மேடு, வட்டம்
வல்விலங்கு - யானை
வவ்வல் - வாருதல்
வழக்கம் - வழங்குதல்
வழங்கல் - ஈதல், உலாவல், சொல்லல், நடத்தல், வியங் கோண்முற்று
வழலை - ஓர் பாம்பு, கோழை
வழாறு - நிறைபுனல்
வழி - இடம், ஏழனுருபு (உ-ம்: நின்றதோர் நறைவேங்கை நிழல் வழியசைந்தனன்), காரணம், திரட்சி, நடவை, பின், மகன், முறைமை, வழியென்னேவல்
வழிதல் - ஒழுகல்
வழித்தல் - வழிக்குதல்
வழித்தோன்றல் - மகன்
வழிநாள் - பின்னைநாள்
வழிபடல் - வணங்கல்
வழிபயத்தல் - மறுப்பறுத்தல்
வழிபாடு - ஆராதனை, வழிபடல்
வழியடைத்தல் - புறம்புறுத்தல்
வழியுரைப்போர் - தூதர்
வழு - ஈனம், கேடு, வழுவென் னேவல்
வழுக்கல் - அடித்தல், இழுக்கல், மோதல், வியங்கோண்முற்று
வழுக்கு - நிணம், மறதி, வழுக் கென்னேவல்
வழுதலை - கத்தரிச்செடி, புனத்திடு பொய்க்கழு
வழுதி - பாண்டியன்
வழுது - பொய், வைக்கோல்
வழுதுணை - கத்தரிச்செடி
வழுத்தல் - துதித்தல், வியங்கோண் முற்று, வினைமுற்று
வழுவை - யானை, வினைமுற்று
வழை - சுரப்புன்னை மரம், வினைமுற்று
வளப்பம் - கொழுப்பு, மாட்சிமை
வளமை - உபகாரம், கொழுப்பு, மாட்சிமை
வளமையர் - பூவைசியர்
வளம் - அழகு, பலபண்டம், மாட்சிமை, வலி
வளர்ச்சி - வளர்தல்
வளர்தல் - உயர்தல்
வளர்த்தாள் - செவிலித்தாய்
வளர்மயிர் - மயிர்க்குழற்சி
வளவன் - சோழன்
வளவி - வீட்டிறப்பு
வளாகம் - இடம், சூழ்ந்திடல், தினைப்புனம்
வளார் - இளங்கொம்பு
வளாவல் - கலத்தல், வளைத்தல், வளைவு, வியங்கோண்முற்று
வளி - காற்று, சூறைக்காற்று
வளை - கங்கணம், கைவளை, சக்கரம், சங்கு, நுழைவளை, வளையென்னேவல்
வளைத்தல் - கட்டல், தடுத்தல், வளைத்தல், வாருதல்
வளைபோழ்நர் - சங்கறுப்போர்
வளைமணி - அக்குமணி, சங்கு மணி
வளையகம் - சங்கு
வளையம் - குளம், தாமரையுட் சுருள், வட்டம்
வளைவு - வளைதல்
வள் - காது, கூர்மை, நெருக்கம், வழி, வளம், வார், வாளுறை, வாள்
வள்ளம் - ஒரு மரத்திற்றோண்டிய சிறுதோணி, மரக்கால், வட்டில்
வள்ளல் - வரையாது கொடுப் போன்

வள்ளி - ஆபரணம், ஓர்கூத்து, கை வளை, படர்கொடி, பிரப்பங் கேடகம்
வள்ளி மணாளன் - முருகன்
வள்ளியம் - ஊதுகுழல், மரக்கலம், மிளகு, மெழுகு
வள்ளியோர் - வரையாது கொடுப் போர்
வள்ளுவன் - ஓர் சாதியோன், புரோகிதன், வருங்காரியஞ் சொல்வோன்
வள்ளூரம் - ஆட்டிறைச்சி, ஆவினிறைச்சி, சூட்டிறைச்சி, புலால்
வள்ளை - ஓர்கொடி, உலக்கை யோச்சித் தந் தலைவன் வளங் கூறி மகளிர் பாடுவது
வறத்தல் - காய்தல்
வறிஞர் - தரித்திரர்
வறிது - அறியாமை, சிறுமை, பயனின்மை
வறியோன் - தரித்திரன்
வறுத்தல் - வறட்டல்
வறுமை - தரித்திரம்
வறை - துவட்டற்கறி, வினை முற்று
வறையல் - துவட்டற்கறி, பிண்ணாக்கு
வற்கம் - குதிரைக்கயிறு
வற்கறி - கரகம்
வற்கலை - மரவுரிச்சீலை
வற்காலி - வெள்ளாடு
வற்சதரம் - ஈனாவிளங்கன்று
வற்சம் - எருமை பசுவிவற்றின் கன்று, ஓர்தேயம், மார்பு
வற்சரம் - வருடம்
வற்சலம் - கன்றுத்தாய்ப்பசு, தயை
வற்சை - குழந்தை, மலட்டுப்பசு
வற்பு - உறுதி
வற்புறுத்தல் - உறுதிப்படுத்தல்
வற்றல் - வறுத்தல், வியங்கோண் முற்று

வனசம் - தாமரை
வனசரம் - வனத்திற் பிறந்த யானை
வனசார் - வேடர்
வனச்சார்பு - முல்லைநிலம்
வனப்பு - அழகு
வனமாலி - திருமால்
வனம் - அழகு, ஊர்சூழ்ந்த சோலை, காடு, சுடுகாடு, துளசி, நீர், வழி
வனாந்தரம் - மக்கள் வழங்காத விடம்
வனிதை - பெண்
வனைதல் - அலங்கரித்தல், செய்தல்
வன்கட்பேதையர் - பாலைநிலப் பெண்கள்
வன்பால் - குறிஞ்சிநிலம், பாலை நிலம், மேடு
வன்பு - வன்மை
வன்மரம் - அகக்காழ்
வன்மீகம் - புற்று
வன்மீன் - முதலை
வன்மை - கருத்து, வலி
வன்னி - ஓர்மரம், கிள்ளை, தீ, பிரமசாரி

## வா

வாகனம் - ஏறிநடத்தப்பட்டவை, சீலை
வாகினி - படை, படையிலோர் தொகை
வாகு - அழகு, தோள்
வாகுசன் - அரசன்
வாகுலேயன் - முருகன்
வாகுவலயம் - தோளணி
வாகை - அறத்தின்றுறை, ஈகை, ஒழுக்கம், ஓர்மரம், தவம், மிகுதி, வெற்றி, வெற்றிமாலை
வாக்காள் - சரச்சுவதி

வாக்கியம் - வினைமுதல் செயப் படுபொருள் பயனிலையோடு முடிந்தசொல்
வாக்கு - ஐம்பொறியிலொன்று, சொல், வாக்கென்னேவல்
வாக்குதல் - வார்த்தல்
வாங்கல் - அழைத்தல், கொள்ளல், வளைத்தல், வளைவு, வியங் கோண்முற்று
வாசகம் - வசனம்
வாசந்தி - குருக்கத்திமரம்
வாசபேயம் - ஓர்வேள்வி
வாசம் - அம்பு இருப்பிடம், இறகு ஊர், சீலை, மருதநிலத்தூர், வாசனை, வேகம்
வாசரம் - நாள்
வாசவன் - இந்திரன்
வாசனி - மேற்கட்டி
வாசனை - மணம்
வாசாலன் - மிகப்பேசுவோன்
வாசி - அச்சுவினிநாள், இசைப் பாட்டு, குதிரை, பறவை, பாணம், மிகுதி, வாசியென் னேவல்
வாசிகம் - சொல்லியனுப்பின காரியம்
வாசிகை - கோத்தமாலை, தொடுத்தமாலை, மாலை
வாசிட்டம் - அட்டாதச தரும நூலிலொன்று, அட்டாதசவுப் புராணத்தொன்று
வாசித்தல் - படித்தல்
வாசுகி - அட்டநாகத்தொன்று
வாசுதேவன் - விட்டுணு
வாசை - ஆடாதோடை
வாச்சியம் - பறை
வாச்சியாயன் - களாநூற்செய்த முனி
வாஞ்சை - ஆசை
வாடல் - சாதல், மெலிதல், வியங் கோண்முற்று
வாடை - இடைச்சேரி, இடையர் வீதி, தெரு, வடகாற்று, வினை முற்று, வேடர்வீதி
வாட்டம் - தெரு, தோட்டம், வழி, வாடல், வினைமுற்று
வாட்டல் - மெலிவித்தல், வியங் கோண்முற்று
வாட்படையாள் - துர்க்கை
வாணன் - ஓரரசன், கார்த்திகை நாள், தஞ்சாக்கூர்வாணன்
வாணி - கூத்து, சரச்சுவதி, சொல், சொல்லல்
வாணிகம் - வியாபாரம்
வாணிகன் - செட்டி, துலாராசி
வாணிகேள்வன் - பிரமன்
வாணிச்சியம் - கொள்ளல்விற்றல் செய்யும் வணிகச்செயல்
வாணிதம் - கள்
வாணிநி - கூத்தி, மதத்தவள்
வாணிபர் - செட்டிகள்
வாணீசன் - பிரமன்
வாதசாரதி - அக்கினி
வாதபோதம் - பலாசு
வாதப்பிரமி - காற்றுக்கெதிர் செலும் விலங்கு
வாதம் - காற்று, தருக்கம், முப்பிணியிலொன்று
வாதனம் - சீலை
வாதாயனம் - பலகணி
வாதி - நாற்கவியிலொருவன், வாதஞ்செய்வோன், வாதி யென்னேவல்
வாது - தருக்கம்
வாதுவர் - குதிரைப்பாகர், யானைப்பாகர்
வாதை - துன்பம், நோய்
வாத்தியம் - கஞ்சக்கருவி, துளைக் கருவி, தோற்கருவி, நரம்புக் கருவி இந்நான்கும்
வாந்தி - சத்தி பண்ணல்
வாமதேவன் - சிவன்

வாமம் - அழகு, இடதுபக்கம் ஒளி, குறுமை, சிவனைம்முகத் தொன்று, தொடை
வாமலூரு - புற்று
வாமலூருதனயன் - வான்மீகி
வாமலோசனை - அழகிய விழி யுடையாள்
வாமனம் - அட்டாதச புராணத் தொன்று, குறள், தென்றிசை யானை
வாமனன் - குள்ளன், திருமால வதாரத்தொன்று
வாமன் - அருகன்
வாயசம் - காக்கை
வாயசாரதி - கூகை
வாயம் - நீர்
வாயிலாளர் - வாயில்காப்போர்
வாயிலோர் - தமிழ்க்கூத்தர், வாயில் காப்போர்
வாயில் - ஐம்பொறி, கடை, காரணம், தூது, வாயில்
வாயு - காற்று
வாயுமைந்தன் - அனுமான், வீமன்
வாயுவிளங்கம் - ஓர்மருந்து
வாய் - இடம், உதடு, ஏழனுருபு (உ-ம்: குரைகடல் வாயமு தென்கோ), மெய், வாக்கு, வாயில், வாயென்னேவல், வாய்மை
வாய்க்கால் - நீரோடுங்கால், மகநாள்
வாய்தல் - வாயில்
வாய்த்தல் - கிடைத்தல், பொருந்தல், மாட்சிமை
வாய்ப்பு - வளமை
வாய்ப்புள் - நிமித்தம்
வாய்மை - சொல், மெய், வலி
வாய்வட்டம் - குதிரைக்கயிறு
வாரணம் - கடல், கவசம், கேடகம், கோழி, சங்கு, சட்டை, தடுத்தல், யானை, விடுதல்
வாரணாசி - காசி
வாரணை - தடுத்தல்
வாரணையம் - தடுத்தல்
வாரம் - அன்பு, உரிமை, எழு கிழமை, கடல், கரை, சிறு வரம்பு, திரை, பக்கபாதம், பங்கு, மலைச்சாரல்
வாரல் - அள்ளுதல், கொள்ளை யிடல், வியங்கோண்முற்று
வாரவாணம் - கவசம், பஞ்சு பெய்து தைத்தமெய்ப்பை
வாரவாரம் - கவசம்
வாராகி - சத்தமாதர்களிலொருத்தி, பெண்பன்றி
வாராணசி - காசி
வாரி - இசைக்குழல், கடல், கதவு, நிறைபுனல், நீர், மதில், மதிற் சுற்று, யானை நிற்குங் கூடம், யானை படுக்குங்குழி, வழி, வாயில், வாரியென்னெச்சம், வெள்ளம்
வாரிசம் - தாமரை
வாரிதம் - மேகம்
வாரிதி - கடல்
வாரித்தல் - ஆணையிடல், தடுத்தல்
வாரிவாகம் - மேகம்
வாருகோல் - துடைப்பம்
வாருணம் - அட்டாதசவுப புராணத்தொன்று, கடல், மேற்கு
வாருணி - அகத்தியமுனி, கள், சதயநாள், மேற்கு
வாருண்டகம் - எண்காற்புள்
வாருண்டம் - எண்காற்புள்
வாருதல் - கொள்ளல், திருடல்
வாரை - மரவுத்திரம், வினைமுற்று
வார் - கச்சு, நீர், நீளம், நேர்மை, வாரென்னேவல்
வார்தல் - உயர்ச்சி, தெரிதல், நீளல், வாருதல்
வார்த்தகம் - கிழத்தன்மை, கிழவர் குழு

வார்த்தல் - வார்க்குதல்
வார்த்தாகம் - கத்தரிக்காய், கத்தரிச்செடி
வார்த்தாகி - சிறுவழுதலை
வார்த்தாவகன் - ஓலைச்செய்திகள் கொடுபோகுவோன்
வார்த்தை - வசனம், வினைமுற்று
வார்த்தைத்தொழிலோர் - பூவைசியர்
வார்ப்பு - வார்த்தல்
வாலகம் - வால்
வாலதி - யானைவால், வால்
வாலம் - தலைமயிர், வால்
வாலவாயசம் - வைடூரியம்
வாலாமை - அசுத்தம், மகளிர் சூதகம்
வாலி - இந்திரன் மகனாகிய வானரன்
வாலுகம் - வெண்மணல்
வாலுங்கி - ஓர் மருந்து, கக்கரி
வாலுவர் - மடையர்
வாலேபம் - கழுதை
வால் - சுத்தம், மிகுதி, வால், வெண்மை
வாவல் - தாண்டல், வியங்கோண் முற்று, வௌவால்
வாவி - குளம், வினையெச்சம்
வாவுதல் - கடத்தல்
வாவெனல் - அழைத்தல்
வாழி - இடைச்சொல்
வாழிய - முன்னிலையசைச்சொல் (உ-ம்: காணியவாழியமலைச் சாரல்), வியங்கோண்முற்று
வாழை - வாழைமரம், வினை முற்று
வாழ்க்கை - ஊர், செல்வம், மருத நிலத்தார், மனைவி
வாழ்க்கைத்துணை - இல்லாள்
வாழ்தல் - வாழ்வு
வாழ்த்தல் - துதித்தல், வியங் கோண்முற்று
வாழ்வு - முறைமை, வாழ்தல்

வாளாமை - கேளாமை, மௌனம்
வாளி - அம்பு, ஓர் காதணி, வட்டமாயோடல்
வாளுழவர் - படைவீரர்
வாளை - ஓர்மீன்
வாள் - ஒளி, கத்தி
வாள்கைக்கொண்டாள் - துர்க்கை
வானதி - கங்கை
வானபத்தி - பூவாதுகாய்க்கு மரம்
வானப்பிரத்தன் - காட்டிற்றவஞ் செய்வோன்
வானப்பிரத்தி - பூவாதுகாய்க்கு மரம்
வானம் - ஆகாயம், உலந்தமரம், மழை
வானரக்கொடியோன் - அருச்சுனன்
வானரம் - குரங்கு
வானவரம்பன் - சேரன்
வானவருறையுள் - தேவர்கோயில்
வானவர்முதுவன் - சேரன்
வானவன் - சேரன், பிரமன்
வானவில் - இந்திரன்வில்
வானி - கூடாரம், படை, மேற் கட்டி, விருதுக்கொடி
வானீரம் - நீர்வஞ்சி
வானுலகம் - தேவலோகம்
வானேறு - இடி
வானோர் - தேவர்கள்
வானோர்கோமான் - இந்திரன்
வானோர்மாற்றலர் - அசுரர், இராக்கதர்
வானோர்முதுவன் - பிரமன்
வான் - ஆகாயம், எதிர்கால விடைச்சொல் (உ-ம்: கொல் வான் கொடித்தானை கொண் டெழுந்தான்), பெருமை, மழை, மேகம்
வான்மிகம் - இந்திரவில்
வான்மீகி - ஒரு முனி
வான்மீன் - தாராகணம்

## வி

விகங்கம் - அன்னம், பறவை
விகசம் - மலர்ந்தது
விகசிதம் - மலர்தல்
விகடம் - வேறுபாடு
விகர்த்தனன் - சூரியன்
விகலம் - குறைபாடு
விகலை - காலநுட்பம், நாழிகை
விகற்பம் - வேற்றுமை
விகற்பித்தல் - வேறுபடுதல்
விகாதம் - விரோதம்
விகாரம் - காமக்கவலை, தன் மயம், வேற்றுமை
விகாரி - ஓராண்டு
விகிரம் - இறைத்தல், பறவை
விகிர்தம் - பொய், வேறுபாடு
விகிர்தி - ஓராண்டு, விகுதி
விகுணி - கள்
விகுதி - பகுபதவுறுப்பினு ளொன்று, வேறுபடுத்தல்
விக்கல் - விக்குதல், வியங்கோண் முற்று
விக்கியாதன் - பிரசித்தன்
விக்கிரகம் - உடல்
விக்கிரமம் - பராக்கிரமம், மிகு பலம், முறை, பிழைத்தல்
விக்கிரமார்க்கன் - ஓரரசன்
விக்கிரயம் - விற்றல்
விக்கினம் - இடையூறு, திமை, வினைமுற்று
விக்கினேச்சுவரன் - விநாயகன்
விசதம் - நிருமலம், வெண்மை
விசயச்சந்தம் - எழுநூறுகோவை முத்துத்தாழ்வடம்
விசயநகரம் - ஓர் பட்டணம்
விசயம் - சருக்கரை, சூரிய மண்ட லம், வெற்றி
விசயன் - அருச்சுனன், கலி சகாந்தன், திருமால் வாயில் காப்போன்
விசயார்த்தம் - கைலைமலை
விசயை - துர்க்கை
விசரம் - கூட்டம், கொலை
விசர்க்கம் - விடல்
விசளை - சட்டி
விசனம் - துன்பம், பேராசை, மனிதரில்லாதவிடம், விசிறி
விசாகன் - குமரன்
விசாரதர் - புலவர்
விசாரம் - ஆலோசனை, எண்ணல், கிலேசப்படல்
விசாரிதம் - ஆலோசிக்கப்பட்டது
விசாலம் - கடம்பு, விரிவு
விசாலை - சத்தபுரியிலொன்று
விசிகம் - அம்பு, புனற்றிரை
விசிகை - கச்சு, கருத்து, தெரு
விசிதம் - விபூதி
விசித்தல் - கட்டல்
விசித்திரம் - அதிசயம், பேரழகு
விசித்திரவேளாகொல்லி - கொல்லித்திறத்தினொன்று
விசிறி - சிற்றாலவட்டம்
விசும்பு - ஆகாயம், திசை, தேவ லோகம், மேகம்
விசுவகருமன் - தேவதச்சன்
விசுவசித்து - ஓர் வேள்வி
விசுவதேவர் - பதின்மூன்று, தேவ கணம்
விசுவநாதன் - சிவன்
விசுவநாள் - உத்திராடநாள்
விசுவம் - உலகம்
விசுவம்பரன் - திருமால்
விசுவம்பரை - பூமி
விசுவாசம் - நம்புதல்
விசுவாமித்திரன் - ஓரிருடி
விசுவாவசன் - ஓர்க்கந்திருவன்
விசுவாவசு - ஓராண்டு
விசுவான்மா - பிரமன்
விசுளி - கள்
விசை - சீக்கிரம், விசையென் னேவல்
விசைத்தல் - வேகமுறல்

விச்சாதரர் - வித்தியாதரர்
விச்சின்னம் - வேறாக்கப்பட்டது
விச்சுவர் - தேவரிலோர் பிரிவு
விச்சை - தெரு, வித்தை
விஞ்சை - கல்வி
விஞ்சையரூர் - நாகலோகம்
விஞ்சையர் - வித்தியாதரர்
விடக்கு - ஊன்
விடங்கம் - அழகு, ஆண்மை, கொடுங்கை, சுவர்ப்புறத்து நீண்டவுத்திரம், புறவுகட்குத் தூண்கண் மேற்செய்த கூட்டின் வரிசை, முகடு, வீதியிற் கட்டியகொடி
விடங்கர் - சிறுவழி
விடசூசகம் - சகோரப்புள்
விடதரம் - பாம்பு, மேகம்
விடதரன் - சிவன்
விடந்தை - ஓரூர்
விடபம் - எருது, சிவனூர்தியுங் கொடியும், சிறுதூறு, மரக் கொம்பு
விடபி - மரப்பொது
விடப்பு - கமர்
விடம் - நஞ்சு, வினைமுற்று
விடம்பு - கமர்
விடயம் - காணப்பட்டது, காரணம்
விடருகம் - பூனை
விடர் - கமர், காடு, தூர்த்தர், மலைப் பிளப்பு
விடலை - ஆண்மகன், திண்ணியன், பாலைநிலத் தலைவன்
விடல் - குற்றம், சாதல், விடுதல், வியங்கோண்முற்று
விடவிடெனல் - நடுக்கக் குறிப்பு
விடவு - கமர்
விடன் - தூர்த்தன், வினைமுற்று
விடாணம் - கொம்பு, விலங்கின் கொம்பு
விடி - திரைச்சிலை, விடியென்னேவல்
விடிதல் - உபயமாதல்
விடியல் - விடியற்காலம், வியங்கோண்முற்று
விடுதல் - எறிதல், நீக்கல்
விடுத்தல் - அனுப்பல், தங்கல், நடத்தல், வியோகம்
விடுந்தலைப்பு - முன்றானை
விடுவாய்ச்செய்தல் - அறுத்தல்
விடேலெனல் - அனுகரணவோசை
விடை - இடபவிராசி, எதிர்மொழி, எருது, விடுதல், வினைமுற்று
விடைதல் - கோபம், சினம்
விடைத்தல் - சினக்குறிப்பு, பெருங் கோபம்
விடையோன் - சிவன்
விட்டம் - உத்திரம், வினைமுற்று
விட்டரம் - கொள்கலம், தவத்தோர் பீடம்
விட்டவர் - பகைவர்
விட்டில் - பிராயமரம், விட்டிற் பறவை
விட்டுணு - திருமால்
விட்டேறரணம் - வேல்
விட்டேறு - வேல்
விட்டை - மலம், வினைமுற்று
விணிகை - கச்சு
விண் - ஆகாயம், இளமை, மேகம்
விண்டலம் - ஆகாயம்
விண்டல் - மூங்கில்
விண்டு - அட்டாதசதரும நூலிலொன்று, காற்று, திருமால், மலை, மூங்கில், மேகம், வினையெச்சம்
விண்டுநதி - ஆகாய கங்கை
விண்டுபதம் - ஆகாயம்
விண்ணவன் - அருகன், தேவன்
விண்ணுலகம் - தேவலோகம்
விண்ணேறு - இடி
விண்ணோர் - தேவர்
விண்மணி - சூரியன்

விண்மீன் - நட்சத்திரம்
விண்முழுதாளி - இந்திரன்
விதம் - புட்பொது, விதம்
விதத்தல் - மிகப்படல்
விதப்பு - சீக்கிரம், மதிலுறுப்பு, மிகுதி
விதரணம் - ஈகை
விதர்ப்பம் - ஓர் தேயம்
விதர்ப்பு - அச்சம், நெருக்கம், போர், வெற்றி
விதலை - நடுக்கம்
விதவை - கைம்பெண், வினை முற்று
விதனம் - வேதனை
விதாதா - முருகன், பிரமன்
விதாரணம் - பிளத்தல்
விதானம் - உபாயம், கூட்டம், மேற்கட்டி, விதம்
விதி - உண்மை, ஊழ், குணம், செய் தொழில், செல்வம், நியமித்தல், பிரமன், மெய், விதியென் னேவல், வேதாகம விதி
விதிக்கு - கோணத்திசை
விகிதம் - தெரியப்பட்டது
விதித்தல் - உண்டாக்கல், செய்தல், சொல்லல்
விதித்தோன் - கடவுள்
விதிப்பாள் - மகள்
விதியர் - கணக்கர், தந்திரிகள், மந்திரிகள்
விதியுளி - ஓமம், தூதர், விவாகம்
விதியை - இரண்டாந்திதி, வினை முற்று
விதிர்ப்பு - அச்சம், நடுக்கம்
விது - சந்திரன், விட்டுணு
விதுடி - படித்தவள்
விதுதமுகம் - உணவணி முதலிய வேண்டாததற்குத் தலையசைத்தல்
விதுப்பு - ஆசை, சீக்கிரம்
விதும்பல் - ஆசைப்படல்
விதுரன் - அறிஞன், திண்ணியன், வாழ்க்கைத் துணையிழந்தோன், விதுரன்
விதேகை - மிதுலை நகரம்
விதேயன் - சொற்படி கேட்போன்
விதை - பெருமை, விதையென் னேவல், வித்து
விதைத்தல் - வித்துதல்
விதைப்புனம் - புதுக்கொல்லை
வித்தகம் - ஞானம்
வித்தகர் - கம்மாளர், தூதர்
வித்தகன் - வயிரவன்
வித்தம் - ஞானம், பொன், வினை முற்று
வித்தாரம் - அகலம், ஓர்கவி
வித்தியர் - கம்மாளர்
வித்தியார்த்தி - கற்போன்
வித்து - விதை, வித்தென்னேவல்
வித்துதல் - விதைத்தல்
வித்துரு - மின்னல்
வித்துருமம் - வளம்
வித்துவான் - புலவன்
வித்துவேடணை - அட்ட சித்தி யிலொன்று
வித்துவேடம் - விரோதம்
வித்தை - கல்வி, ஞானம், வினை முற்று
விநதை - கருடன்றாய், சத்த புரியிலொன்று
விநயம் - தருமம், வணக்கம்
விநாசம் - கொலை, நாகம்
விநாசன் - கொலைசெய்வோன்
விநாடி - காலநுட்பம்
விநாயகன் - அருகன், புத்தன், விநாயகன்
விநீதன் - தண்டிக்கப்பட்டவன், விநயமுள்ளவன்
விநோதம் - பொழுதுகழித்து விளையாடல்
விந்தம் - ஒரெண், மலை
விந்தர் - இடையர்

விந்தியம் - அட்டகுல பருப்பதத்தொன்று
விந்து - ஓர்புள்ளி, நீர்த்துளி
விந்தை - ஆச்சரியம், துர்க்கை
விபக்கன் - பகைவன்
விபஞ்சிகம் - வீணை
விபணி - கடை, கடைவீதி
விபதம் - கெடுவழி
விபத்தன் - வேறுபட்டோன்
விபத்தி - குற்றம், துன்பம், வேற்றுமை
விபத்து - துன்பம்
விபரீதம் - அதிசயம், வேறுபாடு
விபலம் - பயனின்மை
விபவ - ஓராண்டு
விபவம் - செல்வம்
விபனன் - மெலிந்தோன்
விபாகம் - செல்வம், பக்குவம், வேறுபாடு
விபாகரன் - சூரியன், தீக்கடவுள்
விபாதம் - உதயகாலம்
விபாவகன் - சூரியன், தீக்கடவுள்
விபாவரி - இராத்திரி
விபினம் - காடு
விபீடணன் - இராவணற் கிளையோன்
விபீதகம் - தான்றிமரம்
விபு - கருத்தா
விபுதர் - அறிஞர், மிகக்கற்றோர், வானோர்
விபுலம் - அகலம், பூமி, பெருமை, விரிவு
விபுலை - பூமி
விபூடணம் - ஆபரணம்
விபூதி - அணிமாமுதலியன, குற்றம், கொடுமை, செல்வம், திருநீறு, பெருமை
விப்பிரமம் - தலைவன், தலைவி, விளையாட்டு, மயக்கம்
விப்பிரயோகம் - பிரிவு
'விப்பிரர் - பார்ப்பார்
விப்பிரலம்பம் - பிரிதல்
விப்பிலவம் - நாட்டின்குற்றம்
விமதன் - பகைவன்
விமர்த்தனம் - அரைத்தல்
விமலம் - அழுக்கின்மை
விமலன் - கடவுள், சிவன்
விமலி - சரச்சுவதி
விமலை - இலக்குமி, துர்க்கை, பார்வதி
விமானம் - உரோகணிநாள், ஏழ்நிலை மேடை, தேர், தேவர் கோயில், தேவலோகம்
விமோசனம் - தீர்தல்
விம்பம் - கோவைக்கொடி, கோவைப்பழம், பிரதிவிம்பம், வட்டம்
விம்பிகை - கோவைக்கொடி
விம்மல் - அழுதல், ஒலித்தல், வியங்கோண்முற்று
விம்மிதம் - அச்சம், அதிசயம், உடல்
வியக்கம் - பெருமை
வியங்கம் - பிறவிமறு
வியங்கோள் - ஐம்பான் மூவிடத்தும் வருமேவல்
வியஞ்சகம் - அபிநயம்
வியஞ்சனம் - அடையாளம், ஒற்றெழுத்து, பருப்புத்திரள்
வியதிரேகம் - எதிர்மறை
வியத்தல் - அதிசயப்படல், துதித்தல்
வியத்திகை - பெருமை
வியத்தியாசம் - ஓரிடத்தது பிறிதோரிடத்துறல்
வியந்தரம் - பிசாசம்
வியப்பு - அதிசயம்
வியம் - உடல், பறவை, பெருமை
வியர்த்தம் - பயனின்மை, வினைமுற்று
வியர்த்தல் - சினக்குறிப்பு, வியர்வை
வியர்வு - வியர்வை
வியலிகை - பெருமை
வியலிடம் - அகலம்

வியல் - அகலம், காடு, பெருமை, விரிவு
வியவன் - ஏவுவான், திண்ணியன், வழிச்செல்வோன், வினைமுற்று
வியனுலகு - தேவலோகம்
வியன் - பெருமை
வியாகரணம் - இலக்கணம்
வியாகாதம் - இடையூறு
வியாகுலம் - துக்கப்படல்
வியாக்கியானம் - உரைசொல்லல்
வியாக்கிரம் - சிறந்தசொல், பெரும்புலி
வியாசம் - நிபம், பகுத்தறிதல், விரிவு
வியாச்சியம் - வழக்கு
வியாதம் - வேறுபாடு
வியாதன் - வியாசமுனி, வேடன்
வியாதி - நோய்
வியாத்தம் - வியாத்தியோடு கூடியது
வியாத்தி - வியாபித்தல்
வியாபகம் - சாதாரணம்
வியாபாதம் - வஞ்சமனம்
வியாபாதனம் - கொல்லல்
வியாபாரம் - காரியம்
வியாப்பியம் - வியாத்தியையுடையது
வியாமம் - நான்குமுழவளவு
வியாழம் - ஓர்நாள், தேவகுரு
வியாளக்கிராகி - பிடாரன்
வியாளம் - கெட்டயானை, பாம்பு, புலி
வியானன் - ஓர் வாயு
வியூகம் - விலங்கின் கூட்டம்
வியோகம் - பிரிதல், விடுதல்
வியோமம் - ஆகாயம்
விரகம் - காமநோய், பிரிவு
விரகு - அழித்தல், உணர்வு, உபாயம்
விரணம் - புண், விழல்
விரதம் - ஆணை, தவம்
விரதி - துறவோன்
விரத்தி - துறவு
விரவல் - கலத்தல், வியங்கோண் முற்று
விரவு - கலப்பு, விரவென்னேவல்
விரவுதல் - கலத்தல்
விராகன் - அருகன்
விராட்டு - பரப்பிரமம், புள்ளரசு
விராத்தியன் - சாதி தருமம் விட்டவன், பிரதிலோமத் தந்தைக்கும் மனுலோமத் தாய்க்கும் பிறந்தோன்
விராமம் - ஒற்றெழுத்து
விராவம் - ஒலி
விராளி - விரகம்
விரி - மாட்டுவிரி, விரியென் னேவல்
விரிசிகை - முப்பத்திருகோவை மணியுள மாதரிடையணி
விரிச்சி - நன்னிமித்தம்
விரிச்சிகன் - சூரியன்
விரிஞ்சனன் - பிரமன்
விரிஞ்சன் - பிரமன்
விரிஞ்சி - பிரமன்
விரிதல் - அலர்தல், ஒளிசெய்தல், பரவல், விசாலம்
விரித்தல் - சொல்லல், பரப்பல், பூசுதல்
விரியலர் - மலர்ந்தபூ
விரியல் - ஒளி, பரவல், மலர்தல், வியங்கோண்முற்று
விரிவு - அகலம்
விரீகி - நெல்
விருகம் - செந்நாய்
விருகு - விருகந்தண்டு
விருகோதரன் - வீமன்
விருக்கம் - மரப்பொது
விருச்சிகம் - ஓரிராசி, தேள்
விருதர் - படைவீரர்
விருதா - பயனின்மை
விருது - விருது
விருத்தகங்கை - கோதாவிரி
விருத்தகிரி - விருத்தாசலம்

விருத்தம் - பழமை, பாவினத் தொன்று, மூப்பு, வட்டம், வேறுபடல்
விருத்தர் - கிழவர், மேலோர்
விருத்தி - அடிமை, ஒழுக்கம், ஒருரை, செல்வம், தொழிலி லாபம், வளர்தல்
விருத்தை - கிழவி
விருந்தம் - விலங்கின் கூட்டம்
விருந்தர் - புதியர்
விருந்தனை - மனைவி
விருந்தினர் - புதியோர்
விருந்து - புதுமை
விருபன் - வெள்ளெலி
விருப்பம் - ஆசை
விருப்பு - ஆசை
விரும்பல் - ஆசைப்பெருக்கம், கருத்து, வியங்கோண்முற்று
விருளை - கடிவாளப்பூண்
விரூபம் - விகாரரூபம், வேற்றுமை
விரூபாக்கன் - சிவன்
விரேசனம் - விடுவித்தல்
விரை - சாந்து, வாசனை, விரை யென்னேவல்
விரைதல் - விரைவு, வெயில், வேண்டல்
விரைவு - வேகம்
விரோசனன் - சூரியன், பலிச் சக்கரவர்த்தி தந்தை
விரோதம் - பகை, வேற்றுமை
விரோதி - ஓராண்டு, சத்துரு, விரோதியென்னேவல்
விரோதிகிருது - ஓராண்டு
விர்த்தி - விருத்தி
விலகல் - எறிதல், நீங்கல், வியங் கோண்முற்று
விலக்கல் - மாற்றம், வியங்கோண் முற்று
விலங்கரசு - சிங்கம்
விலங்கல் - கலங்கனீர், மலை, வியங்கோண்முற்று, விலங்குதல்
விலங்கு - காற்றளை, குறுக்கு, மிருகம், விலங்கென்னேவல்
விலங்குதல் - எறிதல், விலகல்
விலா - பழு
விலாங்கு - ஓர் மீன்
விலாசம் - ஆடவர் மகளிர் விளையாட்டு
விலாசனை - மகளிர் விளை யாட்டு
விலாபம் - கனவு கண்டிரங்கல்
விலாழி - குதிரைவாய்நுரை, யானைத்துதிக்கை நீர்
விலாளம் - ஆண்பூனை, பூனை
விலேபனம் - பூசுதல்
விலேபி - காஞ்சி
விலை - விற்றல்
விலைஞர் - செட்டிகள்
விலைமகள் - வேசி
விலோசனம் - கண்
விலோதம் - பெண்மயிர், மயிர்க் குழற்சி
விலோதனம் - துகிற்கொடி, பெருங்கொடி
விலோமம் - முறை பிழைத்தல்
வில் - ஒளி, சேரன்கொடி, மூல நாள், வில், வில்லென்னேவல்
வில்லவன் - சேரன்
வில்லார் - வில்லுடையார், வேடர்
வில்லி - மன்மதன், வீரபத்திரன்
வில்லுபம் - வில்வம்
வில்லேருழவர் - படை வீரர், வேடர்
வில்வம் - கூவிளை
விவசம் - பரவசம்
விவரம் - உட்டுளை, பகுத்தல்
விவர்த்தனம் - புரளல்
விவாகம் - கலியாணம்
விவாதம் - சொற்கலகம்
விவிதம் - பலவிதம்
விவேகம் - பகுத்தறிவு
விழல் - ஓர் புல், வியங்கோண் முற்று, விழுதல்

விழவு - திருவிழா, மிதுனவிராசி
விழா - விழவு, வினைமுற்று, வினையெச்சம்
விழி - கண், விழியென்னேவல்
விழித்தல் - கண்டிறத்தல்
விழுகை - விழுதல்
விழுக்கு - நிணம்
விழுங்கல் - வியங்கோண்முற்று, விழுங்குதல்
விழுதல் - விழல்
விழுது - ஆலமர முதலியவற்றின் விழுது
விழுத்தல் - வீழ்த்தல்
விழுப்பம் - ஆசை, குலம், நன்மை
விழுமம் - இடும்பை, சிறப்பு, சீர்மை, நன்மை
விழைச்சு - இளமை, புணர்ச்சி
விழைதல் - ஆசைப் பெருக்கம்
விழைந்தோர் - சினேகிதர்
விழைவு - ஆசைப்பெருக்கம், உள்ளோசை, கலத்தல்
விளக்கம் - சந்திரனாள், தெளிவு, வினைமுற்று
விளக்கு - சோதிநாள், தீபம், விளக்கென்னேவல்
விளங்கல் - ஒளி செய்தல், வியங்கோண்முற்று
விளங்குதிங்கள் - சுக்கிரன்
விளம்பம் - தாமதம், வினைமுற்று
விளம்பல் - சொல்லல், வியங்கோண்முற்று
விளம்பனம் - தாமதம்
விளம்பி - ஓராண்டு, வினையெச்சம்
விளம்பிதம் - தாமதப்பட்ட முற்றுந் தாளப்பிரமாணம்
விளரி - இளமை, நெஞ்சாற்பிறக்கு மிசை, நெய்தனிலத்தியாழ், மிகுதி, யாழிலோர்நரம்பு, வேட்கை
விளரிப்பாலை - ஓரிராகம்
விளர் - இளமை, கொழுமை, நிணம், வெண்மை
விளவு - கமர், விளவென்னேவல், விளாமரம்
விளா - விளாமரம்
விளாகம் - போர்க்களம்
விளாவல் - கலத்தல், வியங்கோண்முற்று
விளி - எட்டன் வேற்றுமை, விளியென்னேவல்
விளிதல் - கெடுதல், சாதல், மறிதல்
விளித்தல் - அழைத்தல்
விளிம்பு - கண்ணிமை, கரை
விளிவு - கோபம், சாவு
விளைஞர் - மருதநில மாக்கள்
விளைதல் - உண்டாதல்
விளைநிலம் - வயல்
விளைபுலம் - வயல்
விளையுள் - வயல்
விளைவு - மேகம், வயல், விளைதல்
விள்ளல் - தழுவல், மலர்தல், வியங்கோண்முற்று, வேறுபடல்
விறகு - விறகு
விறப்பு - அச்சம், நெருக்கம், பெருக்கம், போர், வெற்றி
விறலி - பதினாறு வயதுப்பெண், பாடன்மகடூ
விறலோன் - அருகன், திண்ணியன்
விறல் - பெருமை, வலி, வீரம், வெற்றி
விற்பன்னர் - கற்றோர், புலவர்
விற்றல் - விற்குதல்
வினவல் - வியங்கோண்முற்று, வினாவல்
வினவுதல் - வினாவல்
வினா - சொல், வினாவென்னேவல்
வினாசன் - கொலைசெய்வோன்
வினீதன் - தண்டிக்கப்பட்டவன், விநயமுள்ளவன்
வினை - கருத்து, தொழில், போர்
வினைஞர் - கம்மாளர், கூத்தர், சூத்திரர், மருதநிலமாக்கள்

வினையுரைப்போர் - தூதர்
வினைவிநாசன் - கடவுள்
வின்னூலாளன் -
துரோணாசாரியன்

## வீ

வீ - ஓரெழுத்து, சாவு, நீக்கம், பறவை, பூ, வீயென்னேவல்
வீகம் - பூட்டு, மோதிரம்
வீக்கம் - மிகுதல், வினைமுற்று, வீங்கல்
வீக்குதல் - கட்டல்
வீங்கல் - நித்திரைசெய்தல், வியங்கோண்முற்று, வீக்கம்
வீசம் - ஓரெண், நெல்லிடைப் பொன், வினைமுற்று
வீசல் - ஈதல், எறிதல், வியங்கோண் முற்று
வீசனம்- சிற்றாலவட்டம், விசிறி
வீசை - ஓர்நிறை, வினைமுற்று
வீடல் - சாதல், வியங்கோண்முற்று
வீடிகை - தாம்பூலம்
வீடு - மனை, மோக்கம், வீடென் னேவல்
வீட்டுதல் - கொல்லல்
வீணை - ஓசையாழ்
வீணைவல்லோர் - கந்தருவர்
வீண் - பயனின்மை
வீதம் - முறை
வீதராகம் - வைராக்கியம்
வீதல் - கெடுதல், சாதல், வறுமை
வீதி - ஒழுங்கு, கடைவீதி, தெரு, நேரோடல், வழி, வினைமுற்று
வீபணி - கடைவீதி
வீபத்து - சந்திரன்
வீபற்சு - அருச்சுனன்
வீமம் - பயங்கரம்
வீமன் - பஞ்சபாண்டவரி லொருவன்
வீரசாகி - சேங்கொட்டை மரம்
வீரச்செல்வி - துர்க்கை
வீரட்டாணம் - கூத்தின்விகற்பம்
வீரணம் - விலாமிச்சம்வேர்
வீரதச்சுவன் - மன்மதன்
வீரபத்திரன் - சிவன்மகன்
வீரமுட்டி - வீரசைவத்து ருத்திர வேடம் பூண்டு சமயப் பாது காவலனாயிருப்போன்
வீரமுத்திரிகை - காலடுவீரலணி
வீரம் - ஓர் மருந்து, மலை, வலி, வீரியம்
வீரர் - படைவீரர்
வீரன் - அருகன், திண்ணியன், வீட்டுமாசாரி
வீரி - காளி, துர்க்கை
வீரியம் - சுக்கிலம், பறைப்பொது, வீரம்
வீரியர் - வீரர்
வீருதம் - மிடைதூறு
வீரை - ஓர்மரம், கடல், துன்பம்
வீவு - சாவு
வீழி - ஓர்செடி
வீழ் - மரவிழுது, வீழென்னேவல்
வீழ்கதி - நரகம்
வீழ்க்கை - சோதிநாள், வினை முற்று
வீழ்தல் - ஆசை, ஆசைப் பெருக்கம், மேவல், விழுதல்
வீழ்த்தல் - வியங்கோண்முற்று, விழுவித்தல்
வீறல் - வியங்கோண்முற்று, வீறுதல்
வீறு - தனிமை, புண்ணியம், பெருமை, விளக்கம், வீறென் னேவல், வெறுப்பு
வீற்றம் - வேறுபாடு
வீற்று - தனிப்பாடு, வேறுபாடு

## வெ

வெகுளி - சினம்
வெகுளுதல் - சினத்தல்

வெஃகல் - ஆசைப் பெருக்கம், வியங்கோண்முற்று
வெஃகாமை - வேண்டாமை
வெங்களம் - போர்க்களம்
வெங்கோல் - கொடுங்கோல்
வெஞ்சமம் - பாலைநிலத் திராகம், போர்
வெஞ்சிலைச் செல்வன் - வீரபத்திரன்
வெஞ்சுடர்க்கிரணன் - சூரியன்
வெடி - அச்சம், இடி, கள், நறும்புகை, வெடியென்னேவல், வெளி
வெடித்தல் - பிளத்தல்
வெடிப்பு - பிளப்பு
வெட்கம் - நாணம்
வெட்கல் - அச்சக் குறிப்பு, நாணுதல், வியங்கோண்முற்று
வெட்சி - ஓர் பூஞ்செடி, பகைவரையோட்டுவார்க்கு மாலை
வெட்டல் - கொலைசெய்தல், தறித்தல், வியங்கோண்முற்று
வெட்டி - வழி, வினையெச்சம்
வெட்டை - உட்டணம், வினைமுற்று
வெட்பாலை - ஓர்மரம்
வெண்கதிரோன் - சந்திரன்
வெண்கலம் - ஒருலோகம்
வெண்கூதாளம் - நீர்த்தாளி
வெண்சலசமுற்றாள் - சரச்சுவதி
வெண்டளை - தலையோடு
வெண்டாது - வெள்ளி
வெண்டாமரையாள் - சரச்சுவதி
வெண்டேர் - கானல்
வெண்பலி - சாம்பல்
வெண்பொன் - வெள்ளி
வெண்மயிர் - சாமரம்
வெண்மலை - கயிலை
வெண்மை - அறிவின்மை, இளமை, வெள்ளை
வெதிரேகம் - எதிர்மறை
வெதிர் - மூங்கில்
வெதிர்த்தல் - சினத்தல்
வெதிர்ப்பு - கலக்கம், சினக்குறிப்பு, நடுக்கம்
வெதுப்பல் - வாட்டல், வியங்கோண்முற்று
வெதுப்பு - ஓர்நோய், வெதுப்பென்னேவல்
வெதும்பல் - சினக்குறிப்பு, வாடல், வியங்கோண்முற்று
வெந் - முதுகு
வெந்தை - பிட்டு, வினைமுற்று
வெந்நீர் - சுடுநீர்
வெப்பம் - ஆசை, வெம்மை
வெப்பு - வெம்மை
வெம்பல் - பெருங்கோபம், வாடல், வியங்கோண்முற்று
வெம்மை - ஆசை, உட்டணம், கடுமை
வெயில் - ஒளி, சூரியன்
வெய்து - வெம்மையுடையது
வெய்துறல் - அச்சக்குறிப்பு, சினக்குறிப்பு, துன்பம்
வெய்தெனல் - விரைக்குறிப்பு
வெய்யோன் - கொடியோன், சூரியன், மிருகசீரிடம், விருப்புற்றோன்
வெரிந் - முதுகு
வெருதம் - வாலின்கீழிடம்
வெருகு - ஆண்பூனை, பூனை
வெருட்சி - அச்சம்
வெருட்டல் - அச்சமுறுத்தல், வியங்கோண்முற்று
வெருவந்தம் - அச்சம்
வெருவு - அச்சம், வெருவென்னேவல்
வெருவுதல் - அஞ்சுதல்
வெருளி - வெருட்சி
வெருளுதல் - மருளுதல்
வெருள் - உன்மத்தம், வெருவென்னேவல்
வெல்லம் - வெல்லம்

வெல்லல் - வியங்கோண்முற்று, வெல்லுதல்
வெல்லுமா - புலி
வெளி - ஆகாயம், மறைவற்ற விடம்
வெளிசம் - தூண்டில்
வெளிப்படல் - தோன்றல்
வெளில் - அணில், கட்டுத்தறி, தயிர் கடை மத்து, யானைத் தூண், வெண்மை
வெளிறர் - அறிவில்லார்
வெளிறு - அறிவின்மை, நறுவிலி மரம், வயிரமில்லாமரம், வெண்மை
வெளிற்றுமரம் - முருக்கு
வெள்கல் - அச்சம், வியங்கோண் முற்று, வெட்கம்
வெள்வரி - பலகறை
வெள்ளம் - ஓரெண், கடல், நீர்ப் பெருக்கு, மிகுதி
வெள்ளாடு - வெள்ளாடு
வெள்ளி - சுக்கிரன், வெண்பொன், வெண்மை
வெள்ளிடை - வெளி
வெள்ளிமலை - கைலைமலை
வெள்ளில் - பாடை, விளாமரம்
வெள்ளை - சங்கு, பலபத்திரன், வெண்பா, வெண்மை, வெள் ளாடு, வெள்ளாட்டுக்குட்டி, வெள்ளி
வெள்ளை நிறத்தாள் - சரச்சுவதி
வெள்ளை மெய்யாள் - சரச்சுவதி
வெள்ளையானையூர்தி - ஐயனார்
வெள்ளை வாரணன் - இந்திரன்
வெறி - அச்சம், ஆடு, கலக்கம், கள், சீக்கிரம், நாற்றம், பிசாசம், வெறியென்னேவல், வேல னாடல்
வெறிதல் - நெருங்கல்
வெறிது - அறிவின்மை
வெறித்தல் - மயக்குறல்
வெறியாடல் - தேவர்க்காடுங்கூத்து
வெறியாட்டாளர் - தேவர்க்காடுவோர்
வெறுக்கை - செல்வம், பொன், விழுப்பொருள், வினைமுற்று
வெறுத்தல் - கோபம், சினம்
வெறுநுகம் - சோதிநாள்
வெறுப்பு - அச்சம், கலக்கம், சினம், செறிவு, துன்பம், வேண்டாமை
வெற்பன் - குறிஞ்சி நிலத் தலைவன்
வெற்பு - மலை
வெற்றம் - வெற்றி
வெற்றி - சயம்
வென்றி - வெற்றி
வென்றோன்- செயசீலன்

## வே

வே - ஓரெழுத்து, வேவு, வேவென் னேவல்
வேகம் - கடுமை, கோபம், சினம்
வேகவதி - கம்பாநதி, வைகையாறு
வேகி - வேகமுடையோன்
வேங்கை - ஓர் மரம், புலி, பொன்
வேசகம் - யானை நுனிவால்
வேசரி - கழுதை, கோவேறு கழுதை
வேசனம் - மருத நிலத்தூர்
வேசி - விலைமகள்
வேசை - வேசி
வேடகம் - காதணி
வேடம் - காதணி, தன் கோலம் விட்டுப் பூண்ட மற்றோர் கோலங்கொளல்
வேடர் - வேடுவர்
வேட்கை - ஆசை

வேட்கோவள் - குயவன்
வேட்டம் - வேட்டை
வேட்டல் - ஆசைப்பெருக்கம், வியங்கோண்முற்று, விருப்பம், விவாகம், வேள்விசெய்தல்
வேட்டார் - சிநேகிதர்
வேட்டுவன் - குளவி, மகநாள், வேடன்
வேட்டை - துன்பம், வினை முற்று, வேட்டம்
வேட்டோர் - சினேகிதர்
வேட்டோன் - சினேகிதன், புருடன்
வேட்பு - விருப்பம்
வேணகை - மதில்
வேணவா - ஆசைப்பெருக்கம்
வேணி - ஆகாயம், ஆறு, இடையர் வீதி, சடை
வேணீர் - தாகநீர்
வேணு - உட்டுளை, மூங்கில், வாள், வில், வேய்ங்குழல்
வேண் - தமிழ்நாட்டிலொன்று
வேண்டல் - ஆசை, ஆசை பெருக்கம், இரத்தல், வியங் கோண்முற்று
வேண்டாமை - வெறுப்பு
வேண்டார் - பகைவர்
வேதகம் - தன்மையை வேறு படுத்துவது
வேதகாரர் - பொருந்தர்
வேதக்கொடியோன் - துரோணாசாரியன்
வேதண்டம் - கைலை, மலை, யானை
வேதபாரகர் - பார்ப்பார்
வேதமுதல்வி - சரச்சுவதி, பார்வதி
வேதம் - முதனூல்
வேதல் - வேகுதல்
வேதனம் - அறிவு, கூலி, சம்பளம்
வேதனை - அலைத்தல், நோய், வருத்தம்
வேதன் - கடவுள், வியாழம்
வேதா - கடவுள், பிரமன்
வேதாந்தம் - வேதத்துட்பொருள்
வேதாந்தன் - அரன், அருகன், கடவுள்
வேதாந்தி - வேதாந்த நூலுணர்ந் தோன்
வேதார்த்தன் - கடவுள்
வேதாளம் - பிசாசம்
வேதாளி - காளி
வேதாளியர் - புகழ்வோர்
வேதி - ஓமகுண்டம், கேட்டை நாள், திண்ணை, மதில், வினை முற்று
வேதிகை - கேடகம், திண்ணை
வேதிதம் - துளையுடைபொருள்
வேதித்தல் - பிளத்தல், வேறாக்கல்
வேதியர் - பார்ப்பார்
வேதினம் - ஈர்வாள்
வேது - வெய்து
வேதை - துன்பம், பொன்னாக்கல்
வேத்திரதரன் - வாயில்காப்போன்
வேத்திரம் - அம்பு, இலந்தை, பிரம்பு
வேந்தன் - அரசன், இந்திரன், சந்திரன், சூரியன், வியாழம்
வேந்து - அரசன்
வேமம் - நெய்யுங்கருவியிலொன்று
வேம்பின்றாரோன் - பாண்டியன்
வேம்பு - ஓர்மரம்
வேயர் - வேவுகாரர்
வேயல் - மூங்கில், வியங்கோண் முற்று
வேயுள் - மாடம்
வேய் - உட்டுளை, ஒற்று, மூங்கில், வேயென்னேவல்
வேய்கள் - வேவுகாரர்
வேய்தல் - அணிதல், அலங் கரித்தல், சூடுதல், மூடுதல், வேயுள்

வேரம் - சலஞ்சாதித்தல்
வேரல் - மூங்கில்
வேரி - கள், வாசனை, வெட்டி வேர்
வேர் - மூலம்
வேர்க்கொம்பு - இஞ்சி
வேர்த்தல் - கோபம், வியர்த்தல்
வேலனாடல் - தேவர்க்காடுங் கூத்து
வேலன் - முருகன், வெறியாட் டாளன்
வேலாவலயம் - கடல், பூமி
வேலி - ஊர், காவல், நிலத்தளவை யிலொன்று, மதில்
வேலிறையோன் - குமரன்
வேலை - கடல், கடற்கரை, தொழில், நிகழ்காலம், பொழுது
வேலையிற்றுயின்றோன் - திருமால்
வேல் - ஆயுதப்பொது, கைவேல், மூங்கில், வேலமரம்
வேவு - ஒற்று, வேதல், வேவென் னேவல்
வேழம் - கரும்பு, பொறுக்கை, மூங்கில், யானை
வேழம்பர் - கழைக்கூத்தர்
வேளாண்மை - ஈகை, உபகாரம், மெய்
வேளாளர் - ஈகையாளர், பூவைசியர்
வேளிர் - குறுநிலத்தரசர்
வேளை - ஓர்பூடு, காலம்
வேள் - ஆண்மகன், குமரன், மன்மதன்
வேள்புலவரசர் - சாளுவர்
வேள்வி - ஆராதனை, ஈகை, ஓம குண்டம், மகநாள், யாகம்
வேள்விக்குண்டம் - ஓமகுண்டம்
வேள்விநாயகன் - இந்திரன்
வேள்வியாளர் - ஈகையாளர், பார்ப்பார்
வேறிடம் - ஏகாந்தம்
வேறு - வினைமுற்று, வேற்றுமை யுடையது
வேறுபாடு - வேறுபடல்
வேற்றலம் - காற்று
வேற்றுமை - எழுவாய் முதலிய வுருபுகள், வேறுபடல்
வேனல் - கானல்
வேனிலாளி - மன்மதன்
வேனில் - கோடை

## வை

வை - ஓரெழுத்து, கூர்மை, வைக் கோல், வையென்னேவல்
வைகடிகன் - இரத்தினங்கள் சாணைதீர்ப்போன்
வைகரி - ஓர்வாக்கு, திட்டம்
வைகல் - கழிவுநாள், தங்கல், நாள், விடியல், வியங்கோண்முற்று
வைகல்லியம் - குறைவு
வைகறை - இரவினிருபது நாழிகை முதன் முப்பது நாழிகையளவுஞ் செல்லும் பொழுது, விடியற்காலம்
வைகாசம் - வைகாசிமாதம்
வைகாசி - ஓர்மாதம், விசாகநாள்
வைகுண்டம் - திருமானகரம்
வைகுண்டன் - திருமால்
வைகுந்தநாதன் - திருமால்
வைகுந்தம் - வைகுண்டம்
வைகை - மதுரையாறு, வினை முற்று
வைகைத்துறைவன் - பாண்டியன்
வைசயந்தம் - இந்திரனுப்பரிகை
வைசயந்தி - திருமான்மாலிகை
வைசாகம் - ஓர்மாதம்
வைச்சிரவணன் - குபேரன்
வைடூரியம் - நவமணியிலொன்று

வைணவம் - அட்டாதச புராணத்தொன்று, ஓர் சமயம், மூங்கிலரிசி
வைணவர் - நாராயணன் சமயத்தோர்
வைணவி - சத்த மாதாக்களி லொருத்தி
வைணிகன் - வீணைவாசிப்போன்
வைதரணி - எமபுரத்தாறு
வைதர்ப்பி - தமயந்தி
வைதல் - திட்டல்
வைதனிகம் - அற்றைக்கூலி
வைதாளிகன் - பள்ளியெழுச்சிப் பாடுவோன்
வைதீகம் - வேதமார்க்கம்
வைதீகர் - வேதமார்க்கத்தினடப் போர்
வைதேகன் - பார்ப்பனத்திக்கும் வைசியனுக்கும் பிறந்து துதித் துய்வோன்
வைதேகி - சீதாதேவி
வைதேயன் - கருடன்
வைத்தல் - வைக்குதல்
வைத்தியநாதன் - அதலலோகத் திருக்குஞ் சிவன்
வைத்தியம் - பரிகாரம்
வைத்தியன் - பரிகாரி
வைந்தேயன் - கருடன்
வைநம் - பகுத்தல்
வைநீதகம் - ஈரிணைமூவிணை யெருதேனுங் குதிரையேனுங் கட்டிய பண்டி
வைபவம் - விபவம்
வைப்பு - இடம், ஊர், பெருமை, வைத்தல்
வைமாத்திரேயன் - சக்களத்தி மகன்
வையகம் - பூமி
வையம் - உரோகணிநாள், சிவிகை, தேர், பண்டி, பாண்டில் பூண்டவூர்தி, பூமி, வாகனம், வினைமுற்று
வையாகரணன் - வியாகரணம் படித்தோன்
வையாளிவீதி - குதிரை நடத்தும் வீதி
வைரசுத்தி - பகை தீர்த்துக் கொளல்
வைரநிரியாதனம் - பகைதீர்த்துக் கோடல்
வைரம் - விரோதம்
வைரவம் - பைரவம்
வைரி - சத்துரு
வைரோசனன் - மாவலி
வைவச்சுதன் - ஓர்மநு, நமன்

## வௌ

வௌவல் - கொள்ளையிடல், திருடல், பிடித்தல், வாருதல், வியங்கோண்முற்று
வௌவால் - ஓர் பறவை, வியங் கோண்முற்று

முதலாவது
## பெயரகராதி
முற்றிற்று

இரண்டாவது

# பொருளகராதி

| | | | |
|---|---|---|---|
| அருளகத் | தனைத்துமே | யாளு | நாதனை |
| மருளகத் | தகற்றிட | வணங்கி | நூற்படி |
| தெருளகத் | தொருபொருட் | செட்டும் | பற்பெயர்ப் |
| பொருளக | ராதியாம் | புகலு | வாமரோ. |

## அகத்தி

அகத்தி - அச்சம், கரீரம், முனி
அகத்தியன் - கும்பயோனி, குறுமுனி, முத்தமிழ்முனியோன்
அகப்பை - கோரிகை, மூழி
அகலம் - அகலுள், அகறல், ஆய்வு, ஆன்றல், இடம், இடம்பாடு, கண்ணறை, சேண், ததம், நளம், நளி, நனவு, நியக்குரோ தம், படர்தல், பாழி, மார்பு, விபுலம், வியல், விரிவு
அகல் - இடிஞ்சி, கராவம், சுத்திகை, நகழி, பாண்டில்
அகழி - அகழ், உடு, ஓடை, கயம், கிடங்கு, கேணி, பரிகம், பரிகை, பாம்புரி
அகற்றல் - உச்சாடணம், ஒருவு தல், துறத்தல், நீக்கல்
அகில் - அகரு, காகதுண்டம், சாகாதுண்டம், பூழில்

## அசைச்சொல்

அக்குமணி - சங்குமணி, மனவு, வளைமணி
அசுத்தம் - அசுசி, அருவருப்பு, குற்சிதம், சூதகம், தூய்தன்மை பயிர்ப்பு, வாலாமை
அசுரர் - அவுணர், தகுவர், தநுசர், தானவர், திதிமைந்தர், தைத்தியர், நிசாசரர், நிதிசரர், வானோர் மாற்றலர்
அசைச்சொல் - அத்து, அந்தில், அம்ம, அரோ, அன்று, ஆங்கு, ஆம், ஆல, இகும், இட்டு, இருந்து, இன்று, ஒரும், கா, குரை, சின், தம், தாம், தான், தில், நின்று, பிற, பிறக்கு, போம், போலும், மன், மன்னோ, மா, மாது, மாதோ, யா. இவற்றுன் மாவென்னு மசைச்சொல்

நூலாலுணர்க. அங்கம்- 6: அவையாவன 0; ??; இவை முறையே, பிறை, மதி, கணை, வில், பாம்பு, புள்ளடி முறையே இவற்றின்பேர் அநுதுரிதம், துரிதம், இலகு, குரு, புலுதம், காகபதம், இவற்றினுற்பத்தி களும் பரியாயநாமங்களும், வண்ணங்களும், அதிதேவதை களும், மாத்திரைகளும், அத் தாங்குலப்பிரமாணங்களும் காதைப்பிரமாணங்களும் நூலாலுணர்க. கிரகம் - 4, அதீதம் - 8, நாகதம், சமம், விடமம், இவற்றுட்குரன் முன்னுந்தாளம் பின்னும் வருவததீதம், தாளமுன்னுங் குரல்பின்னும் வருவதுநாகதம், குரலுந்தாளமுமொத்துவரிற்சமம் குரலுந்தாளமு முன்னும் பின் னுங்கலந்து வருவதுவிடமம். சாதி - 5: சதுரசிரம், திரிசிரம் மிசிரம், கண்டம், சங்கீரணம்; இவை முறையே பிரமவரச வைசிய சூத்திர சங்கிரமம், இவற்றைமுற் கூறிய விலகு அக்கரகாலங்களா லறிவது; களை - 3 ஏககளை, துவிகளை, சதுர்க்களை. இவற்றுளக்கர காலமாயும் கிரியையோடும் வருவது ஏககளை, இதனை யிரட்டித்துக் கிரியையோடு வருவது துவிகளை, இதனை யிரட்டித்துக் கிரியையோடு வருவது சதுர்க்களை. இலயை - 3: விளம்பம், மத்திமம், துரிதம். இவற்றுளக்கர கால மாய்க் கிரியையோடுவரு வது விளம்பம், இதனை யிரட்டித்துக் கிரியையோடு வருவது மத்திமம், இதனை யிரட்டித்துக்கிரியையோடு வருவது துரிதம்; யதி- 6: சமம், விடமம், மிருதங்கம், வேத மத்தியம், கோபுச்சம், சுரோதோ வகம். இவற்றுள் நெட்டங்க மாயினுங் குற்றங்க மாயினு மொரேவிதமாய் வருவது சமயதி ;;) எல்லா வங்கமுங் கிரமமின்றிக் கலந்து வருவது விடமயதி? 0,) முதலிலுங்கடை யிலுங் குற்றங்கமுமிடையி னெட்டங்கமும் வருவது மிருதங்கயதி 0?0 முதலிலுங் கடையிலு நெட்டங்கமு மிடை யிற்குற்றங்கமும் வருவது வேத மத்தியயதி;; ; முதலிலே நெட் டங்கமு மீற்றிலே குற்றங்கமு மாய் நேர்ந்துவருவது கோபுச் சயதி, ??0, முதலிலே குற்றங்கமு மீற்றிலே நெட்டங்கமுமாய் வருவது சுரோதோவகம் ??0,) மற்றைய விவ்விலக்கணத்தாற் கண்டுணர்க.

தானம் - 3: தலைப்படு தானம், இடைப்படுதானம், கடைப்படு தானம். அவையாவன: அறத் தானீட்டிய பொருளை முக் குற்றமற்ற நற்றவத்தோரைக் கொள்கெனப் பணிந்து குரை யிரந்து தம்முள்ளமுவந்தீதல் தலைப்படுத்தானம், ஆதுலர், குருடர், மாதர், முதற்பிறர் சிறுமையைப் பற்றி மனமிரங்கி யீவதிடைப்படுதானம், புகழார் வங்கை மாறச் சுங்கண்ணோட் டங்காரணங் கடைப்பாடி வற்றைப் பற்றி யீவது கடைப் படுதானம்.

தானை - 6: தேர், கரி, பரி, வாள், வில், வேல்

## தி

திக்கு - 8: கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு, இவையே யட்டத்திக்கு

திக்கு - 10: மேற்சொன்னவையன்றி மேலுங்கீழுங் கூட்டித் தசதிசை யென்ப; கிழக்குக் கருடதிசை, தென்கிழக்குப் பூனைத்திசை, தெற்குச் சிங்கத் திசை, தென்மேற்குச் சுனக திசை, மேற்கு நாகத் திசை, வடமேற் கெலித் திசை, வடக்கு யானைத்திசை, வடகிழக்கு முயற்றிசை, மேல்விசும்புத் திசை, கீழ்ப்பாதாள திசை

திக்குப்பாலகர் - 8: கிழக்காதி முறையே இந்திரன், அக்கினி, யமன், நிருதி வருணன், வாயு, குபேரன், ஈசானன். இவர்க்கு முறையே குறிகளாவன கொடி, புதைசீயம், நாய், இடபம், கழுதை, யானை, காகம்

திக்குயானைகள் - 8: கிழக்காதி முறையே, ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம். இவையே யட்ட திக்கயம், இவற்றிற்கு முறையே பிடி யானைகளாவன அப்பிரமை, கபிலை, பிங்களை, அனுபமை, கபிலை, பிங்களை, அனுபமை, தாமிரபருணி, சுதந்தி, அஞ்சனை, அஞ்சனாவதி

திணை - 5: குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல். இவற்றுள் மலைச்சார்பு குறிஞ்சி, நீரில்லாக்கடு நிலம் பாலை, காட்டுச் சார்பு முல்லை, வயற்சார்பு மருதம், கடற்சார்பு நெய்தல்

திதி - 15: பிரதமை - 1, விதியை - 2; திரிதியை - 3, சதுர்த்தி - 4, பஞ்சமி - 5, சட்டி - 6, சத்தமி - 7, அட்டமி - 8, நவமி - 9, தசமி - 10, ஏகாதசி - 11, துவாதசி - 12, திரையோதசி - 13, சதுர்த்தசி - 14, இவற்றிற் சுக்கில பக்கத்திற் சுத்தமென்றுங் கிருட்டின பக்கத்திற் பகுளமென்றுங் கூட்டுக; பதினைந்தாந் திதி யாவது, சுக்கில பக்கத்திற்குப் பௌர்ணமி, கிருட்டின பக்கத்திற்கு அமாவாசியை.

திரவிடம் - 5, திரவிடம், ஆந்திரம், கன்னடம், மகாராட்டிரம், கூர்ச்சரம்

திரவியம் - 5: மலைபடுதிரவியம், காடுபடுதிரவியம், நாடுபடு திரவியம், நகர்படுதிரவியம், கடல்படுதிரவியம். இவற்றுள் மலைபடுதிரவியம் மிளகு, கோட்டம், அகில், தக்கோலம், குங்குமம், காடுபடு திரவியம் இறால், தேன், அரக்கு, மயிர், பீலி, நாவி, நாடுபடு திரவியம் செந்நெல், சிறுபயறு, கரும்பு, வாழை, செவ்விளநீர், நகர்படு திரவியம் அரசன், பித்தன், மந்தி, யானை, கண்ணாடி, கடல்படுதிரவியம் உப்பு, முத்து, பவளம், சங்கு, ஒக்கோலை

திருமாலவதாரம் - 10: மச்சம், கூர்மம், வராகம், நாரசிங்கம், வாமனன், பரசுராமன், இராமன், பலபத்திரன், கண்ணன், கற்கி, இவற்றிற்குக்

காரணம் வேதத்தைத் திருடி கடலிலொளித்த சோமுகா சுரனெனுமிராக்கதனைக் கொல்ல மச்சாவதாரம், கடலைக் கடையும் போது மந்தரமலையைத் தாங்கக் கூர்மாவதாரம், பூமியைப் பாயாக இரணியாக்கன் சுருட்டினதை விரிக்கவு மவனைக் கொல்லவும் வராக வதாரம், இப்பழிவாங்கச் சருவதேவ வணக்கம் விலக் கின வவன் றம்பி யிரணியகசி பனைக் கொல்ல நரசிங்காவ தாரம், இந்நான் கவதாரத் திற்குந் தாயாரில்லை; மாவ லியையடக்கக் காசிபனுந் திதியுந் தந்தை தாயாக வாம னாவதாரம், அரசராற்றாழ்த் தப்பட்ட பார்ப்பார் நிமித்த மவ்வரசரைக் கொல்லச் சமதக்கினியு மிரேணுகையுந் தந்தை தாயாகப் பரசுராமவ தாரம், இராவணன் முதலிய விராக்கதரைக் கொல்லத் தசரதனுங் கௌசலையுந் தந்தைதாயாக விராமவ தாரம், பிரலம்பன் முதற் பல இராக்கதரைக் கொல்ல வசுதேவனும் தேவகியும் உரோகணியுந் தந்தை தாயாகப் பல பத்திரராமவ தாரம், பாரதநடத்த வசு தேவனுந் தேவகியுந் தந்தை தாயாகக் கண்ணனவதாரம், உலகங்களைச் சங்கரிக்கக் கற்கியவதாரம்

திருமாலவதாரம் - 15: சனகன், சனந்தனன், சனாதன், சனற் குமாரன், நரநாராயணன், கபிலன், இடபன், நாரதன், அயக்ரீவன், தத்தாத்திரேயன், மோகினி, யாகபதி, வியாதன், தன்வந்திரி, பௌத்தன்

திருமாலாயுதம் - 5: சக்கரம், தனுசு, வாள், தண்டு, சங்கம்

## தீ

தீ - 3: உயிருள்ளதீ, உதரத்துள்ளதீ, சினத்திலெழுந்தீ, அன்றியும் வேதாக்கினி - 3, காருகபத் தியம், தக்கணாக்கினியம், ஆகவநீயம்

தீக்குணம் - 10: பொய்சொல்லல், கோட்சொல்லல், கோபித்துச் சொல்லல், பயனில் சொல்லல், இந்நான்கும் வாக்கின் தீக் குணம், களவாடப் போதல், வறிதே தொழில்செய்யல், கொலைசெய்யல், இம்மூன்றுங் காயத்தீக்குணம், கொலை நினைக்கை, காமப்பற்று, ஆசை, இம்மூன்று மனத் தீக்குணம்

தீவு - 7: நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு இவ்வெழுவகைப் பொருளு மவ்வத் தீவின் மிக்கன வாகையாலிவற்றாற் பெயர் பெற்றன.

## து

துரகக்தி - 5: மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, விடபகதி

துவர் - 10: நாவல், கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், ஆல், அரசு, அத்தி, இத்தி, முத்தக்காசு, மாந்தளிர்

## தே

தேயம் - 56: அங்கம், அருணம், அவந்தி, ஆந்திரம், இலாடம், யவனம், ஒட்டியம், கருசம், கலிங்கம், கன்னடம், கன்னாடம், காசம், காசிமீரம், காந்தாரம், காம்போசம், கராடம், குருகு, குடகம், குந்தளம், குரு குலிந்தம், கூர்ச்சரம், கேகயம், கேரளம், கொங்கணம், கொல்லம், கோசலம், சகம், சவ்வீரம், சாலவம், சிங்களம், சிந்து, சீனம், சூரசேனம், சோழம், சோனகம், திராவிடம், துளுவம், தெங்கணம், நிடதம், நேபாளம், பாஞ்சாலம், பப்பரம், பல்லவம், பாண்டியம், புலிந்தம், போடம், மகதம், மச்சம், மராடம், மலையாளம், மாளவம், யுகந்தரம், வங்கம், வங்காளம், விதற்பம்

தேவர் - 5: பிரமா, விட்டுணு, உருத்திரன், மயேச்சுரன், சதாசிவன். இவர் பஞ்ச தேவதையும் பஞ்ச கருத்தாக்களுமென்ப.

தேவர் வகை - 3: ஆதித்தர் - 12, அச்சுவினிகள் - 2, உருத்திரர் 11, வசுக்கள் - 8

## தொ

தொழில் - 3: ஆக்கல், காத்தல், அழித்தல்

தொழில் - 6: உழவு, தொழில், வரைவு, வாணிபம், விச்சை, சிற்பம்

தொழில் - 6: அந்தணரது தொழில் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல், அரசரறுதொழில் ஓதல், வேட்டல், ஈட்டல், உலகோம்பல், படை பயிற்றல், பொருதல், வைசியரது தொழில் ஓதல், வேட்டல், பொருளீட்டல், ஈதல், பசுக்காத்தல், ஏருழல், சூத்திரரது தொழில் முதன் மூவர்க்கேவல் செயல், பொளீட்டல், உழுதல், பசுக்காத்தல், குயிலுவத் தொழிற் செய்தல், காருகவினைக்கல், இவற்றுட் குயிலுவத் தொழில்களாவன: தோற்கருவிகளைக் கொட்டலுந் துளைக்கருவிகளை யூதலுமாம்; காருகவினைகளாவன: பட்டு நூலையும் பருத்தி நூலையுங் கொண்டாடை யாக்கலுஞ் சுமத்தலுமுழத்தலுமாம்.

## தோ

தோற்றம் - 2: சரம், அசரம். இவற்றுட்சரம் நடையுள்ளன; அசரம் நடையில்லன.

தோற்றம் - 4: பை, முட்டை, நிலம், வியர்வை

## ந

நட்சத்திரம் - 27: அச்சுவினி, பரணி, கார்த்திகை, உரோகணி, மிருகசீரடம், திருவாதிரை, புநர்பூசம், பூசம், ஆயிலியம், மகம், பூரம், உத்திரம், அத்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுடம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, இரேவதி. இவற்றுள் ஒவ்வொன்றுமுறையே மேடமுதற்

பன்னிரண்டிராசிகளிற் பதின் மூன்று பாகமுமிருபதுகலையுங் கொண்டவிடம்

நதி - 7: கங்கை, யமுனை, சரச்சுவதி, நருமதை, காவேரி, குமுரி, கோதாவரி. இவையே சத்த தீர்த்தமெனப்படும்.

நதி - 11: மேற்சொல்லிய வேழின் மேல் சிந்து, தாமிரபரணி, துங்கபத்திரி, கிட்டிணியென்று கூட்டுக.

நரகம் - 7: அள்ளல், இரௌரவம், கும்பிபாகம், கூடசாலம், செந்துத்தானம், பூதி, மாபூதி

நரகவட்டம் - 7: தமப்பிரபை, இமப்பிரபை, தூமப்பிரபை, வாலுகப்பிரபை, சாகரப்பிரபை, இரத்தப்பிரபை, அழற்பிரபை, அவையாவன: இருள், குளிர், புகை, மணல், துயிலாமை, இரத்தம், தீ

நரம்பு - 7: இசை காண்க

நற்குணம் - 10: மெய்யுரை, நல் வார்த்தை, இனியவை கூறல், பயன்படுசொல், இன்னான்கும் வாக்கினற்குணம், கோயில் வலம்வரல், தவம்புரிதல், தானஞ்செயல் இம்மூன்றுங் காயநற்குணம், அருணினைவு, ஆசையறுத்தல், தவப்பற்று, இம்மூன்றும் மன நற்குணம்

## நா

நாகம் - 8: வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன். இவற்றைக் கடவுட் பாம்பென்ப; இவை முறையே கிழக்கு முதலெண்டிக்கிற் பூமியைத் தாங்குவதன்றியே நடுவே சேடனென்னு நாகம், பூமியைத் தாங்காநிற்கும்; இந் நவநாகமுங் காசிபப் பிரமாவுக்கு மவன் மனைவிகள் பதின் மூவருட் கத்துருவைக்கும் பிறந்தன.

நாடி - 10: சுழிமுனை, இடை, பிங்கலை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புடை, புருடன், குகு, சங்கினி. அவையாவன: சுழிமுனை யாதாரமாநினு மூடுருவி நிற்பது, இடை, பிங்கலை இரண்டுங் கத்திரி கைக்கால் போற் பின்னிநிற்பன, காந்தாரி நாபியிற்றோன் றிச்சத்தமேழுக்கு மேழுநாடியாய்க் கண்டத்துறுவது, அத்தி, சிகுவை யிரண்டும் பத்துநாடி யுற்றுக் கண்ணினிற்பன, அலம்புடை, புருடனிரண்டுஞ் செவி யினூற்றிருபது நரம்புற்றிருப் பன, குகு நாபியுறைந்து குய்யம் பற்றி நிற்பது, சங்கினி உபத் தத்தைப் பற்றியிருப்பது

நாட்டமைதி - 6: செல்வம், விளை நிலம், செங்கோல், நோயின்மை, வளம், குறும்பின்மை

நாட்டுக்குற்றம் - 7: தொட்டியர், களவர், யானை, பன்றி, விட்டில், கிள்ளை, பெருமழை

நாட்டுக்குற்றம் - 8: விட்டில், தன்னரசு, வேற்றரசு, யானை, மிகுமழை, மிகுகாற்று, கிள்ளை, நாட்டம்

## நி

நிலம் - 4: குறிஞ்சி, முல்லை, மருதம் நெய்தல்

நிலை - 4: பைசாசம், மண்டலம், ஆலீடம், பிரத்தியாலீடம்,

இவை நான்கும் விற்றொடுத் தம்பினையெய்வார்க்குரிய நிலை, இவற்றுளொரு காலி னின்றொருகான் முடக்கல் பைசாச நிலை, இருகாலும் பக்கல் வளையமண்டலித்தலே மண்டல நிலை, வலக்கான் மண்டலித்திடக்கான் முந்துறலே யாலீடநிலை, வலக் கான் முந்துற்றிடக்கான் மண்ட லித்த பிரத்தியாலீட நிலை.

## நூ

நூல் - 3: முதநூல் வழிநூல், சார்பு நூல். இவற்றுளொருவன் முன் கண்டுரைத்ததே முதநூல், முத நூல் வழியே விகற்பித்துரைத்த நூலே வழி நூல், அவ்விரு நூல் பொருட்கூட்டித் திரிபு வேறுடைய நூலே சார்புநூல்

நூற்பயன் - 4: அறம், பொருள், இன்பம், வீடு

## ப

பகை - 3: பைசாசு, உலகு, உடல்

பக்குவர் - 3: கருமகாண்டி, ஞான காண்டி, பத்திகாண்டி

பஞ்சமூலம் - 5: செவ்வியம், சித்திர மூலம், கண்டுபாரங்கி, பேர ரத்தை, சுக்கு

படைவகுப்பு - 4: அணி, உண்டை, ஒட்டு, யூகம்

பட்சி - 5: வல்லூறு, அந்தை, காகம், கோழி, மயில். இவற் றிற்கு முறையே எழுத்து - அ, இ, உ, எ, ஒ. உண்டி, நடை, அரசு, தூக்கம், சாவு, பிற்பக்க மாகில் தூக்கம், அரசு, நடை, சாவு, உண்டி, சாவு தூக்க மில்லாத பொழுதறிந்து செய் யுண் முதலிய செய்தல் நன்மை

பண் - 4: பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி

பதவி - 4: சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம். இவற்றுட் கடவுளுலகத்தில் வாழ்தலே சாலோகம், கடவுள் சமீபத்து வாழ்தலே சாமீபம், கடவுளுருப் போன்று வாழ்தலே சாரூபம், கடவுளோடொன்றி வாழ்தலே சாயுச்சியம்

பரிச்சேதம் - 3: காலபரிச்சேதம், தேயபரிச்சேதம், வத்து பரிச் சேதம், அவையாவன: ஒரு காலத்துண் டொருகாலத்தின் றென்பது காலபரிச்சேதம், ஒரு தேயத்துண் டொருதேயத் தின்றென்பது தேயபரிச்சேதம், ஒரு பொருளிது வாகுமொரு பொருளிதன் றென்பது வத்து பரிச்சேதம்

பருவகாலம் - 6: கார், கூதிர், முன்பனி, பின்பனி, இள வேனில், முதிர்வேனில். இவையே ஆவணி முதலாக விரண்டிரண்டு மாதமொவ் வொன்றாம்.

பருவம் - 4: வாலை, தருணி, பிரவிடை, விருத்தை. இவை பெண்கட்குரிய பருவமாம்.

பருவம் - 7: பேதை, பெதும்பை மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண், இவர்க்கு முறையே வய தெல்லை ஐந்து முதலேழள வும் பேதை, எட்டுமுதற் பதினொன்றளவும் பெதும்பை, பன்னிரண்டு முதற்பதின்மூன் றளவும் மங்கை, பதினான்கு

முதற் பத்தொன்பதளவு மடந்தை, இருபதுமுதலிருபந் தைந்தளவும் அரிவை, இருபத் தாறு முதன் முப்பத்தொன் றளவுந் தெரிவை, முப்பத் திரண்டு முதல் நாற்பதளவும் பேரிளம் பெண், ஆகை யாலொவ்வொரு பருவங் கொண்ட வருடம் 3, 4, 2, 6, 6, 9, இவையே பெண்கட் குரிய பருவமாம்.

பலை - 3: நெல்லிக்காய், தான்றிக் காய், கடுக்காய். இவையே திரிபலை என்ப.

## பா

பா - 4: வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா; மருட்பா வொன்றுகூட்டிப்பாவினம் ஐந்தென்பாருமுண்டு.

பாடை - 18: அங்கம், அருணம், கலிங்கம், கௌசிகம், காம் போசம், கொங்கணம், கோச லம், சாவகம், சிங்களம், சிந்து, சீனம், சோனகம், திரவிடம், துளுவம், பப்பரம், மகதம், மராடம், வங்கம்

பாதகம் - 5: கொலை, பொய், களவு, கட்குடி, குருநிந்தை. இவையே பஞ்சமாபாதகம்.

பாதகம் - 7: சித்தச முன்னதி, அருத்தலோபம், காமம், வைடம்மியம், அசனப்பிரியம், கோபம், அநுட்டணம் இவையே சத்தவிசனம். இவை முறையே அகங்காரம், உலோபம், காமம், பகை, போசனப்பிரியம், காய்தல், சோம்பல்; இவையேமுந் தலைமையான பாதகமெனப் படும்.

பாலை - 7: இசையைக் காண்.

பால் - 5: ஒருவன் ஒருத்தி, பலர், ஒன்று, பல

பால் - 5: முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை, இவற்றுண் மயிரையுச்சியின் முடித்தலே முடி, பக்கன் முடித்தலே கொண்டை, பின்னே செருகல் சுருள், சுருட்டி முடித்தலே குழல், பின்னிவிடுதலே பனிச்சை

பாவபுண்ணியவழக்கம் - 3: செய் தல், செய்வித்தல், உடன்படல்

பாவினம் - 3: தாழிசை, துறை, விருத்தம்

## பி

பிணி - 3: வாதம், பித்தம், சிலேட்டுமம்

பிரபந்தம் - 96 அவையாவன: சாதகம் - திதிநிலை, வாரநி லை, நாண்மீனிலை, யோக நிலை, கரணநிலை, ஓரை நிலை, கிரகநிலை, இவ்வேழ் வகையுறுப்புக் கணிலை யையுஞ் சோதிட நூலா னன்குணர்ந்தவற்றையமைத்தவற் றாற்றலைவற் குறுவன கூறு வது; மற்றும் யுகாதியாண்டு முதலியவுங்கொள்க.

பிள்ளைக்கவி - காப்பு, செங் கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் இவற்றை முறையே யகவல் விருத்தத்தாற் பப்பத்ததாகக் கூறுவதாண் பாற் பிள்ளைக்கவி; இவ்வுறுப் பினுட்கடை மூன்றொழித்துக்

கழங்கு, அம்மானை, ஊசல், என்பவற்றைக் கூட்டி மேற் சொல்லியவாறு கூறுவது பெண்பாற் பிள்ளைக் கவியரம்.

பரணி - போர் முகத்தாயிரங் களிற்றியானையைக் கொன்ற வீரனைத் தலைவனாகக் கொண்டு கடவுள் வாழ்த்துங் கடை திறப்பும் பாலை நில மும் காளி கோயிலும் பேய் களோடு காளியுங் காளியோடு பேய்களுஞ் சொல்லத்தான் சொல்லக் கருதிய தலைவன் சீர்த்தி விளங்கலும் வன் வழி யாகப் புறப் பொருட்டோன்ற வெம்போர் வழங்க விரும்பலு மென்றிவையெல்லாமிருசீரடி மூச்சீரடியொழித் தொழிந்த மற்றைய வடியாக வீரடிப் பகுறாழிசையாற் பாடுவது.

கலம்பகம் - ஒருபோகும், வெண்பாவுங், கலித்துறையு முதற் கவியுறுப்பாக முற்கூறிப் புய வகுப்பு, மதங்கம், அம் மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், கிளி, சித்து, இரங்கல், கைக் கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் என்னுமிப் பதினெட்டு றுப்புக்களுமிடைய மடக்கு, மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரியவிருத்தம், கலிவிருத்தம், கலித்தாழிசை, வஞ்சிவிருத்தம், வஞ்சித்துறை, வெண்டுறை என்னுமிவற்றாலி டையே வெண்பா, கலித்துறை, விரவியந்தாதித் தொடையான் முற்றுறக்கூறுங்காற் றேவற்கு நூறும், அந்தணர்க்குத் தொண் ணூற்றைந்தும், அரசர்க்குத் தொண்ணூறும், வைசியர்க் கைம்பதும், சூத்திரர்க்கு முப்பதுமாகப் பாடுவது.

அகப்பொருட் கோவை - இரு வகைப்பட்ட முதற்பொருளும் பதினான்கு வகைப்பட்ட கருப் பொருளும் பத்து வகைப்பட்ட உரிப்பொருளும் பொருந்திக் கைக்கிளை முதலுற்ற வன் புடைக் காமப்பகுதியவாங் கள வொழுக்கத்தினையுங் கற்பொழுக்கத்தினையுங் கூறு தலேயெல்லையாகக் கட் டளைக் கலித்துறை நானூற்றா றிணை முதலாகத் துறையீ றாகக் கூறப்பட்ட பன்னிரண் டகப் பாட்டுறுப்பும் வழு வின்றித் தோன்றப் பாடுவது; இது வெண்பா, அகவல், கலி, வஞ்சி, வண்ணம் இவற்றானும் வழங்கப்படும்.

ஐந்திணைச்செய்யுள் - புணர்தன் முதலியவைந்துரிப் பொருளும் விளங்கக் குறிஞ்சி முதலிய வைந்திணையினையுங் கூறுவது

வருக்கக்கோவை - அகர முதலாகியவெழுத்து வருக்க மொழிக்கு முதலாமெழுத்து முறையே காரிகைத் துறைப் பாட்டாகப் பாடுவது

மும்மணிக்கோவை - ஆசிரியப் பாவும், வெண்பாவும், நேரசை யும் நிரையசையுங் கொண் டெழுத் தெண்ணிப்பாடுங் கலித்துறையு முறையே தொகை முப்பது பெறவடுக்கி அந்தாதித் தொடையாற் பாடுவது

அங்கமாலை - ஆண் மகனுக் கும் பெண் மகளுக்கு மிக்கென வெடுத்துக் கூறுமவயங்களை வெண்பாவாலாயினும் வெளி விருத்தத்தாலாயினும் பாதாதி

கேசங் கேசாதிபாத முறை பிற ழாது தொடர்வுறப் பாடுவது

அட்டமங்கலம் - கடவுளைப் பாடி யக்கடவுள் காக்கவென வாசிரிய விருத்தமெட்டிலந் தாதித்துக் கூறுவது.

அநுராக மாலை - தலைவன் கனவின்கணொருத்தியைக் கண்டு கேட்டுண்டுயிர்த் திளிமையுறப் புணர்ந்ததைத் தன்னுயிர்ப் பாங்கற்குரைத்த தாக நேரிசைக் கலிவெண்பா வாற் கூறுவது

இரட்டை மணிமாலை - முறையானே வெண்பாவுங் கலித்துறையுமிருபஃதந்தாதித் தொடையான் வருவது, நேரிசை வெண்பாப் பத்தும் ஆசிரிய விருத்தப் பத்து மந்தாதித் தொடையாற் பாடுவது;

இணைமணிமாலை - வெண் பாவு மகவலும் வெண்பாவுங் கலித்துறையுமாக விரண்டிரண் டாக விணைத்தது வெண்பா வகவ லிணைமணிமாலை; வெண்பா கலித்துறை, யிணை மணிமாலையென்பது நூறு நூறு அந்தாதித் தொடை நான்காலும் பாடுவது

நவமணிமாலை - வெண்பா முதலாக வேறுபட்ட பாவும், பாவினமுமாக வொன்பது செய்யுளந்தாதித்துப் பாடுவது

நான்மணிமாலை - வெண்பா வும் கலித்துறையும் விருத்தமு மக வலுமந்தாதித் தொடை யாக நாற்பது பாடுவது

நாமமாலை - அகவலடியுங் கலியடியு மயங்கிய வஞ்சிப் பாவலாண்மகனைப் புகழ்ந்து பாடுவது.

பலசந்தமாலை - பப்பத்துச் செய்யு ளொவ்வோர் சந்தமாக நூறு செய்யுட் கூறுவது.

பன்மணிமாலை - மேற் சொல்லிய கலம்பகத்துள் வரு மொரு போகுமம்மானையு மூசலுமின்றியேனையுறுப்புக் களெல்லா மமையவவ்வாறு கூறுவது. இதையே கலம்பக மாலையென்ப.

மணிமாலை - எப்பொருண் மேலும் வெண்பா விருபதுங் கலித்துறை நாற்பதும் விரவி வருவது

புகழ்ச்சிமாலை - அகவலடி யுங் கலியடியும் வந்து, மயங்கிய வஞ்சிப் பாவான் மாதர்களின் துசீர்மையைக் கூறுவது

பெருமகிழ்ச்சிமாலை - தலைவி யினழகு குண மாக்கஞ் சிறப் பினைக் கூறுவது.

வருக்கமாலை - மொழிக்கு முதலாம் வருக்க வெழுத்தினுக் கொவ்வோர் செய்யுள் கூறுவது.

மெய்க்கீர்த்திமாலை - சொற் சீரடியென்னுங் கட்டுரைச் செய்யுளாற் குலமுறையிற் செய்த கீர்த்தியைக் கூறுவது.

காப்புமாலை - தெய்வங்காத்த லாக மூன்று செய்யுளானும் ஐந்து செய்யுளானும் ஏழு செய்யுளானும் பாடுவது

வேனின் மாலை - வேனிலையு முதிர்வேனிலையுஞ் சிறப் பித்துப்பாடுவது. வசந்தமாலை தென்றலை வருணித்துப் பாடுவது.

தாரகைமாலை - அருந்ததிக்கற் பின் மகளிர்க்குள்ள வியற்கைக் குணங்களை வகுப்பாற் கூறு வது. தூசிப்படையினணியைப் புகழ்ந்த வகுப்பென்பாருமுளர்.

உற்பவமாலை - திருமால்பிறப்புப் பத்தினையு மாசிரியவிருத்தத் தாற் கூறுவது.

தானைமாலை - அகவலோசை யிற்பிறழா தாசிரியப்பாவான் முன்னரெடுத்துச் செல்லுங் கொடிப்படையைக் கூறுவது

மும்மணிமாலை - வெண்பாவுங் கலித்துறையு மகவலு மந் தாதித் தொடையான் முப்பது பாடுவது.

தண்டகமாலை - வெண்பாவான் முந்நூறு செய்யுட் கூறுவது; இது வெண்புணர்ச்சி மாலை யெனவும் படும்.

வீரவெட்சிமாலை - சுத்த வீரன் மாற்றாரூரிற் சென்று பசுநிரை கோடற்கு வெட்சிப்பூமாலை சூடியவண்ணம் போய் நிரை கவர்ந்துவரி னவனுக்கு முன்பு தசாங்கம் வைத்துப் போய் வந்த வெற்றியைப் பாடுவது

வெற்றிக்கரந்தைமஞ்சரி - பகைவர் கொண்ட தந்நிரை மீட்போர் கரந்தைப் பூமாலை சூடிப் போய் மீட்பதைக் கூறுவது

போர்க்கெழுவஞ்சி - மாற்றார் மேற் போர்குறித்துப் போகின்ற வயவேந்தர் வஞ்சிப் பூமாலை சூடிப் புறப்படும் படை யெழுச்சிச் சிறப்பையாசிரி யப்பாவாற் கூறுவது.

வரலாற்றுவஞ்சி - குலமுறை பிறப்பு முதலிய மேம்பாட்டின் பல சிறப்பையுங் கீர்த்தியையும் வஞ்சிப்பாவாற் கூறுவது.

செருக்களவஞ்சி - போர்க்களத் திலே மனிதருடலையும் யானை குதிரையுடலையும் நாயும் பேயும் பிசாசமுங் கழுகும் பருந்துங் காகமுந் தின்று களித் தாரவாரமாயிருக்கப் பூதமும் பேயும் பாடியாட விங்கன மிருந்த சிறப்புப்பாடுவது. இதையே பறந்தலைச் சிறப்புப் பாட்டுமென்ப.

காஞ்சிமாலை - மாற்றாரூர்ப் பறத்துக்காஞ்சிப்பூமாலைசூடி யூன்றலைக் கூறுவது

நொச்சிமாலை - புறத்தூன்றிய மாற்றார்க்கோடலன்றி நொச்சிப்பூ மாலை சூடித்தன் மதில் காக்குந்திறங் கூறுவது

உழிஞைமாலை - மாற்றாரதூர்ப் புறஞ்சூழ வுழிஞைப்பூமாலை சூடிப் படைவளைப்பதைக் கூறுவது

தும்பைமாலை - மாற்றாரோடு தும்பைப்பூமாலை சூடிப் பொருது மாலைவதைக் கூறுவது

வாகைமாலை - மாற்றாரை வென்று புகழ்படைத்து வாகை சூடுவதை யாசிரிப்பாவாற் கூறுவது

வாதோரணமஞ்சரி - கொலைபுரி மதயானையை வயப்படுத்தி யடக்கினவர்கட்குமெதிர் பொருகளிற்றை வெட்டியடக் கினவர்கட்கும் பற்றிப்பிடித்துச் சேர்த்தவர்கட்கும் வீரப்பாட் டின் சிறப்பை வஞ்சிப் பாவாற் றொடுத்துப் பாடுவது.

எண் செய்யுள் - பாட்டுடைத் தலைவன தூரினையும் பெயரி னையும் பத்து முதலாயிர மளவும் பாடி யெண்ணாற் பெயர்பெறுவது

தொகைநிலைச்செய்யுள் - நெடி லடிச்செய்யுளாற்றொகுத்த நெடுந்தொகையும் குறளடிச் செய்யுளாற்றொகுத்த குறுந் தொகையும், கலிப்பாவாற்

றொகுத்த கலித்தொகையும் போல்வன.

ஒலியலந்தாதி - பதினாறு கலையோரடியாகவைத்திங்ஙன நாலடிக்கறுபத்து நாலுகலை வகுத்துப் பலசந்தமாக வண்ண முங் கலைவைப்புந் தவறாமலந் தாதித்து முப்பது செய்யுட் பாடுவது, சிறுபான்மையெட்டுக் கலையானும் வரப்பெறும்; அன்றியும் வெண்பா வகவல் கலித்துறையாகியவிம் மூன்றை யும் பப்பத்தாகவந்தாதித்துப் பாடுவதுமாம்

பதிற்றந்தாதி - பத்துவெண்பா பத்துக் கலித்துறைப் பொருட் டன்மை தோன்ற வந்தா தித்துப்பாடுவது

நூற்றந்தாதி - நூறுவெண்பாவி னாலேனு நூறு கலித்துறை யினாலேனு மந்தாதித்தொடை யாற்கூறுவது

உலா - இளமைப்பருவமுற்ற தலைமகனைக் குலங்குடிப் பிறப்பு மங்கலம் பரம்பரை யிவற்றானின்னானென்பது தோன்றத் தலைமையாய் மாதர் நெருங்கிய வீதியிடத் தவன் பவனிவரப் பேதை முதலியவேழு பருவப் பெண் களுங் கண்டு தொழ வுலா வந்ததாக நேரிசைக்கலிவெண் பாவாற் கூறுவது

உலாமடல் - கனவிலொரு பெண்ணைக்கண்டு கலவி யின்ப நுகர்ந்தோன் விழித்த பின்னவள் பொருட்டு மடலூர் வேனென்பதைக் கலிவெண்பாவான் முற்று வித்துப் பாடுவது

வளமடல் - அறம்பொருளின்ப மாகியவம் முக்கூறுபாட்டின் பயனை எள்ளி மங்கையர் திறந்துறுங் காமவின்பத் தினையே பயனெனக் கொண்டு, பாட்டுடைத் தலைமகனியற் பெயர்க்குத் தக்கதை யெதுகையாக நாட்டியுரைத்தவ் வெதுகை படத் தனிச்சொலின்றி யின்னிசைக் கலிவெண்பா வாற் றலைமகனிரந்து குறை பெறாது மடலேறுவதா யீரடி யெதுகை வரப் பாடுவது

ஒருபாவொருபஃது - அகவலும் வெண்பாவுங் கலித்துறையு மாய விவற்றிலொன்றனாலந் தாதித் தொடையாற் பத்துப் பாடுவது. இருபாவிருபஃது - பத்து வெண்பாவும் பத்தகவலு மந்தா தித்தொடையானிரு பதினைந்து வருவது.

ஆற்றுப்படை - அகவற்றபாவால் விறலி, பாணர், கூத்தர், பொருந ரிந்நால்வரிலொருவர், பரிசிற்குப் போவாரைப் பரிசு பெற்று வருவாராற்றிடைக் கண்டு தலைவன் கீழ்த்தியுங் கொடையுங் கொற்றமுஞ் சொல்வது கண்படைநிலை - அரசருமரசரைப் போல்வாரு மவைக்கணெடிது வைகியவழி மருத்துவரு மமைச்சரு முதலி யோரவர்க்குக்கண்டுயில் கோடலைக்கருதிக் கூறுவது

துயிலெடைநிலை - தன்வலியாற் பாசறைக் கண்ணொரு மனக் கவற்சியின்றித் துயின்றவர சர்க்கு நல்ல புகழைக் கொடுத் தலைக்கருதிய சூதர் துயி லெழுப்புதலாகப் பாடுவது

பெயரின்னிசை - பாட்டுடைத் தலைவன் பெயரினைச்சார இன்னிசை வெண்பாவாற்

றொண்ணூறேனும் எழுப
தேனும் ஐம்பதேனும் பாடுவது
ஊரின்னிசை - பாட்டுத் தலை
வனூரினைச்சார வின்னிசை
வெண்பாவாற் றொண்ணூறே
னும் எழுபதேனு மைம்பதே
னும் பாடுவது
பெயர்நேரிசை - பாட்டுடைத்
தலைவன் பெயரினைச்சார
நேரிசை வெண்பாவாற்
றொண்ணூறேனு மெழுப
தேனு மைம்பதேனும்
பாடுவது
ஊர்நேரிசை - பாட்டுடைத்
தலைவனூரினைச்சார
நேரிசை வெண்பாவாற்
றொண்ணூறேனு மெழுப
தேனு மைம்பதேனும்
பாடுவது
ஊர்வெண்பா - வெண்பாவா
லூரைச் சிறப்பித்துப் பத்துச்
செய்யுட் கூறுவது
விளக்குநிலை - வேலும்வேற்றலை
யும் விலங்காதோங்கியவாறு
போலக் கோலொடு விளக்கு
மொன்று பட்டோங்குமா
றோங்குவதாகக் கூறுவது.
புறநிலை - நீ வணங்குந் தெய்வ
நின்னைப் பாதுகாப்பநின்
வழி மிகுவதாகவெனக் கூறுவது.
கடைநிலை - சான்றோர்
சேணிடை வருதலாற் பிறந்த
வருத்தந்தீர வாயில் காக்கின்ற
வனுக்கென் வரவினைத்
தலைவற்கிசையெனக் கடைக்
கணின்று கூறுவது.
கையறுநிலை - கணவனோடு
மனைவி கழிந்துழியவர்கட்
பட்ட வழிவுப் பொருளெல்
லாம் பிறர்க்கறிவுறுத்தித்
தாமிறந்து படா தொழிந்த
வாயத்தாரும்பரில் பெறும்
விறலியருந்தனிப் படருழந்த
செயலறு நிலையைக் கூறுவது.
தசாங்கப்பத்து - நேரிசை
வெண்பாவாலரசன் படைத்த
தசாங்கத்தினைப் பத்துச்
செய்யுளாற் கூறுவது.
தசாங்கத்தயல் - அரசன் றசாங்
கத்தினை யாசிரிய விருத்தம்
பத்தினாற் பாடுவது
அரசன் விருத்தம் - பத்துக்கலித்
துறையுமுப்பது விருத்தமுங்
கலித் தாழிசையுமாக மலை
கடல் நாட்டு வருணனையுநில
வருணனையும் வாண்மங்
கலமுந் தோண்மங்கலமும்
பாடி முடிப்பது. இது முடி
புனைந்த வேந்தற்காம்.
நயனப்பத்து - கண்ணினைப்
பத்துச் செய்யுளாற் கூறுவது
பயோதரப்பத்து - முலையினைப்
பத்துச் செய்யுளாற் கூறுவது
பாதாதிகேசம் - கலிவெண்பா
வாலடி முதன் முடியளவும்
சருவாங்கமாகக் கூறுவது
கேசாதிபாதம் - கலிவெண்பா
வால் முடிமுதல் அடியளவும்
சருவாங்கமாகக் கூறுவது
அலங்கார பஞ்சகம் - வெண்பா,
கலித்துறை, அகவல், ஆசிரிய
விருத்தம், சந்த விருத்தமிவ்
வகையே மாறிமாறி நூறு
செய்யுளாக வந்தாதித்துப்
பாடுவது
கைக்கிளை - ஒருதலைக் காமத்
தினை யைந்து விருத்தத்தாற்
கூறுவது. அன்றி வெண்பா
முப்பத்திரண்டு செய்யுளாற்
கூறுவதுமாம்.
மங்கலவள்ளை - உயர்குலத்
துதித்த மடவரலை வெண்பா
வொன்பதாலும் வகுப்பொன்ப
தாலும் பாடுவது.

தூது .- ஆண்பாலும் பெண் பாலும் அவரவர் காதல் பாணன் முதலிய உயர்திணை யோடுங் கிள்ளை முதலிய வஃறிணையோடுஞ்சொல்லித் தூதுபோய் வாவெனக் கலி வெண்பாவாற் கூறுவது.

நாற்பது - காலமுமிடமும் பொருளுமாகிய விவற்று ளொன்றனை நாற்பது வெண்பாவாற் கூறுவது.

குழமகன் - கலிவெண்பாவான் மாதர் கடங்கையிற் கண்ட விளமைத் தன்மையுடைய குழ மகனைப் புகழ்ந்து கூறுவது.

தாண்டகம் - இருபத்தேழெழுத்து முதலாக வுயர்ந்தவெழுத்தடி யினவாயெழுத்துங் குருவு மிலகுவுமொந்துவந்தன அளவி யற்றாண்டக மெனவும், எழுத் தொவ்வாது மெழுத்தல் கொவ் வாதும்வந்தன அளவழித் தாண்டகவெனவும் படும்.

பதிகம் - ஒரு பொருளைக் குறித்துப் பத்துச் செய்யுளாற் கூறுவது

சதகம் - அகப்பொரு ளொன்றன் மேலாதல் புறப் பொருளொன் றன் மேலாதல் கற்பித்து நூறு செய்யுட் கூறுவது.

செவியறிவுறூஉ - பொங்குத லின்றிப் புரையோர் நாப் பண்ணவிதல் கடனெனவவை யடக்கியப்பொருளுற வெண்பா முதலுமாசிரியமிறு தியுமாகக் கூறுவது.

வாயுறை வாழ்த்து - வேம்புங் கடுவும்போல்வனவாகிய வெஞ் சொற்கண் முன்னர்த்தாங்கக் கூடாதாயினும் பின்னர்ப் பெரிதும் பயன்றருமென மெய்ப்பொருளுற வெண்பா முதலுமாசிரிய மிறுதியுமாகக் கூறுவது.

புறநிலைவாழ்த்து - வழிபடு தெய்வநிற் புறங்காப்பப் பழிதீர் செல்வமோ டொரு காலைக் கொருகாற் சிறந்து பொலிவா யென வெண்பா முதலுமாசிரிய மிறுதியுமாகப் பாடுவது,

பவனிக்காதல் - உலாக் காட்சி யாலெய்திய காமமிகுதியா லவை பிறரொடு முரைத்து வருந்துவது.

குறத்திப்பாட்டு - தலைவன் பவனிவரவு, மகளிர்காமுறுதல், மோகினி வரவு, உலாப்போந்த தலைவனைக் கண்டு மயங்கல், திங்கள் தென்றல் முதலியவு வாலம்பனம், பாங்கியுற்ற தென்னென வினவல், தலைவி பாங்கியோடுற்றது கூறல், பாங்கி தலைவனைப் பழித்துக் கூறல், தலைவி தலைவனைப் புகழ்ந்து கூறல், தலைவி பாங்கியைத் தூதுவேண்டல், தலைவி பாங்கியோடு தலை வனடையாளங்கூறல், குறத்தியை மலைவள முதலிய வினவல், குறத்தி மலைவள நாட்டுவள முதலிய கூறல், தலைவன்றலவளங்களை வள முதலிய கூறல், குறிசொல்வி வந்தமை கூறல், தலைவி குறி வினவல், குறத்தி தெய்வம் பராவல், குறி தேர்ந்து நல்வரவு கூறல், தலைவி பரிசிலுதவி விடுத்தல், குறவன் வரவு, புள் வரவுகூறல், கண்ணிகுத்தல், புட்படுத்தல், குறத்தியைக் காமுற்றத் தேடல், குறவன் பாங்கனொடு குறத்தியடை யாளங்கூறல், குறத்தியைக் கண்ணுறல், குறவணி முதலிய

கண்டையுற்று வினவலுமாண்டாண்டு குறத்தி விடை கூறலுமாகக்கூறல், பெரும்பான்மையுமிவ்வகையுறுப்புக்களா அகவல், வெண்பா, தரவு, சொச்சகம், கலித்துறை, கலிநெடில் விருத்தம், கலிவிருத்தம், இச்செய்யுளிடைக்கிடை கூறிச்சிந்து முதலிய நாடகத் தமிழாற் பாடுவது.

உழத்திப்பாட்டு - கடவுள்வணக்க முறையே மூத்தபள்ளியிளைய பள்ளி குடும்பன் வரவோடவன் பெருமை கூறல், முறையேயவர் வரலாறு, நாட்டுவளன், குயிற் கூக்கேட்டல், மழைவேண்டிக் கடவுட் பரவல், மழைக்குறி யோர்தல், ஆற்றின் வரவு, அதன் சிறப்புக்காண்டலிவற்றிற்கிடையகப் பொருட்டுறையுங் கூறிப் பண்ணைத் தலைவன் வரவு பள்ளிகளிருவர் முறையீடு, இளையாளையவனுரப்பல், பள்ளன் வெளிப்படல், பண்ணைச் செயல் வினவல் அவனது கூறல், ஆயரை வருவித்தல், அவர்வரல், அவர் பெருமை கூறல், மூத்தபள்ளி முறையீடு, குடும்பன் கிடையிலிருந்தான் போல் வரல், அவனைத் தொழுவின் மாட்டடல், அவன் புலம்பல், மூத்த பள்ளியடிசிற்கொடுவரல், அவனவளோடு கூறல், அவனவளை மன்னித்தல், கேட்க வேண்டல் அவன் மறுத்தல், அவன் சூளுறல், அவளவனை மீட்க வேண்டிப் பண்ணைத் தலைவனைப்பரவல், விதை முதலிய வளங்கூறல், உழவுருழல், காளை வெருளல், அது பள்ளனைப் பாய்தல், பள்ளிகள் புலம்பல், அவனெழுந்துவித்தல், அதைப் பண்ணைத் தலைவற்கறிவித்தல், நாற்று நடல், விளைந்தபிற் செப்பஞ் செயல், நெல்லளத்தல், மூத்த பள்ளி முறையீடு, பள்ளிகளுளொருவர்க் கொருவ ரேசலென விவ்வுறுப்புக்களுறப் பாட்டுடைத் தலைவன் பெருமை யாங்காங்கு தோன்றச் சிந்தும் விருத்தமும் விரவிவர விவற்றாற் பாடுவது

ஊசல் - ஆசிரியவிருத்தத்தானாதல்; கலித்தாழிசையானாதல் சுற்றத்தோடும் பொலிவதாக, ஆடிரூசல், ஆடாமோவூச லென்றிடக் கூறுவது

எழுகூற்றிருக்கை - ஏழறையாக்கிக் குறுமக்கண் முன்னின்றும் புக்கும் போந்தும் விளையாடும் பெற்றியால் வழுவாமையா லொன்றுமுதலாக வேழிறுதியாக முறையானே பாடுவது.

கடிகைவெண்பா - தேவரிடத்து மரசரிடத்து நிகழுங் காரியங் கடிகையளவிற் றோன்றி நடப்பதாக முப்பத்திரண்டு நேரிசை வெண்பாவாற் கூறுவது

சின்னப்பூ - நேரிசைவெண்பாவாலரசனது சின்னமாகிய தசாங்கத்தினைச் சிறப்பித்து விரித்து நூறு, தொண்ணூறு, எழுபது ஐம்பது, முப்பது என்னுமெண்படக் கூறுவது

விருத்தவிலக்கணம் - வில், வாள், வேல், செங்கோல், யானை, குதிரை, நாடு, ஊர், கொடை, இவ்வொன்பதினையும் பப்பத்து விருத்தத்தாலொன்பது வகையுறப் பாடுவது.

முதுகாஞ்சி - இளைமைகழித் தறிவு மிககோரிளைமை கழி யாத அறிவின் மாக்கட்குக் கூறுவதாம்

இயன்மொழிவாழ்த்து - இக்குடிப் பிறந்தோர்க்கெல்லாமிக் குணமியல்பென்றுமவற்றை நீயுமியல்பாகவுடையையென்று முன்னோர்போல நீயுமியல் பாக வீயென்று முயர்ந்தோ ரவனை வாழ்த்துவதாகக் கூறுவது

பெருமங்கலம் - நாடோறுந்தான் மேற்கொள்கின்ற சிறை செய் தன் முதலிய செற்றங்களைக் கைவிட்டுச் சிறை விடுதன் முதலிய சிறந்த தொழில்கள் பிறந்ததற்குக் காரணமான நாளிடத்து நிகழும் வெள்ள ணியைக் கூறுவது.

பெருங்காப்பியம் - தெய்வ வணக்கமுஞ் செயப்படு பொரு ளுமிவற்றிற்கியைய வாழ்த்து முன்னுளதாயறம் பொரு ளின்பம் வீடென்னு நாற் பொருளும் பயக்கும் நெறி யுடைத்தாய் நிகரில்லாத் தலை வனையுடைத்தாய் மலையுங் கடலு நாடுநகரும் பருவமு மிருசுடர்த் தோற்றமுமென்றி வற்றின் வளங்கூறுதலு மணமு முடிகவித்தலும் பொழில் விளையாட்டும் நீர் விளை யாட்டும் உண்டாட்டும் மகப் பேறும் புலவியுங் கலவியு மென்றிவற்றைப் புகழ்தலும், மந்திரமுந் தூதுஞ் செலவும் போரும் வென்றியுமென்றி வற்றைத் தொடர்ந்து கூறலு மாகியவிவை முறையே தொடர் வுறச் சருக்கமிலம்பகம் பரிச் சேதமென்னும் பகுதியை யுடைத்தாய் வீர முதலிய சுவையுமவற்றை விளக்குங் கருத்து விளங்கக் கற்றோராலி யற்றப்படுவதாம், நாற் பய னொழிந்தேனையவுறுப்பு களுட் சில குறைந்தியலினுங் குற்றமின்று.

சிறு காப்பியம் - அறம் பொரு ளின்பம் வீடென்னு நான்கனு ளொன்றும் பலவுங் குறைந் தேனையவுறுப்புக்கண் மேற் கூறியவாறியல்வது.

பிறப்பு - 7: தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம். இவற்றின் யோனிபேதமெண்பத்தினான்கு நூறாயிரம், அவையாவன: தேவர் பதினான்கு நூறாயிரம், மக்களொன்பது நூறாயிரம், விலங்கு பத்து நூறாயிரம், புள் பத்து நூறாயிரம், ஊர்வன பதினொரு நூறாயிரம், நீர் வாழ்வன பத்து நூறாயிரம், தாவரமிருபது நூறாயிரம்; அன்றித் தேவர் பதினாறு நூறாயிரமெனவுந் தாவரம் பதினெட்டு நூறாயிரமெனவுங் கூறுப.

## பு

புண்ணியத் தோற்றம் - 4: தவம், ஒழுக்கம், கொடை, கல்வி

புண்ணியம் - 7: நகங்கிருதி, தானம், விரதம், சிநேகம், நயபோசனம், கமை, உற்சாகம்

புண்ணியம் - 9: எதிர்கொள்ளல், பணிதல், அசனத் திருத்துதல், தாள்கழுவல், அருச்சித்தல், தூபங்கொடுத்தல், தீபங்காட் டல், புகழ்தல், அமுதமேந்தல்.

இவை துறந்தோர்க்குச் செய்வனவாம்

புரம் - 3: இருப்புமதில், வெள்ளி மதில், பொன்மதில். இவையே முப்புரம்

புராணம் - 18: மச்சியம், கூர்மம், வராகம், வாமனம், பிரமம், வைணவம், பாகவதம், சைவம், இலிங்கம், பௌடிகம், நாரதீயம், காரூடம், பிரமகைவர்த்தம், காந்தம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரமாண்டம், பதுமம்; இவற்றுள் சைவம், காந்தம், இலிங்கம், கூர்மம், வாமனம், வராகம், பௌடிகம், மச்சியம், மார்க்கண்டேயம், பிரமாண்டம் இவை பத்துஞ் சிவபுராணம்; நாரதீயம், பாகவதம், காரூடம், வைணவம் இவை நான்கும் விட்டுணு புராணம்; பிரமம், பதுமம் இவை இரண்டும் பிரமபுராணம்; பிரமகைவர்த்தம் சூரியபுரணம், ஆக்கியநேயம் அக்கினிபுராணம். அன்றியும் உபபுராணம் 18 - உசனம், கபிலம், காளிகம், சனற்குமாரம், சாம்பவம், சிவதன்மம், சௌரம், துருவாசம், நந்தி, நாரசிங்கம், நாரதீயம், பராசரம், பார்க்கவம், ஆங்கிரம், மாரீசம், மானவம், வாசிட்டலிங்கம், வாரணம் இவை யவ்வவர் பெயரால் விளங்கும்

புரி - 7: அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்திகை, துவாரகை

புலமையோர் - 4: கவி, கமகன், வாதி, வாக்கி; இவருள் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரமென்னும் நாற்கவிகளைப் பாடுவோன் கவி; அரும்பொருளைச் செம்பொருணடையாகக் காட்டி விவகரிப்போன் கமகன், காரணமு மேற்கோளுமெடுத்துக்காட்டிப் பிறன் கோண் மறுத்துத் தன்மதம் நிறுத்துபவன் வாதி, அறம் பொருள் இன்பம் வீடெனு நாற்றிறங்களைக் கேட்க, வேட்க விரித்துக் கூறுவோன் வாக்கி

புலன் - 5: சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்

## பூ

பூ - 4: கொடிப்பூ, கோட்டிப்பூ, நீர்ப்பூ, புதற்பூ

பூதம் - 5: நிலம், நீர், தீ, காற்று, விசும்பு

## பெ

பெண்வகை - 4: பதுமினி, சித்தினி, சங்கினி, அத்தினி

பெரியோரியல்பு - 7: அறம், பொருள், இன்பம், அன்பு, புகழ், மதிப்பு, பொறுமை

## பே

பேதம் 3: - சுகதபேதம் சுசாதிபேதம், விசாதிபேதம் அவை யாவன: மரத்துக் கிலையரும்பு பூ காய் கனி முதலிய சுகத பேதம், மரத்துக்கு மறுமரஞ் சுசாதிபேதம், மரத்துக்குக் கல் விசாதிபேதம்

பேறு - 16: புகழ், கல்வி, வலி, வெற்றி, நன்மக்கள், பொன்,

நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளைமை, துணிவு, நோயின்மை, வாழ் நாள்

## பொ

பொருள் - 2: கல்விப்பொருள், செல்வப்பொருள்

பொருள் - 4: அறம், பொருள், இன்பம், வீடு

பொழுது - 6: மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு. இவையே அத்தமன கால முதலொவ்வொன்று பப்பத்து நாழிகையாக முறையே கொள்க.

பொறி - 3: மனம், வாக்கு, காயம்

பொறி - 5: மெய், வாய், கண், மூக்கு, செவி

பொன்வகை - 4: ஆடகம், கிளிச் சிறை, சாதரூபம், சாம்பூந்தம்

## போ

போகபூமி - ஆதியறிவஞ்சம், நல்லறிவஞ்சம், ஏமதவஞ்சம், ஏமவஞ்சம், தேவகுருவம், உத்தரகுருவம்

போகம் - 8: பெண், ஆடை, அணி கலம், போசனம், தாம்பூலம், பரிமளம், பாட்டு, பூவமளி

போதப்பிரகாரம் - 3: உத்தேசம், இலக்கம், பரீக்கை. அவை யாவன: தான்விவரிக்கும் பொருளைப் பெயர் மாத் திரங்கூறல் உத்தேசம், அப் பொருளின் சிறப்புத் தன்மை கூறல் இலக்கணம், அப் பொருளிலிவ்விலக்கண முண்டோவின்றோவெனப் பார்த்தல் பரீக்கை

## ம

மகளிரான்மலர்மரம் - 10: மகிழ மரஞ்சுவைக்க, எழிலைம் பாலை மரம் நட்புற, பாதிரி மரம் நிந்திக்க, முல்லைக்கொடி நகைக்க, புன்னையாட, குரா வணைக்க, அசோகுதைக்க, குருக்கத்திபாட, மராபார்க்க, சண்பகம் நிழல் படத் தளிர்த் துப்பூப்பனவாம்.

மங்கலச்சொல் - 22: திரு, யானை, தேர், பரி, கடல், மலை, மணி, பூ, புகழ், சீர், மதி, நீர், எழுத்து, பொன், ஆரணம், உலகம், பரிதி, அமிர்தம். இவற்றின் பரியாயப் பெயரும் பிறவுமாம்.

மங்கலம் - 8: சாமரம், நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, கொடி, இணைகயல். இவையே யட்டசுபமெனவும் படும்.

மங்களாசரணை - 3: வாழ்த்து, வணக்கம், செய்யப்படுபொருள்

மணம் - 8: பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம்; இவற்றுள் பிரமச்சாரிக்குக் கன்னியைத் தீமுன்னர் கொடுப் பது பிரமமணம், தலை மகளி னத்தார் வேண்டத் தலை மகனினத்தாருட்பட்டவளைத் தீ முன்னர்க் கொடுப்பது பிரசாபத்தியமணம், ஒன்றி ரண்டு பசுவுமெருதும் வாங்கிக் கொண்டு கன்னியைத் தீ

முன்னர்க் கொடுப்பதாரிட மணம், வேள்வியால் வந்த கன்னியைத் தீ முன்னர்க் கொடுப்பது தெய்வமணம், கொடுப்பாருங் கேட்பாரு மின்றியிருவருந் தனியிடத் தெதிர்ப்பட்டுத் தாமே கூடு வது காந்தருவமணம், பெண் ணுக்குப் பொன்பூட்டிச் சுற்றத் தார்க்குப் பொன்வேண்டுவன கொடுத்துக்கொள்வ தசுர மணம், பெண்ணும் பெண் ணினத்தாரு முடன்படாமல் வலிதிற்கொள்வது ராக்கத மணம், துயின்றாளைச் சென்று கூடுவது பைசாசமணம்

மணி - 9: கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம்

மண்டலம் - 3: அக்கினி, மண்டலம், ஆதித்தமண்டலம், சந்திரமண்டலம்

மண்டலம் - 7: வாயுமண்டலம், வருணமண்டலம், சந்திர மண் டலம், நட்சத்திர மண்டலம், அக்கினிமண்டலம், திரிசங்கு மண்டலம்

மரபு - தந்தைவழி, தாய்வழி

மருத்துக்கள் 7: - கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, கீழ், மேல், பலயோனியுயிர்

மலம் - 3: ஆணவம், மாயை, காமியம்

மலை - கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, அன்றிக்கந்தமாதனங் கூட்டியெட்டெனவும் படும்.

மன்மதன்கணை - 5: வனசம், சூதம், அசோகு, முல்லை, நீலம்; இவற்றின்பெயர் முறையே, உன்மத்தம், மதனம், சம்போகம், சந்தாபம், வசிகரணம், இவை செய்யும் வதை சுப்பிரயோகம், விப்பிர யோகம், சோகம், மோகம், மரணம். அவையாவன: சுப்பிரயோகம் சொல்லு நினைவும், விப்பிரயோகம் வெய்துயிர்த்திரங்கல், சோகம் வெதுப்புந்துய்ப்பன தெவிட்ட லும், மோகம் அழுங்கலு மொழி பிதற்றலும், மரணம் அயர்ப்பும் மயக்கமும்

## மா

மாதம் 12: சைத்திரம், வைசாகம், கேட்டம், ஆசாடம், சிராவ ணம், பாத்திரபதம், ஆசுவீசம், கார்த்திகம், மார்க்கசிரம், புசியம், மாகம், பாற்குனம்; இவை முறையே சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த் திகை, மார்கழி, தை, மாசி, பங்குனி; இவற்றிற்கு முறையே யுரிய நட்சத்திரம்: சித்திரை, விசாகம், மூலம், உத்திராடம், அவிட்டம், பூரட்டாதி, அச்சு வினி, கார்த்திகை, மிருக சீரிடம், பூசம், மகம், உத்திரம்.

மாதர்கள் - 7: அபிராமி, மாயேச் சுவரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி; இவர்க்கு முறையே வாகனம் அன்னம், இடபம், மயில், கருடன், சீயம், யானை, பேய்; முறையே யாயுதம் மறை,

பினாகம், வேல், ஆழி, கலப்பை, வச்சிரம், சூலம்

மாயை - 5: தமம், மாயை, மோகம், அவித்தை, அநிர்தம். அவை யாவன: சிவசைதன்னியத்தை மறைக்கையாற்றமம், ஜகத்து ரூபமான வன்னிதாத் தோற்றத் துக்குக் காரணமாகையான் மாயை, விபரீத ஞான முண் டாக்குகையான் மோகம், உணர்வழிக்கையாலவித்தை, சத்துருபத்துக் கன்னியமா கையாலநிர்தம்

## மு

முகம் - 14: அஞ்சிதம், அதோ முகம், ஆகம்பிதம், பிரகம் பிதம், ஆலோலிதம், உலோலி தம், உத்துவாகிதம், சமம், சௌந்தரம், துதம், விதுதம், பராவிருத்தம், பரிவாகிதம், திரச்சீனம்; இவற்றுள், வருத்த மாற்றாதிரு தோண்மேற் றலை சாய்த்த லஞ்சிதமுகம், தலை குனிந்து பார்த்தலதோமுகம், சம்மதித்தற்கு மேல்கீழ் தலை யாட்டலாகம்பித முகம், அதி சயத்தாற் சிறிதாய்த் தலை யாட்டல் பிரகம்பிதமுகம், ஆசையான் மலர்ந்த முகமா யொருவனை யழைத்தலா லோலித முகம், சிந்தையா லொரு தோண்மேற் றலை சாய்த்தலுலோலிதமுகம், தலையண் ணாந்துபார்த்த லுத்துவாகித முகம், தியானிப் பதுபோலத் தலையசையா திருத்தலே சம முகம், பூரித்த மகிழ்ச்சியால் மலர்ந்தமுகங் காட்டல் சௌந்தர முகம், வேண்டாததற் கிடம் வலந் தலையாட்டலே துதமுகம், உணவணி முதலிய வேண் டாமைத் தலைநடுக்கலே விதுதமுகம், வேண்டாததற்கு முகந்திருப்பலே பராவிருத்த முகம், மதத்தாலொருபுறஞ் சாய்ந்த தலையைச் சிறிதாகச் சுற்றியாட்டல் பரிவாகிதமுகம், நாணத்தாற்றலையாட்டலே திரச்சீன முகம்

முத்திவிக்கினம் - 3: அறியாமை, ஐயம், திரிபு

முத்துச்சனிப்பு - 20: மதி, மேகம், சங்கு, சிப்பி, மீன், நந்து, முதலை, உடும்பு, தாமரை, வாழை, கமுகு, கரும்பு, செந் நெல், மூங்கில், யானைக்கொம்பு, பன்றிக்கொம்பு, பசுவின் பல், நாகம், கொக்கு, நங்கையர் கழுத்து

மும்மை - 3: உம்மை, இம்மை, மறுமை

முனிவர் - 7: அத்திரி, ஆங்கிரசன், கௌதமன், சமதக்கினி, பரத்து வாசன், வசிட்டன், விசுவா மித்திரன்; அன்றியும் அகத்தி யன், ஆங்கிரசன், கௌதமன், காசிபன், புலத்தியன், மார்க் கண்டன், வசிட்டன் என்பர்.

முனிவர் - 31: அகத்தியன், அத் திரி, ஆங்கிரசன், இரணியன் மாமுனி, உரோமமாமுனி, ஏரண்டமாமுனி, கலைக் கோட்டு மாமுனி, காசிபன், கௌதமன், சத்தகூன்முனி, சச்சிதானந்தன், சமதக்கினி, சனகன், சனற்குமாரன், சுகன்,

ததிமகாமுனி, துருவாசன், நாரதன், பதஞ்சலி, பரத்துவாசன், பராசரன், பற்பாமுனி, பிருகு மாமுனி, பினாகிமாமுனி, புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன், வான்மீகன், விசுவாமித்திரன், வியாக்கிரபாதன், வியாசன்

## மூ

மூர்த்தம் - 8: பூமி, நீர், தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா

மூலம் - 10: கண்டங்கத்திரிவேர், சிறுவழுதுணைவேர், சிறுமல்லி வேர், பெருமல்லிவேர், நெருஞ்சிவேர் இவ்வைந்துஞ் சிறு பஞ்சமூலமென்ப; வில்வவேர், பெருங்குமிழம்வேர், தழுதாழைவேர், பாதிரிவேர், வாகைவேர் இவ்வைந்தும் பெரும்பஞ்சமூலமென்ப.

## மெ

மெய்ப்பரிசம் - 8: ஊன்றல், கட்டல், குத்தல், தடவல், தட்டல், தீண்டல், பற்றல், வெட்டல். இவை மெய்ப்பொறியாற் செயப்படுந் தொழில்

## மே

மேகம் - 7: சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருணம். இவை பொழிவன முறையே மணி, நீர், பொன், பூ, மண், கல், தீ

## மொ

மொழி - 3: மெய்கூறல், புகழ்கூறல், பழிகூறல்

## யா

யாகம் - 5: பிரமம், தெய்வம், பூதம், பிதிர், மானுடம். இவற்றுள் வேதமோதல் பிரமயாகம், ஓமம் வளர்த்தலே தெய்வயாகம், பலியீதல் பூதயாகம், தர்ப்பணமுடித்தல் பிதிர்யாகம், இரப்போர்க்குணவு முதலிய வீதலே மானிடயாகம்

யாகம் - 21: அக்கினிட்டோமம், அத்தியக்கினிட்டோமம், உத்தியம், சோடசீ, வாசபேயம், அதிராத்திரம், அப்தோரியாமம், அக்கினியாதேயம், அக்கினிகோத்திரம், தரிசபூரணமாசம், சாதுர்மாசியம், நிரூடபசுபந்தம், ஆக்கிரயணம், சௌந்திராமணி, அட்டகை, பார்வனம், சிராத்தம், சிராவணி, ஆக்கிரகாயணி, சைத்திரி, ஆசுவயுசி

யாக்கைக்குறுகுற்றம் - 18: பசி, நீர், வேட்டல், பயம், வெகுளி, உவகை, வேண்டல், நினைப்பு, உறக்கம், நரை, நோய், மரணம், பிறப்பு, மதம், இன்பம், அதிசயம், வியர்த்தல், கேதம், கையறவு

யாழ்வகை - 4: பேரியாழ், சகோடயாழ், மகரயாழ், செங்கோட்டியாழ்

## யு

யுகம் - 4: கிரேதாயுகம், திரேதா யுகம், துவாபரயுகம், கலியுகம்

## யோ

யோகம் - 27: விட்கம்பம், பிரீதி, ஆயுட்மான், சௌபாக்கியம், சோபனம், அதிகண்டம், சுகர் மம், திருதி, சூலம், கண்டம், விருத்தி, துருவம், வியாகாதம், அரிடணம், வச்சிரம், சித்தி, விதிபாதம், வரியான், பரீகம், சிவம், சித்தம், சாத்தியம், சுபம், சுப்பிரம், பிரமம், ஐந்திரம், வைதிருதி; இவை முறையே கம்பம், பிரியம், வாழ்நாள், புண்ணியம், நலம், மாகண்டம், அறம், துணை, சூலம், கண்டம், ஆக்கம், நிலை, அரவு, எக்களிப்பு, வேல், வல்லமை, கொலை, காயம், தாழ்வு, காட்சி, திறம், புகழ், காவல், தெளிவு, பிர்ம்மா, இந்திரன், பேய்; இவற்றுள், கம்பம், கண்டம், அதிகண்டம், சூலம், வியாகாதம், வச்சிரம், விதி பாதம், பரீகம், வைதிருதி, யெனவொன்பதன்றி மற்றவை நல்லன; இவற்றுள்ளுங் கம்பத்தின் மூன்றும், சூலத் திலைந்தும், கண்டத்திலு மதி கண்டத்திலுமாறும், வியா காலத்தி லொன்பதுங்கழித்து நின்ற நாழிகையுமாம்.

## வ

வசுக்கள் - 8: அனலன், அணிலன், ஆபச்சைவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிர பாசன்

வணிகர் குணம் - 8: தனிமை யாற்றல், முனிவிலனாதல், இடனறிந்தொழுகல், பொழு தோடு புணர்தல், உறுவது தெரிதல், இறுவதஞ்சாமை, ஈட்டல், பகுத்தல்.

வண்ணம் - 5: வெண்மை, கருமை, செம்மை, பொன்மை, பசுமை

வருடம் - 60: பிரபவ, விபவ, சுக்கில, பிரமோதூத, பிர சோற்பத்தி, ஆங்கிரச, ஸ்ரீமுக, பவ, யுவ, தாது, ஈச்சுர, வெகு தானிய, பிரமாதி, விக்கிரம, விசு, சித்திரபானு, சுபானு, தாரண, பார்த்திப, விய, இவ் விருபது முத்தமவருடம், சருவ சித்து, சருவதாரி, விரோதி விகிர்தி, கர, நந்தன, விசய, சய, மன்மத, துன்முகி, ஏவிளம்பி, விளம்பி, விகாரி, சார்வரி, பிலவ, சுபகிருது, சோபகிருது, குரோதி, விசுவா வசு, பராபவ இவ்விருபதும் மத்திம வருடம்; பிலவங்க, கீலக, சௌமிய, சாதாரண, விரோதிகிருது, பரிதாபி, பிரமாதீச, ஆனந்த, இராட்சத, நள, பிங்கள, காலயுத்தி, சித்தார்த்தி, இரௌத் திரி, துன்மதி, துந்துமி, உருத் திரோற்காரி, இரத்தாட்சி, குரோதன, அட்சய, இவ் விருபதுமதம வருடம்.

வருணம் - 4: பிர்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர; இவற்றைச் சாதியென்றுங் கூறுப

வள்ளல் - 21: வரையாது கொடுப்போன் வள்ளலென்ப; இவர் முதலிடை கடையென மூவகைப்படுவர்; அவருள் முதலெழுவள்ளல் குமுணன்,

சகரன், சகாரன், செம்பியன், துந்துமாரி, நளன், நிருதி; இடையெழுவள்ளல் அக்குரன், அந்திமான், அரிச்சந்திரன், கன்னன், சந்திமான், சிசுபாலன், தந்தவக்கிரன்; கடையெழுவள்ளல், எழிலி, ஓரி, காரி, நள்ளி, பாரி, பேகன், மலையன்.

## வா

வாசம் - 5: இலவங்கம், ஏலம், கருப்பூரம், சாதிக்காய், தக்கோலம்

வாயில் - 6: கண், காது, மூக்கு, வாய், குதம், குய்யம்

வாயு - 10: பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், நாகன், கூர்மன், கிருதரன், தேவதத்தன், தனஞ்சயன் இவை யுடலினிற்பன; அவையாவன; இதயத்தியங்குவது பிராணன், உச்சாக்கத்தலத்திடை நிற்பதபானன், கந்தரசக்குழியிற் சந்திடை நிற்பது சமானன், நாபியினிற்பதுதானன், சரீர முழுதும் வியாபித்திருப்பது வியானன், நீட்டலு முடக்கலுங் கிளக்கலும் நாகன், உரோமம் புளகித்திமைப்பது கூர்மன், முகத்திடை நின்று தும்மலுஞ்சினமும் வெம்மையும் விளைப்பது கிருதரன், ஓட்டமு மிளைப்பும் வியர்த்தலும் விளைப்பது தேவதத்தன், உயிர் போகினும் போகாதுடலினை வீக்கி வலை கிழித்தகல்வது தனஞ்சயன்

வாரம் - 7: ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி

வானோர் கணம் - 9: அக்கணத்தோராவார், பத்திச்சுவாலகர், ஞானாதிக்கர், பத்திராசனர் நாதகிருத்தியர், சத்துவகர், பலவத்தர், பிராதமிகர், அதிதூதர் தூதர், இவையே நவவிலாச சபையாம். அவை யாவன: பத்திச்சுவாலகர் கடவுளைக்குறித்த பத்தியினாலே சுவாலிக்கிறவர், ஞானாதிக்கர் கடவுளைக்குறித்த ஞானத்திலாதிக்கம் பெற்றவர், பத்திராசனர் கடவுளெழுந்தருளியிருக்குந் தேவ சிங்காதனத்தைப் புகழ்ந்திருப்பவர், இவர் முதலாம் அர்ச்சியப்பிரபுத்துவமுடையோராம்; நாதகிருத்தியர் நாதனுடைய கிருத்தியத்தையவனருளாற் புரிபவர். சத்துவகர் கடவுளருளாற் பற்பல வற்புதங்களைச் செய்யுஞ் சத்துவம் பெற்றவர், சத்திகரென்றுமாம்; பலவத்தர் கடவுட்டிருவுளப்படி யெய்துங் கருமங்கட்கு வருமிடையூற்றை யவனருளாற்றடுக்கும் பலாத்காரம் பெற்றவர். இவரிரண்டாமர்ச்சியப் பிரபுத்துவ முடையோராம்; பிராதமிகர் கடவுட்டிருவுளப்படியே இராச்சிய சம்பந்தமான சாதாரண நன்மைகளை நடத்துந் தலைமை பெற்றவர், அதிதூதர் அதிகப் பிரதான விசேடங்களை யுலகத்தி லறிவிக்கத் தானாதிபதியாக வருபவர்கள், தூதர் மனிதர், பிறந்தகண முதலாகத் தனித்தனியே

யவரவரைப் பாதுகாத்து நன்னெறியினடத்தி மற்றும் பிரதான விசேடங்கட் கனுப்பப் படுவர், இவர் மூன்றாம் அர்ச்சியப் பிரபுத்துவமுடையோர்; அர்ச்சியப் பிரபுத்துவத் திற்கு அதீச்சுரபதவி யென் பாருமுளர்.

வானோர்வரம் - 4: இலகு, சூக்குமம், அட்சயம், பிரகாரம். இவை கனமின்மை, கண்டிப் பின்மை, கேடின்மை, விளக்கம்

## வி

விகாரம் - 6: காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம்; அன்றி இடும்பை, அசூயையோடு எட்டெனவுமாம்.

வித்தியாதத்துவம் - 7: காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை

வித்தைகள் - 14: வேதம் - 4, வேதாங்கம் - 6, மீமாஞ்சை, தருக்கம், புராணம், தரும நூலாகிய வுபாங்கம் - 4

விரை - 5: கோட்டம், துருக்கம், தகரம், அகில், சந்தனம்

வினா - 5: அறியான் வினாவல், அறிவொப்புக் காண்டல், ஐய மறுத்தல், அவனறிவுதான் கோடல், மெய்யவதற்குக் காட்டல்

வினை - 2: நல்வினை, தீவினை

## வீ

வீடுபேறு - 1: முத்திப்பேறு

## வெ

வெற்றி - 8: பகைநிரை கவர்தல், பகைவர் கவர்ந்த தன்னிரை மீட்டல், பகை மேற்செல்லல், வரும்பகை முன்னெதிரூன்றல், தன்னரண் காத்தல், பகையரண் வளைத்தல், பொருத்தல், போர் வெல்லல்; இவற்றிற்கு முறையே வெற்றி மாலை யாவன; வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை

## வே

வேதம் - 4: இருக்கு, தைத்திரியம் சாமம், அதர்வணம், அன்றியு முபவேதம் 4, ஆயுள்வேதம், அருத்தவேதம், தனுர்வேதம், காந்தருவவேதம்

வேதாங்கம், 6: மந்திரம், வியா கரணம், நிகண்டு, சந்தோபி சிதம், நிருதம், சோதிடம்

வேளாண்மைமாந்தரியல்பு - 10: ஆணைவழி நிற்றல், அழிந்தோரை நிறுத்தல், கைக்கடனாற்றல், கசிவகத்துண்மை, ஒக்கல்போற்றல், ஓவாமுயற்சி, மன்னிறைதருதல், ஒற்றுமை கோடல், விருந்துபுறந்தருதல், திருந்தியவொழுக்கம்

## வை

வைசியர் - 3: தனவைசியர், பூவைசியர், கோவைசியர்; இவரே வணிகர், உழவர், இடையர்; இவர்க்கு முறையே தொழில் பொருளீட்டல், பயிர்செய்தல், ஆன்காத்தல்.

வைணவாகமம் 2: பாஞ்ச ராத்திரம், வைகாநசம்

இலக்கத்தொகைமுறை -

1 - ஒருமை, வீடுபேறு

2 - அச்சுவினிதேவர், அறம், ஆயுதவகை, ஆன்மா, இதிகாசம், இருமை, எச்சம், கந்தம், கூத்துவகை, சுடர், தோற்றம், பொருள், மரபு, வினை, வைணவாகமம்.

3 - அரசர், இசை, இடம், ஈச்சுரன் பிரபுத்துவ சாமர்த்தியகுணம், உலகம், கடுகம், காதலர், காலம், குணம், குற்றம், சத்தி, சாத்திரம், சீவதேகம் சீவாவத்தை, சுடர், சூரியசந்திரர் முதலிய வீதி, தமிழ், தானம், தீ, தொழில், நூல், பகை, பக்குவர், பரிச்சேதம், பலை, பாவ புண்ணிய வழக்கம், பாவினம், பிணி, புரம், பேதம், பொறி, போதப்பிரகாரம், மங்களாசரணை, மண்டலம், மலம், முத்திவிக்கினம், மும்மை, மொழி, வைசியர்.

4 - அங்கம், அரண், அளவு, அனுபந்தம், ஆச்சிரமம், இராகத் தகுதி, இழிச்சொல், உண்டி, உபாயம், உரை, ஊறுபாடு, கணக்குவகை, கதி, கரணம், கவி, குணம், கேள்வி, சதுரங்கம், சாதி, சாந்துவகை, சிவ பூசை சொல், தோற்றம், நிலம், நிலை, நூற்பயன், படைவகுப்பு, பண், பதவி, பருவம், பா, புண்ணியத்தோற்றம், புலமையோர், பூ, பெண்வகை, பொருள்; பொன்வகை, யாழ் வகை, யுகம், வருணம், வானோர்வரம், வேதம்.

5 - அகிற்கூட்டு, அக்கினி, அங்கம், அரசர்க்குக்குழு, அரசர்க் குறுதிச்சுற்றம், அவத்தை, அன்னுவய விலக்கணம், இலக்கணம், இலிங்கம், ஈச்சுரன் முகம், உரையிலக்கணம், உலோகம், எழுத்துத்தானம், ஐம்புல நுகர்ச்சியினிறப்பன, கருமேந்திரியம், கன்னிகை, குரவர், குற்றம், கேள்வி, கைத்தொழில், கோசம், கௌடம், கௌவியம், சத்தம், சத்தி, சயனம், சிவதத்துவம், சூதகம், ஞானேந்திரியம், தந்தையர், தரு, தாயர், தாளம், திணை, திரவிடம், திரவியம், திருமாலாயுதம், துரககதி, தேவர், பஞ்சமூலம், பட்சி, பாதகம், பால், பால், புலன், பூதம், பொறி, மன்மதன்கணை, மாயை, யாகம், வண்ணம், வாசம், விரை, வினா.

6 - அரசியல், அரசியல், ஆதாரம், ஈச்சுரன் முக்கியகுணம், உட்பகை, உவப்பு, கருமபூமிக் குரிமை, கருவுளமைப்பு, காலம், சக்கரவர்த்திகள், சமயம், சாத்திரம், சுப்பிரமணியர் பிரதானத் தலம், சுவை, தானை, தொழில், தொழில், நாட்டமைதி, பருவ காலம், பொழுது, போக பூமி, விகாரம், வேதாங்கம்.

7 - இசை, உலோகம், கடல், கடைப்படுதானம், சிரஞ்சீவியர், சுரம், தாது, தாளம், தீவு, நதி, நரகம், நரகவட்டம், நரம்பு, நாட்டுக்குற்றம், பருவம், பாதகம், பாலை, பிறப்பு, புண்ணியம், புரி, பெரியோரியல்பு, மண்டலம், மருத்துக்கள், மலை, மாதர்கள், முனிவர், மேகம், வாரம், வித்தியாதத்துவம்.

8 - அங்கயோகம், அரசர்க்குத் துணைவர், அளவை, அறத்

துறுப்பு, ஈச்சுரன் குணம், ஊறு, எச்சம், ஐச்சுவரியம், கணம், கணிதம், குற்றம், சித்தி, சுபம், தயாவிருத்தி, திக்கு, திக்குபாலகர், திக்குயானைகள், நாகம், நாட்டுக் குற்றம், போகம், மங்கலம், மணம், மூர்த்தம், மெய்ப்பரிசம், வகுக்கள், வணிகர் குணம், வெற்றி.

9 - இரதம், கண்டம், கிரகம், சித்தர், தாரணை, தாளம், புண்ணியம், மணி, வாயில், வானோர்கணம்.

10 - அங்கம், சிற்பத்தொழிற் குறுப்பு, சேனைத்தொகை, தசாங்கம் தாளப்பிரமாணம், திக்கு, திருமாலவதாரம் தீக்குணம் துவர், நற்குணம், நாடி, மகளிரான்மலர் மரம், மூலம், வாயு, வேளாண்மை மாந்தரியல்பு

11 - உருத்திரர், கரணம், நதி

12 - இராசி, உயிர்வேதனை, சூரியர், மாதம்

13 - தமிழ்நாடு

14 - உலகம், தயாவிருத்தி, முகம், வித்தைகள்

15 - திதி, திருமாலவதாரம்

16 - உபசாரம், சைவம், பேறு

18 - கணம், தருமநூல், பாடை, புராணம், யாக்கைக்குறுகுற்றம்

20 - முத்துச்சனிப்பு

21 - அரசச்சின்னம், யாகம், வள்ளல்

22 - மங்கலச்சொல்

27 - நட்சத்திரம் யோகம்

28 - சிவாகமம்

31 - முனிவர்

32 - அறம், இராகம், உபநிடதம், சிற்பநூல்

33 - தேவர் வகை

35 - அலங்காரம்

56 - தேயம்

60 - வருடம்

64 - கலைஞானம்

96 - தத்துவம், பிரபந்தம்

மூன்றாவது

## தொகையகராதி

முற்றிற்று

நான்காவது

# தொடையகராதி

பார்முத லுலகெலாம் பணிந்தேத்தும்
பரமனைப் புகழ்ந்தடி தொடையாகச்
சார்முத லெழுத்தொழித் தொருங்கொன்றித்
தகுமருந் தொடைத்தலை யாகெதுகை
நேர்முத லாகுறில் பற்றியபின்
னெடிற்றொடர் தொடைப்பதந் தொடுத்திணக்குச்
சீர்முத லொன்றொழி சிறப்பெதுகை
செப்புதுந் தொடையக ராதியென்றே.

## குறிற்கீழெதுகை

### உ

உ - ஓரெழுத்து, சுட்டு (உ-ம்: உக்கொற்றன், உவன்)

கு - நான்கனுருபு (உ-ம். அறத்திற்குப்பொருள்), பூமி

து - ஓரெழுத்து, துவ்வென்னேவல்

### க

அகடம் - பொல்லாங்கு

சகடம் - உரோகணி, ஊர்க்குருவி, பண்டி, வட்டில்

### முகடு

விகடம் - வேறுபாடு

அகடு - உள், நடு, பொல்லாங்கு, வயிறு

சகடு - உரோகணி, சந்தேகம், பண்டி

தகடு - அடர்பு, இலை, ஐமைவடிவு

பகடு - ஆண்யானை, இடபம், எருமைக்கடா, ஓடம், தெப்பம், பெருமை, பொதியெருது

முகடு - சுவர்ப்புறத்து நீண்டவுத் திரம், மலையுச்சி

அகண்டம் - எல்லாம்
சிகண்டம் - மயிற்றோகை
அகண்டி - ஓர் வாச்சியம்
சிகண்டி - ஆமணக்கு, ஓர்பண், பேடு, மயில்
சகண்டை - முரசுவாச்சியம்
பகண்டை - சிவல்
இகத்தல் - கடத்தல், போதல்
உகத்தல் - உயர்தல்
முதத்தல் - மொள்ளல்
அகம் - இடம், உள், ஏழனுருபு (உ-ம்: பல்லாரகத்து), பள்ளம், பாவம், பூமி, மரப்பொது, மனம், மனை
இகம் - இப்பிறப்பு
உகம் - நாள், பாம்பு, பூமி, முடிவு
ககம் - அம்பு, பறவை
குகம் - மலைக்குகை
சகம் - ஓர் தேசம், சட்டை, பூமி, மார்கழி மாதம்
சுகம் - இன்பம், கிளி, தருமம், நன்மை, முலைக்கண்
தகம் - உட்டணம், எரித்தல்
நகம் - உகிர், பூமி, மரம், மலை
நிகம் - ஒளி
நுகம் - நுகத்தடி
பகம் - அவாவின்மை, ஈச்சுரத் தன்மை, சீர்த்தி, செல்வம், ஞானம், வீரியமாகியவறு குணம், கொக்கு, பெண்குறி
பிகம் - குயில்
மகம் - ஓர்நாள், யாகம்
முகம் - இடம், கழிமுகம், முகம்
யுகம் - இருபொருள், ஓர் காலத் தளவு, நுகத்தடி, பூமி
அகரம் - பார்ப்பனச்சேரி, மருத நிலத்தூர், முதலெழுத்து
இகரம் - ஒரெழுத்து, சந்தம்
ஒகரம் - ஒரெழுத்து, மயில்
சிகரம் - உயர்ச்சி, ஒரெழுத்து, தலை, திரை, மலை, மலையுச்சி, வட்டில், வீடு
தகரம் - ஈயம், ஒரெழுத்து, தகரம், மயிர்ச்சாந்து, வாசனைப் பண்டம்
திகரம் - இளைப்பு, ஒரெழுத்து
நகரம் - ஒரெழுத்து, மருத நிலத்தூர், மருதப்பதி
நிகரம் - ஒரெழுத்து, கூட்டம்
பகரம் - அலங்காரம், ஒரெழுத்து, சிறப்பு
மகரம் - ஓர் நிதானம், ஓரிராசி, ஒரெழுத்து, சுறாமீன், பூந்தாது, முதலை
தகர் - சுறா, செம்மறியாட்டுக் கடா, தகரென்னேவல், துரு வாட்டேறு, பராகம், பூமி, மேடவி ராசி, யானையினாண்
நகர் - நகரென்னேவல், மருத நிலத்தூர், வீடு
நிகர் - உவமை, ஒளி, நிகரென் னேவல்
புகர் - கபிலநிறம், குற்றம், சுக்கிரன், நிறம்
தகர்தல் - சிதைத்தல்
நுகர்தல் - அனுபவித்தல், புசித் தல், விழுங்கல்
பகர்தல் - சொல்லல், விற்றல்
அகலம் - மார்பு, விரிபு
சகலம் - எல்லாம்
நிகலம் - தோண்மேல்
விகலம் - குறைபாடு
அகலல் - பிரிதல், வியங்கோண் முற்று
இகலல் - பொருதல், வியங்கோண் முற்று
புகலல் - சொல்லல், வியங்கோண் முற்று
அகல் - அல்குல், தகழி, நீங்கென்னுமேவல்

இகல் - பகை, பொருதென்னேவல், போர், வலி
சகல் - கொசுகு
சிகல் - குறைதல், கெடுதல்
தொகல் - கூடல், வியங்கோண் முற்று
பகல் - ஒளி, சூரியன், நடு, நாள், நுகத்திலாணி, பகுத்தல், பிரிதல், பிளத்தல், மத்தியானம்
புகழ் - உடல், குதிர், சொல், தஞ்சம், புகலென்னேவல், வியங்கோண்முற்று, வெற்றி
மிகல் - மிகுதி, வியங்கோண்முற்று
அகழ் - அகழி, அகழென்னேவல்
திகழ் - ஒளி, திகழென்னேவல்
புகழ் - கீர்த்தி, புகழென்னெவல்
இகழ்ச்சி - ஈனம், நிந்தை, மறதி
திகழ்ச்சி - விளக்கம்
நிகழ்ச்சி - நிகழ்தல்
புகழ்ச்சி - துதி
அகழ்தல் - தோண்டல்
இகழ்தல் - நிந்தித்தல்
திகழ்தல் - விளங்கல்
நிகழ்தல் - ஒளிசெய்தல், நடத்தல்
புகழ்தல் - துதித்தல்
அகளம் - தாழி, மிடா
நிகளம் - கால்விலங்கு, சங்கிலி, யானைச்சங்கிலி
யுகளம் - இரண்டு
அகனம் - கனமில்லாதது
ககனம் - ஆகாயம், காடு, படை
தகனம் - சுடல்
அகாதம் - நிந்துபுனல், வஞ்சகம்
நிகாதம் - வஞ்சனை
விகாதம் - விரோதம்
அகாரி - கடவுள்
முகாரி - ஓரிராகம்
விகாரி - ஓராண்டு
அகி - இரும்பு, பாம்பு
சுகி - சுகியென்னேவல், தோழி
சிகி - கேது, தீ, மயில்
மகி - பூமி
உகிர் - நகம்
சுகிர் - உட்டுளை, சுகிரென்னேவல்
துகிர் - பவளம்
பகிர் - பகிரென்னேவல், பகுப்பு
வகிர் - வகிரென்னேவல், வழி, வார்
அகில் - ஓர்மரம்
செகில் - தோண்மேல்
துகில் - சீலை, விருதுக்கொடி
முகில் - மேகம்
சகுடம் - செம்பு
மகுடம் - முடி, முடியுறுப்பு
முகுடம் - முடி
தகுதி - அறிவு, உரிமை, ஒழுக்கம், குணம், பொறுமை, வினை முற்று
தொகுதி - கூட்டம், திரட்சி, வினைமுற்று
பகுதி - இயல்பு, குடியிறை, பகுத்தல், பகுபதத்தோருறுப்பு, படை
புகுதி - நுழைவாயில், வினைமுற்று
மிகுதி - அநேகம், திரட்சி, பூரிப்பு, பொலிவு, வினைமுற்று
விகுதி - பகுபதவுறுப்பினு ளொன்று, வேறுபடுத்தல்
இகுத்தல் - அழைத்தல், இரித்தல், ஈதல், எறிதல், குழைத்தல், கொல்லல், தாழ்த்தல், துடைத்தல், மறித்தல், வருந்துவித்தல், வீழ்த்தல்
உகுத்தல் - சிந்தல், சொரிதல்
செகுத்தல் - அழித்தல்
தொகுத்தல் - கூட்டல்
பகுத்தல் - ஈதல், தறித்தல், பங்கிடல், வெட்டல்
புகுத்தல் - புகவிடல்
மிகுத்தல் - மிகச்செயல்
வகுத்தல் - வகைப்படுத்தல்
தகுளம் - மகளிர் விளையாட்டு
தெகுளம் - நிறைதல், பெருகுதல்
வகுளம் - மகிழமரம்

